ஓம்.

"லோகோபகாரி" பத்திரிகையின் ஆசிரியராகிய

காலஞ்சென்ற

வி நடராஜ ஐயரவர்களால்

இயற்றப்பட்ட

# தத்துவ தரிசனி.

இப்புத்தகமானது

பாலர் பாலிகைகளுக்கு சமயநீதி, ஒழுக்கம், விவேகத்தை யபிவிர்த்தி செய்யத்தக்க பல விஷயங்க ளடங்கி யிருப்பதினால் பாடசாலைகளிலும் போதிக்க பாடமாக வைக்கப்பட்டது.

இஃது,

மதுரை. அப்பாயி நாயுடு F. T. S.

அவர்களால்

மூன்றம்பதிப்பு.

சென்னை, மெர்குரி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1913.



விலை அணு 10.

ஓம்.

# முகவுரை.

"தத்துவ தரிசனி" "ஞான தரிசனி" என்னு மிப்புத்தகங்கள் "லோகோபகாரி" யின் பத்திராதிபராகிய காலஞ்சென்ற ம-ள-ள-ஸ்ரீ, வி. நடராஜ ஐயர் அவர்களால் பிரசுரிக்கப்பட்டதை யான் 1907ஆம் பிப்ரவரி 24உயில் மறுபதிப்புகள் செய்துகொள்ள அதிகாரம்பெற்றுக்கொண்டேன். ஆயினும், எமக்குப்பலதொல்லைகளால் அச்சிட சாவதானமில்லாமல் 6-வருஷகாலமாக பிரசுரிக்காமலிருந்தேன். எமது புத்தகசாலைக்குவரும் பல பெரியோர் இப்புக்தகங்களை அச்சிட முயற்சிசெய்ததினால் தற்காலத்தில் அச்சிடலாயிற்று. இதில் முக்கியமில்லா சில கதைகளையெடுத்தும் முக்கிய பாகங்களைசேர்த்தும் "தத்துவதரிசனி"யில் கடைசியில் போக பாகத்தில் பல வீண் விஷயங்களை நீக்கியும் முதலில் ஜன ஐக்ய பாகத்தை நூதனமாகவும் விரிவாகவும்சேர்த்து அச்சிடலாயிற்று.

இப்படி நூதனமாக சில பாகங்களை சேர்த்ததால் இயற்றியவரின் கருத்துகளை நீக்கிவிடவேண்டிய அபிப்பிராயமல்ல, கஷ்டமான விஷயங்களை ஜனங்கள் தெரிந்துகொள்ளக்கூடாமலிருக்குமாதலால் சுலப வார்த்தைகளால் சிலவற்றை சேர்க்கப்பட்டது.

இதன்றி, எவ்விஷயத்திலும் இத் "தத்துவதரிசனி" "ஞான தரிசனி" யென்னும் புத்தகங்கள் வெகு சிறந்ததென்பது பிறருடைய சாக்ஷியின்றி அனுபோகத்திலேயே விளங்கும். இது

செந்தமிழ் நடையில் ஒரு அக்ஷரமேனும் பயனற்றதா யிராமல், அர்த்த புஷ்டியும் (பாமரர்கள் புத்தியிலும் படும்படியாக) நன்னடக்கை, லௌகிக யுக்தி, பாஷா ஞானம், ஈசுவர பக்தி ஆழ்ந்த யோசனை உண்டாக்கக் கூடியதாய் கல்வி கற்ற புருஷர்களும், ஸ்ரீகளும், சிறுவர்களும், சிறுமிகளும் இனிய மொழிகளாய் படித்து தமிழ் பாஷையில் தேறுவதற்கு ஏற்ற கருவியா யிருக்கிறது. அல்லாமலும், ஜாதி மத துவேஷணமின்றி சமரசஞான முண்டாக்கும். முன் பதிப்புகளின் விலை 0—12—0 அணாவாக இருந்ததை இந்த பதிப்பில் விலை 0—10—0 அணாவாக விலை குறைக்கப்பட்டது. தனவான்கள் இதை ஆதரிப்பார்களாகவும்.

இப்படிக்கு

மதுரை. அப்பாயிநாயுடு.

---

ஓம்:

பரப்பிரம்மணே நம:

# தத்துவ தரிசனி.

“கந்தனை நாடி வந்தனைபாடு” என்ற வாக்கியமே வெகு இன்பம். அவ்வாக்கியத்தில் உள்ளபடி அனுஷ்டிப்பது அதைவிட இன்பம். அவ்வாறு அனுஷ்டித்து பிறருக்கு போதிப்பது எல்லாவற்றிலும் இன்பம். ஆதலின் இப்புத்தகத்தை படிக்கும் எமது அருமை நேயர்களே! ஆரிய கனவான்களே!! நீங்கள் ஒவ்வொருவருந் தெய்வபக்தர்களாய் ஜொலித்து உங்கள் நண்பர்களெல்லோருக்கும் அவரது மகிமையைப் புலப்படுத்தி பக்திமார்க்கத்தை போதிப்பீர்களாக.

“ஸர்வம் பிரம்மமயம் ஜெகத்” இவ்வுலக முழுவதுமுள்ள எல்லா மதஸ்தர்களும் அவ்வாறே கூறுகின்றனர். கடவுள் இல்லாத இடமேது? ஆதலின் ஸகல மூர்த்திகளும் பரப்பிரம்மமென்பது பெறப்பட்டது. மேற்கூறிய காரணத்தால் சிவன் விஷ்ணு, சுப்ரமண்யம், விநாயகர், முதலிய இந்து மதஸ்தர்கள் தொழும் தெய்வங்களுங் கிறிஸ்துவர்கள் வணங்கும் கர்த்தரும், மகம்மதியர்கள் போற்றும் ஆண்டவனும், புத்தர்கள் வழுத்துந் தெய்வமும், பரப்பிரம்மமேயன்றி வேறல்ல. விவேகிகள் எந்த மதத்தையும், எந்த மூர்த்தியையும் தூஷிக்கமாட்டார்கள். எல்லா மதங்களும் ஞானிகளுக்கு சம்மதமே. அஞ்ஞானியா யிருக்க எவன் விரும்புவான்? ஆதலின் ஞானத்தை சம்பாதிப்பதில் நோக்கமுடைய கனவான்களெல்லோரும் மதச்சண்டைகளின்றி ஸகல மூர்த்திகளையும் பரப்பிரம்மமாய் பாவித்து வணங்குகின்றனர்.

“சிவனும் ஜீவனும் ஒன்று” என்பது அத்வைதிகளின் சித்தாந்தம் சிவன் என்பது பரப்பிரம்மம். ஜீவனும் அந்த பிரம்மமே ஆதலின் பாரமார்த்திக தசையில் சிவனும் ஜீவனும் ஒன்றென்று அத்வைதிகள் கூறுகின்றனர். அவ்விததசையை அடைவதற்கு பலமார்க்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளாவன:—கர்மம், பக்தி, ஞானமென்னும் மூன்றுமார்க்கங்களே. இம்மூன்றின் பலனும் முடிவிலொன்றென்பதை அடிக்கடி கூறியிருக்கிறோம். ஓர் ஊருக்கு பலவழிகள் இருப்பதுபோல் மோக்ஷத்தை அடைவதற்கு மேற்கூறிய மூன்று வழிகளிருக்கின்றன. கர்மத்தை ஈசுவர பிரீதியாக செய்து அதன் பயனைத்தான் வேண்டாமலிருப்பதாலும் பகவானையின்றி யாரிடமும் பிரீதியில்லா மம்முடிவில் எங்கும்

நிறைந்த பொருள் அவரே என்றுணர்ந்து எல்லாவற்றையும் அவராகபாவித்து பக்திசெய்தாலும் பிரம்மம் ஒன்றைத்தவிர ஜெகஜீவபரங்களெல்லாம் பொய்யென்றுணர்ந்து ஆத்மஞானத்தை அடைந்து முடிவில் அவ்வாத்மாவே எங்கும் வியாபித்திருக்கிறதென்றறிந்து தானே பிரம்மமென்பதை யுணரும் திவ்யஞானத்தை அடைவதாலும் முத்தியை அடையலாம். ஆகலின் புத்திமான்கள் இம்மூன்று மார்க்கங்களையும் படிப்படியாய் அனுசரித்து கடைத்தேறுகின்றனர்.

"சொர்க்கம் நரகம்" முதலிய வியவகாரங்களுண்டா வெனின் ஜெகஜீவ பரங்களுண்டென்று நம்புவோர்க்கு ஸ்வர்க்க நரகவியவஹாரங்களுண்டு. பிரம்மம் ஒன்றைத்தவிர மற்றப்பொருள்களில்லை என்று கூறும் பிரம்மஞானிகளுக்கு மேற்கூறிய ஸ்வர்க்க நரகங்களில்லை. இதனால் நாமறிவது யாதெனில் நாம் ஆத்மஞானத்தை அடையுமளவும் சாஸ்திரங்களில் விதித்திருக்கிற கர்மங்களைச் செய்தே தீரவேண்டு மென்பது. அவ்வாறு செய்யாவிட்டால் பாபம் உண்டாகி பல ஜென்மங்களெடுத்து அவஸ்தைப்படுவோமென்பதிற் கையமில்லை.

"எங்கு நிறைகின்ற பொருள்" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். பரம் பொருளாகிய பகவான் எங்கும் நிறைந்திருப்பதால் அவரை பரிபூரண ரென்கிறோம். இதை ஒப்புக்கொள்ளாத மதஸ்தர் யாருமில்லை. கடவுள் எங்கும் நிறைந்தவரெனின் எந்தவிடத்திலும் அவர்தானே யிருக்கவேண்டும். வேறொருவஸ்து இருக்க முடியாதன்றோ? மனிதனாகிய நாமிருக்கிறோமேயெனின் அது நியாயவிரோதம். அப்போது நாம் இருக்கிற இடத்தில் கடவுளில்லை. கடவுளுக்கு அபரிபூரண தோஷம் உண்டாகிறது.

ஜுரமுள்ளவன் வெந்நீர் சாப்பிடுகிறான். தேகஸௌக்கியமுள்ளவன் தண்ணீர் அருந்துகிறான். இவர்கள் ஒருவரை யொருவர் கண்டு பரிகாசஞ்செய்வது நியாயமன்று. அதுபோல் சிலர் கோயிலுக்குப்போய்க் கடவுளை வணங்குகின்றனர், சிலர் இருந்தவிடத்திலிருந்தே தியானிக்கின்றனர். ஒவ்வொருவருந் தத்தம் புத்திக்குத் தோன்றியவாறு கடவுளை ஆணாகவும், பெண்ணாகவும் பாவித்துப் போற்றுகின்றனர். இதில் இன்னது ஸரி, இன்னது ஸரியல்லவென்று நாம் எப்படி சொல்லலாம். ஆயினும் பொதுவான விதியொன்றுண்டு அதாவது அவரவர் இருக்கும் மதத்தின் ஸம்பிரதாயங்களைத் தவிர்ப்பது தவறு ஒவ்வொரு மதஸ்தருந் தத்தம் வேதத்திற் கூறியபடி அனுஸரிப்பதே முறைமை.

தலையணையுறைகளில் ஒன்றுசிவப்பாயும், ஒன்றுகருப்பாயும், ஒன்று வெள்ளையாயும் இருந்தாலும் எல்லாவற்றிலுமுள்ளபொருள் பஞ்சு ஒன்றே. அதுபோல் நிறத்திலும், குணத்திலும் வேறுபாடுடைய சகல மனிதர்களுக்குள்ளும்வஸிக்கும்ஆத்மா ஒன்றுதான்.

"ஞானமே பிரதானம்" மனிதர்களாய் பிறந்தவர்கள் ஞானத்தை சம்பாதிப்பதவசியம். அதைத் தேடாமல் கேவலம் பொருளைத் தேடுவதில் மட்டும் பிரயோஜனமில்லை. வராகம் மலத்தைத் தின்று தேகங்கொழுத்து சுயேச்சையாய் அலைகிறது. அதுபோல மனிதனும் வயிறார உண்டு களிக்கிறான். நாய்க்குக் கோபம் வருவதுபோல் மனிதனுக்குஞ் சீற்றமுண்டாகிறது. காக்கைகள் அன்னத்தை கண்டோடுவதுபோல் மனிதனுஞ் சோத்துக்காக ஓடுகிறான். துஷ்டபிராணியாகிய புலியைப்போல் மனிதனும் பிறரை வருத்துகிறான். நரியைப்போல் நரனுந் தந்திரசாலி. ஏறக்குறைய மிருகங்களுக்குள்ள குணங்களெல்லாம் மனிதர்களுக்கு மிருக்கின்றன. ஆகலின் மனிதன் மற்றபிராணிகளைவிட மேம்பாடுடையவன் என்பது எதனால் விளங்கிறது. பகுத்தறிவு என்னும் ஒன்றினால் மனிதன் மற்ற 3-பிராணிகளைவிட உயர்ந்தவனாகிறவன். பாபமின்னது புண்யமின்னது இதைச்செய்வது சாஸ்திர ஸம்மதம், இதைச்செய்வது தோஷமென்றறிந்து கட்டுப்பாட்டுக் கடங்கி நியாயநிலை தவறாதிருப்பவனே மனுஷன். தன்மனம்போனபடி பாபங்களைச் செய்து ஆசாரஹீனனாயிருப்பவன் ஓர் மிருகமேயாவன்.

"ஆனைவாயில்போன கரும்பு திரும்பிவருமா" என்று ஓர்பழமொழி உண்டு. அதுபோல் மிகுந்த தீக்குணமுண்டானால் முன்னிருந்த சொற்ப நற்குணங்கூட மறுபடி உண்டாகிறதில்லை. ஒருகுடம் பாலில் ஒருதுளி ஜலம் விழுந்தால் அந்ததுளி பாலின் குணத்தைப் பற்றுகிறது. ஒருகுடம் ஜலத்தில் ஒருதுளிபால் விழுந்தால் அந்த துளி ஜலத்தின் தன்மையை அடைகிறது. இது வஸ்துக்களுக்குள்ள ஸ்வபாவம். இதனாலன்றோ "சேரிட மறிந்து சேர்" என்று ஔவை கூறியிருக்கிறாள்.

உலகத்திலுள்ள காவிரி கங்கை, கோதாவிரி, கிருஷ்ணை முதலிய மகாநதிகளெல்லாம் ஸமுத்திரத்தில் வீழ்கின்றன. அவைகள் கடலுடன் கலக்கு முன்னே உட்கொள்ள யோக்கியமாயும் கலந்தபின் உப்பு ஜலமாகின்றன. அதுபோல் ஸம்ஸாரிகள் உலகத்திலிருக்கும்வரை இன்பங்களை அனுபவித்து ஸந்யாஸிகளான பின் ஸகல ஸுகங்களையும் மறக்கின்றனர். ஒருதரங் கடலிற்கடந்த நதி திரும்பி வராததுபோல சன்யாஸிகளுங் கிரகஸ்தா சிரமத்துக்குத் திரும்பி வருகிறதில்லை.

---

## சிறுவர்க்கான நீதி.

1. அதிகாலையில் எழுந்திருக்கவேண்டும்.

2. காலைமாலைகளில் கசர்த்துச் செய்யவேண்டும்.

3. படிப்பதற்குக் காலத்தை யேற்படுத்திக்கொண்டு அக்காலத்தில் சோம்பலின்றிப் படிக்கவேண்டும்.

4. வகுப்பில் எல்லாப் பாடங்களையும் கருத்தாய் வாசிக்கவேண்டும். ஏதேனும் ஒரு பாடத்தில் குறைவானால் அவன் ஆயுள்முற்றும் இன்னபாடத்தில் முட்டாள் என அழைக்கப்படுவான்

5 திருடுமுதலிய தீயகாரியங்களைச் செய்தல் கூடாது. செய்வானேல் அவன் பேருக்குமுன்னால் திருட்டு என்னும் சொல்லைச் சேர்த்து என்றும் அழைக்கப்படுவன். ராசு என்பவன் திருடுவானேல் அவன் அந்த பேருக்குமுன் திருட்டு என்னும்பேரைவைத்துத் திருட்டுராசு, திருட்டுராசு என அவனுயுள்முற்றும் பெரிய அந்தஸ்திலிருக்கினும் அழைக்கப்படுவன். சில உபாத்திமார், தம் சீடர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பேரை வைத்துக்கூப்பிடுவர் அது பிறகு பெரும்அனர்த்தத்திற்கிடமாம். ஓருரில் ஓருபாத்தியாயர் பல மாணக்கருக்கும் அவரவர்க்கியைந்த மாறுபேர்வைப்பார். அதன்படியே சேஷ்டையுள்ள ஏகாம்பரம் என்னும் ஒருவனுக்குக் "குரங்கு ஏகாம்பரம்" என்றழைத்து வந்தனர். அவ்வாறே மாணக்கரும் அழைப்பாராயினர். அவ்ஏகாம்பரம் பெரியவனாய்த் தக்க கௌரவம்பெற்றுப் பலபேருடன் பெரிய வர்த்தகஞ்செய்து கொண்டிருக்குங்கால் அவனிடம் வர்த்தகஞ்செய்யு நிமித்தம் தேடிக்கொண்டுவந்த ஒருவன் "குரங்கு ஏகாம்பரம்" கடையெதுவென வரிசையாக விசாரித்து, கடைசியில் ஷை ஏகாம்பரம் கடைக்கே வந்து பலபெரிய மனிதருடன் வியாபாரம் புரிந்து கொண்டிருக்கும் ஏகாம்பரத்தையே நோக்கி:ஐயா, குரங்குஏகாம்பரம் கடைஎது? குரங்கு ஏகாம்பரம் என்பார் யார்? எனக்கேட்டபோது, ஏகாம்பரத்துக்குக் கோபமூண்டு அவனை அடித்தனன். பின்னர்ப் பெருமனர்த்தத்திற் கிடமாயிற்று ஆதலின் சிறுவர் என்றும்கெட்டநடவடிக்கைகளிற் பழகப்படாது. (பெரியவர் ஈனமானவேறு பெயர் வைத்து அழைப்பதும் தப்பு.)

6. சுத்தமான நீரில் நாடோறும் ஸ்நானஞ்செய்தல்வேண்டும்.

7. அழுக்கற்ற சாதாரண வஸ்திரம் தரித்துக்கொள்ளவேண்டும். பட்டு சரிகை முதலிய விலை அதிகமுள்ள ஆடைகளைத் தரிக்கப்படாது. படிக்கும் பிள்ளைகள் வித்தையிலேயே புத்தியைச்செலுத்தவேண்டுமன்றி சொகுசான வஸ்திரம் தரித்து வேடிக்கையாயுலாவப்படாது.

8 ஆபரணங்கள்தரித்துக்கொண்டு அதன் அழகைப்பார்ப்பதிலேயே புத்தியைச்செலுத்தும் பிள்ளைகட்குப் படிப்பு மட்டுப்படும்.

9 சத்துவகுணமான ஆகாரத்தைப் புசிக்கவேண்டும். புத்தியை விபரீதப்படுத்தும் தீயவுணகளைப் புசித்தால் சோம்பல் நித்திரைமயக்க முதலியனவுண்டாம் உண்டாமாயின் கல்வியிற் பிரியமட்டுப்படும். பணக்காரர் வீட்டுப்பிள்ளைகளுக்கு வித்தையில்லாமற்போதலுக் கிஃதேகாரணமாம்.

10. துன்மார்க்கரோடும் கல்வியிற் பிரியமற்றவரோடும் சிநேகிக்கலாகாது.

11. சிறுவர், கல்வி விஷயமாய் ஆங்காங்கு செய்யும் உபந்நியாசங்களுக்குச்சென்று அதை யுய்த்துக்கேட்டு அதைப்பற்றித் தம் மினத்தாரோடு பேசவேண்டும்.

12. சிறுவர் பலரும் சேர்ந்து சங்கங்கள் கூடிக் கல்வி விஷயமான தர்க்கங்கள் செய்யவேண்டும்.

13. வாசிக்கும் பிள்ளைகள் தேர் திருவிழாவுக்கும் கலியாணத்திற்கும், விருந்திற்கும், இன்னுமிவற்றை யொத்த விசேஷங்கட்கும் போகப்படாது. இப்படிப்பட்ட விசேஷங்களுக்குப்போவதில் வித்தைக்குக் கெடுதி யுண்டாகின்றது. ஷை விசேஷங்கட்குப்பெரியோரே போதல்வேண்டும்.

14. பசி நன்றாயெடுத்தாலன்றிச் சாப்பிடப்படாது. சிற்றுண்டிதின்னக்கூடாது இது நோயைத்தரும். படிக்குஞ்சிறுவர் அடிக்கடிநோயாளிகளாய்விடுவதாலுல் கல்விதுறையும். பரீக்ஷையில்தேறார். தம்மையொத்த சிறுவர் பரீக்ஷையில்தேற, தாம் அபஜெயப்படுவரேல் அது அவமானம். பரீக்ஷையில் தேறாததுகொண்டு தற்கொலை புரிந்தவர் பலரென அப்போதப்போது பத்திரிகைகளாலறியா நின்றோம்.

15. இளமையிலேயே உண்மை, பொறுமை, அன்பு, அடக்கம், இரக்கம், பயனில சொல்லாமை முதலிய சற்குணங்களில் பழகவேண்டும்.

16. தீயசொற்கள் பேசாமல் இருக்க, தம்மைத்தாம் எப்போதும் பாதுகாத்து வரவேண்டும். சில தாய் தந்தைகள் கெட்டசொற்கள் பேசுகின்றமையால் அவர்கள் மக்களும் அவ்வாறே பேசுகின்றார்கள். மாதா பிதாக்கள் கெட்ட சொற்கள் பேசாமலிருப்பார்களானால் அவர்கள் பிள்ளைகளுக்கும் அந்த வாசனையேறி, கெட்ட சொற்கள் பேசாமலிருப்பார்கள்.

---

குங்குமஞ் சுமந்த கழுதைபோல்" என்றொரு பழமொழியுண்டு, அதன்படி சிலர் ஸகல வித்தைகளுங் கற்று வாச்சாதுரியம் பொருந்திப் பலர் முன்னிலையிற் பிரஸங்கிக்குஞ் சக்தி அடைந்தும் அவைகளால் தாம் மனமடங்கிப் பரம்பொருளைச் சிந்தியாமல் இதரர்களுக்குமட்டும் உபதேசம் செய்கிறார்கள். இரண்டு சாக்குகள் நிறைய குங்குமத்தைத் தன் முதுகின்மேற் சுமந்து திரியுங் கர்த்தபம் அதன் வாஸனையை அறிகிறதில்லை. அதுபோல் சில வித்வான்கள் தாங்கள் படித்த நீதி வாக்கியங்களைத் தங்கள் விஷயத்தில் பிரயோஜனப்படுத்துகிறதில்லை.

---

ஓர் மீனைக் கொத்திக்கொண்டு ஆகாயத்திற் பறந்த பருந்தை மற்றப் பருந்துகளெல்லாந் துரத்திக்கொண்டு போயின. முதற் பருந்து எங்கே பறந்தாலும் மற்றவைகளும் அதைப் பின்றொடர்ந்தன. அதைக்கண்டு வருத்தமுற்று மூக்கிலுள்ள மீனை அப்பருந்து நழுவவிட்டு தான் சுகமாக ஓர் மரத்திலுட்கார்ந்துகொண்டது

நழுவியமீனை மற்றொரு பருந்து தட்டிக்கொண்டு போயிற்று. மற்றப்பருந்துகளெல்லாம் அதைப் பின்றொடர்ந்தன. அதுபோல் இவ்வுலகத்தில் பருந்தின் சுபாவமுடைய சிலர் தம்மினத்தாராயினுங்கவனியாமல் ஸதா வருத்திக்கொண்டே யிருக்கின்றனர்.

முன்னொரு ஸமயம் பார்வதியானவள் பரமேசுவரனை நோக்கி "ஸ்வாமி" உலகத்தில் அனேக மதங்களுண்டா யிருக்கின்றனர். ஆதலின் எந்த மதத்தை விவேகிகள் அனுஸரிக்கவேண்டும்?'' என்றாள். அதற்குப் பரமசிவன் "ஹே நங்காய்! எவன் எந்த மதத்தை யனுஸரித்தாலுந் தோஷமில்லை. அவனுக்கு என்னிடம் பக்திமட்டுமிருந்தாற்போதும்" என்றார். ஆதலின் வைஷ்ணவர்களானாலுஞ், சைவர்களானாலும், மகம்மதியர்களானாலும், வேறு எந்தமதஸ்தர்களானாலுந்தெய்வபக்தியுடையவர்களே பெரியோர்களெனப்படுவர்.

"மழைஜலம் சுத்தமானதே." ஆயினும் அது விழுங் கூரையுங் குழாயுங், கால்வாயும் அசுத்தமாயிருந்தால் அவைகளின் வழியே ஓடிவரும் மழைநீரும் அசுத்தமாகவேயிருக்கும். அதுபோல் உலகத்திலுள்ள மதங்களெல்லாம் ஆதியிற் சுத்தமாகவே யிருந்தன. பிற்பாடு அவற்றை யனுஸரித்த மனிதர்கள் அசுத்தர்களாய்ப் போனதால் மதங்களுக்கும் ஒருவித குறைவு உண்டாயிற்றும்.

---

"சிவதரிசனம் பவவிமோசனம்" என்று பெரியோர் கூறுகின்றனர். சிலர் சிவனைப் பஜித்தால் இவ்வுலக இன்பமும் விஷ்ணுவைப்பஜித்தால் அவ்வுலக இன்பமுங் கிடைக்குமென்று சொல்கிறார்கள். சிவன் பரப்பிரம்மமாதலால் சிவனைப் பஜிப்பவர்கள் மோக்ஷத்தையடைவார்கள் என்பதிற் சந்தேகமில்லை. வியவகாரதசையில் பிரம, விஷ்ணு, ருத்திரர்கள் என மூன்று மூர்த்திகள் உண்டென்பதை யொப்புக்கொள்வோர் சிவனை ருத்திரனென்று சொல்வது பிசகு. சிவன் வேறு ருத்திரன் வேறு என்பதை அவர்கள் நன்றாயுணரவேண்டும், ஆகிலும் பல கிரந்தங்களிலும் புராணங்களிலும் ருத்திரன் என்று சொல்லவேண்டிய விடத்தில் சிவன் என்று சொல்லப்பட்டிருக்கிறதால் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி சிவன் என்னும் பதம் துரியப்பொருளைக் குறிப்பதாகவும், ருத்திரனைக் குறிப்பதாகவும் விவேகிகள் அறியக்கடவர்.

ஈசுவரனாகிய ருத்திரன் ஆதிசங்கரராக அவதரித்தார் அந்த மகானால் அத்வைத மதத்தின் உண்மை விளங்கிற்று. ஆதலின் அத்வைத கிரந்தங்களைப்படிக்க விரும்புவோர் ஆதிசங்கரஸ்தோத்திரம் செய்வதவசியம் சங்கரர் என்னும் பதத்துக்கு சுகத்தைக் கொடுப்பவ ரென்றருத்தம். ஜகத் குருவாகிய சங்கராசாரிய ஸ்வாமிகள் பகவத்கீதை உபநிஷத் முதலிய கிரந்தங்களுக்குச் செய்திருக்கும் பாஷியங்களைப் படிப்பவர்கள் நித்யமான சுகத்தையடைந்து ஜீவன் முக்தர்களாகின்றனர்.

---

"பேர் கங்காபவானி தாகத்துக்கு நீரில்லை" என்ற ஓர் பழமொழியுண்டு. அதுபோல் சிலர் நண்பர்கள் போல் நடித்து பொலலாங்கை விளைவிக்கிறார்கள். மித்திரர்களைப் போல் அபிநயித்து சத்துருக்களாயிருக்கின்றனர். இவ்வாறு நடிப்பதற்கும் இருப்பதற்கும் நியாயமுண்டு, எப்படியெனில் உலகில் பாம்புக்கு போகியென்று பேர். அதைக்கண்ட விடத்தில் ஜனங்கள் தடியாலடித்துக் கொல்லுகின்றனர். இப்படி அடிபடும் பாம்புக்குப் போகியென்னும் பெயர் உண்டாயிருக்கிறது. ஆகாசத்துக்கு அம்பரம் என்று ஓர் பிரதி நாமமுண்டு. அம்பரம் என்றால் மறைத்துக் கொண்டிருப்பது என்று பொருள்படும். ஆகாசம் வெட்ட வெளியாயிருக்கும் போது அம்பரம் என்னும் பெயரை அடைந்திருக்கிறது. அதனிடம் மறைக்குந்தன்மை சிறிதேனுமில்லையே. தவளைக்கு ஹரி என்று பேர்; ஹரி என்றால் பாபத்தைப் போக்கடிக்கிறவர் என்றருத்தம். தவளைக்கு அந்தப்பெயர் வந்ததற்கென்ன நியாயம்? இன்னுமோர் உதாரணங் கொடுக்கலாம். காக்கைக்கு துவிஜம் என்று நாமம். காக்கையோ பக்ஷிகளுள் சண்டாள ஜாதி, அதற்குத் துவிஜம் என்ற பெயர் தகுமா? சுக்காங்கல்லை வாயிற்போட்டால் வெந்துவிடும். அதற்கு சக்கரை யென்று ஸம்ஸ்கிருதத்தில் பிரதிநாமம். சக்கரைக்குள்ள தித்திப்பு அதற்கில்லாதிருக்க அப்பெயர் ஏன் வந்தது? மேற்கூறிய நியாயங்களால் வெளிவேஷத்தையும் பெயரையும்கண்டு குணத்தைக்கிரகிக்க முடியாதென்றுஞ் சிலநாள் பழகிய பிறகே ஒரு பொருளின் உண்மையான தன்மையை அறியவேண்டுமென்றும் ஏற்படுகிறது.

"குணத்தை மாற்றக்குருவில்லை" துஷ்டனாயிருப்பவன் துறவியைப்போல் வேஷம் போடலாம். துற்குணத்தை மாற்ற ஒருநாளும் முடியாது.

ஸம்ஸாரி ஸன்யாஸியைப்போல் காவிவேஷ்டி தரிக்கலாம். தண்டத்தையுங் கமண்டலத்தையுங் கொள்ளலாம். பிள்ளை பெண் சாதிகளின் மேலுள்ள பிரீதிபோகாது. விஷத்தைப் பொற்பாத்திரத்தில் வைக்கலாம், விஷத்தின் தன்மை மாறாது. துவிதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் முதலிய மூன்று மதங்களும் எனக்கு ப்பிரீதிதானென்று சொல்லலாம். கேட்பவர்களை நம்பும்படியும் செய்யலாம். ஸமயம் வாய்த்தால் ஒன்றை உயர்வாகக்கூறி மற்றவிரண்டையும் இழிவாகக்கூறும் தன்மை யுண்டாய் விடுகிறது. இப்படி உலகில் உள்ளேயொன்றும் புறம்பே யொன்றுமாயிருக்கிறதே. அதை மாற்றமுடியாதோவெனின் முடியாதென்றே கூறுகிறோம். இதற்கொரு கதையுண்டு முற்காலத்தில் மிருகங்களெல்லாம் பேசும் திறமையைப் படைத்திருந்தன. ஒரு பெண்பூனை மிகுந்த அழகுவாய்ந்த ஓர் மனிதனைக்கண்டு அவனைக் கூட வெண்ணிக் கடவுளைநோக்கித் தவஞ்செய்தது. பகவான் பிரத்யக்ஷமாகி 'உனக்கென்ன வரம்வேண்டும்?' என்றார். பூனை தான் 16-வயதுள்ள பாலகுமாரியாக வேண்டுமென்றும் மகா ஸௌந்தரியவதியாய்

இருக்கவேண்டுமென்றுங் கோரியது. அவ்வாறே சுவாமிவரமருளி மறைந்தார் பிறகு, பூனை அழகிய பெண்ணாகித் தான் காதல்கொண்ட மனிதனுக்கெதிரில் வந்து நின்றது. அம்மனுஷ்யன் பூனைப் பெண்ணைக்கண்டு மோகத்திலாழ்ந்து அவளை விவாகஞ் செய்து கொண்டான். இவ்வாறிருக்கையில் ஒருநாள் பள்ளியறையில் திவ்யமான ஹம்ஸதூளிகா மஞ்சத்தில் இருவரும் படுத்துறங்குகையில் எங்கிருந்தோ ஓர் எலி அவ்வறைக்குள் நுழைந்தது. அதைக் கண்டவுடன் பூனைப்பெண் பழயபடி பூனையுருவெடுத்து அவ்வெலியை வெடுக்கென்று பிடித்து பக்ஷித்தது. இதற்குள்ளாகப் புருஷனுக்கு விழிப்புண்டாகி தன் பக்கத்தில் தடவிப்பார்த்தான். பெண்சாதியைக் காணவில்லை. உடனே கீழே பார்த்தான். ஓர் பூனை எலியைப் பக்ஷித்துக் கொண்டிருந்தது. தடியால் அதை ஓட்டவெத் தனிக்கையில் அப்பூனை மறுபடியும் அழகிய பெண்ணுருவெடுத்து கணவன் பக்கத்தில் வந்துட்கார்ந்தது. உடனே அம்மனிதன் எழுந்து 'ஏ பூனைப்பெண்ணே உன் உறவு போதும். எலிதின்னும் உன் சுபாவத்தை இனி நீ மாற்றமுடியாது உன்னை விவாகஞ்செய்துகொண்டது என்பேரில் பிசகு' என்று படுக்கையை விட்டோடிப்போனான். ஆதலின் குணத்தை மாற்ற குருவில்லை யென்பது நிச்சயமாகிறது.

---

"தென்னமரத்தில் தேள்கொட்ட குட்டிச்சுவரில் நெறி கட்டியது" போல், பொருளைத் தேடுபவர் ஒருவரும் அதை யனுவிப்பவர் வேறுமாயிருக்கிறார்கள். வழியைக் கண்டுபிடிப்பவன் ஒருவன். அதில் நடப்பவன் மற்றொருவன். வீட்டைக் கட்டுவோன் ஒருவன், அதில் வாழ்பவன் வேறொருவன். இவ்வாறிருப்பானேன் என்றால் இம்மாதிரி பகவானே செய்திருக்கிறார். திரிபுர தகனஞ்செய்த காலத்துங் காமனை யெரித்தபோதும் பரமசிவன் தமது நெற்றிக்கண்ணைத் திறந்தார். அதில் பாதிக்கண் பார்வதிக்குச்சொந்தம். அவ்வாறிருக்க இவர் ஒருவரே புராரி, காமாரி யென்னும் பெயர்களைப் பெற்றார். இதுதான் போகட்டுமென்றாலோ, மார்க்கண்டேயனை இரக்ஷிக்கவேண்டி எமனை இடதுகாலால் உதைத்தார். பரமசிவனது இடப்பக்கம் முழுவதும் பார்வதிக்குச்சொந்தம். ஆதலின் இடதுகால் அம்பாளுடையதா யிருக்க, காலாந்தகன் என்றபெயரைத் தாமே வைத்துக்கொண்டார். பார்வதிக்கு அவ்வித பெயர் இல்லை. இதென்ன அநீதம்! இப்படியும் பக்ஷபாதகஞ்செய்யலாமாவென்று ஓர் பக்தர் கூறுகிறார். இந்த நியாயத்தை யனுசரித்துத் தான் உலகத்தில் ஒருவர் தேடியதை மற்றொருவர் அனுபவிக்கிறாரோ?

"விதிவலிது" என்று ஓர் பழமொழியுண்டு. அதற்கொரு கதை சொல்லுகிறோம். முற்காலத்தில் நளினவர்மாவென்னும்ஓரரசனிருந்தான். அவனுக்கு ஒருபுத்திரனுண்டு. அப்புத்திரனது ஜாதகத்தைப்பார்க்க மலையாளத்திலிருந்து ஓர் ஜோசியரை வரவழைத்தான்.

அவர் "ஸ்வாமி உமது குமாரனுடைய ஜாதகத்தைப் பார்த்தேன் அவனுக்கு ஸிம்ஹத்தால் மரணம் சம்பவிக்கும்" என்றார். அரசன் தன்னுடைய ஜாதகத்தைக்காட்டவே. "உமக்கு சோழியனால் கெடுதி நேரிடும்" என்றார். உடனே மன்னன் தன் குமாரனை வெளியே விடாமல் அரண்மனைக்குள்ளாகவே வைத்துக் கொண்டிருக்கையில் அப்பிள்ளை "ஐயோ வேட்டையாட வகையின்றிப் போயிற்றே" யென்று அங்குள்ள சிங்க படத்தைப்பார்த்து உன்னாலன்றோ எனக்கு இக்கதி வந்தது என்று ஒரு கொம்பையெடுத்து அதையடிக்கப்போனான். அதிலிருந்த ஓர் சிலாம்பு அவன் கையிற் குத்திக் காயமுண்டாகி இரத்தம் வடிந்தது. பிறகு புரையோடி உயிருக்கு ஆனியுண்டாயிற்று அரசன் தன் மகனுக்குச் சொன்ன ஜோஸ்யம் பலித்ததென்று தனக்குச் சோழியர்களால் கெடுதலுண்டாகாதிருக்குமாறு அந்த ஜாதியைச் சேர்ந்த எல்லோரையுந் தன் ராஜ்யத்தினின்று துரத்தினான். இவ்வாறிருக்கையில் சோழியனைப்போல் ஒருபட மிருக்கக்கண்டு ஓகோ நீயா என்னை உபத்திரவஞ் செய்யப்போகிறாயென்று அதைத் தொட்டான். அதில் ஒட்டிக்கொண்டிருந்த ஓர்தேள் அவனைக் கொட்டிற்று. வருத்த மடைந்தான். அதுமுதல் சித்திரத்திலுஞ் சோழியனை வைக்கப்படாதென்னும் பழமொழி யுண்டாயிற்று. மேற்கூறிய கதைகளால் விதியை வெல்லுதலரிதென் றறிகிறோம்.

---

"ஈசனே நேசி" இதிலுள்ள சுகத்தைத் தேடுங்கள். ஸௌகரியத்தை நாடுங்கள். ஈசனையின்றி வேறொரு நேசனுண்டானால் அவனால் விளையக்கூடிய விபத்துகள் அனந்தம். பிள்ளையினிடம் பிரியமாயிருக்கும் பெற்றோர் அதன் பிரிவால் துன்புறுகின்றனர். மான்குட்டியிடம் பிரீதி வைத்த பரதர் மறுஜென்மத்தில் மானாகப் பிறந்தார். ஈசனிடம் விசுவாஸங்கொண்டு அவரைத் தியானஞ் செய்கிறவர்கள் ஜீவன் முக்தர்களாகின்றனர். ஆதலின் நாம் லயத்தையடையும் வஸ்துக்களிடம் ஆசைவைக்காமல் அழிவில்லாத தயாபரராகிய ஸர்வேசுவரனிடம் விசுவாஸங்கொண்டு ஸதாகாலமும் அவரைத் தியானிக்கக்கடவோம்.

"பாலையும் நீரையும் பிரிப்பது" அன்னப்பக்ஷிகளின் சுபாவம். அதுபோல் புத்திமான் பல நூல்களிருப்பினுஞ் ஞான நூல்களை மட்டுங்கற்று மற்றவைகளைத்தள்ளிவிடுகிறான். மூடனோ எல்லா நூல்களையும் படித்து வீண்காலம் போக்குகிறான். இதற்கொரு கதையுண்டு. சில வருஷங்களுக்கு முன் ஆதியூர் என்னுங் கிராமத்தில் சேஷம்மாளென்னும் ஓர் கிழவியிருந்தாள் இவளுக்கு இராமன், கிருஷ்ணன் என்ற இரண்டு பிள்ளைகளிருந்தனர். அவர்களிருவரும் விடியற்காலமே எழுந்து கழனிக்குச்சென்று ஏருழுதல், பரம்படித்தல், விதை தெளித்தல், ஜலம்பாய்ச்சல் முதலிய பயிர்த்தொழிற் காரியங்களைச்செய்து இடையே எருமை மாடுகளை மேய்த்து அந்தி வேளையில் வீட்டுக்கு வருகிற வழக்கம் ஆதலின் சே

ஷம்மாள் பாகற் போசனத்தை இரண்டு பாத்திரங்களில் நிரப்பி யாரேனும் ஓர் வேலைக்காரனிடங் கொடுத்தனுப்புவாள். இராமனுங் கிருஷ்ணனும் வயிறார உண்ணுவார்கள். இவ்வாறிருக்கையில் ஓர் நாள் வைகுண்ட ஏகாதசி வந்தது.

“கடுகு சிறுத்தாலுங் காரம்போகுமா” என்றபடி இராமனுங் கிருஷ்ணனும் எப்போதுங் கழனியில் வேலைசெய்தாலும் முன்னோர்கள் அனுசரித்த ஏகாதசி விரதத்தை மறந்து போவார்களா? மறவார்களன்றோ. ஆதலின் வைகுண்ட ஏகாதசியன்று காலைவேளையில் பழயது உண்ணாமல் வயலுக்கு வந்தனர். பகல் பதினைந்து நாழிகையாயிற்று. சேஷம்மாள் ‘ஐயோ, பிள்ளைகள் பசியால் வருந்துவார்களே’ யென்று இருபது அடைகள் சுட்டி (ஒவ்வொரு அடையும் ஒரு அங்குலப் பருமனிருக்கும்) நடுவில் அடையைப்போலவே சக்கிராகாரமாயுள்ள ஓர் விராட்டியை வைத்து ஆள்வசம் அனுப்பினாள். அதை வைத்ததற்குக்காரணமென்ன? அதன் மேலே அடுக்கி வைத்துள்ள 10-அடைகள் ராமனுக்குங் கீழேயிருக்கும் 10-அடைகள் கிருஷ்ணனுக்குங் கணக்காகட்டுமென்பது அவள் கருத்து. இராமன் அடைகள் வந்தவுடன் ஆசையோடு வாங்கி ஒவ்வொன்றாய்த் தின்னாமல் இரண்டு மூன்று அடைகளை ஒன்றாகப்பிட்டு வாயிற்போட்டுக்கொண்டான். இவ்விதமாக இருபது அடையும் ஒரு நாழிகைக்குள் தின்று ஒரு செம்பு தீர்த்தத்தையும் மடமட வென்று உட்கொண்டான். சில நாழிகைக்கெல்லாங் கிருஷ்ணன் வந்து சேர்ந்தான். அம்மா அனுப்பிய அடை எங்கே யென்றான், “ராமன் எனக்கு அனுப்பியஅடைகளை நான் தின்றுவிட்டேன். உனக்கு இனிமேல் வரும் போலும்” என்றான். கிருஷ்ணன் 20-நாழிகைவரையுங் காத்திருந்தான். அடை வரவில்லை. பசி வயிற்றைக் கிள்ளியது. ஓடினான் வீட்டுக்கு. அம்மா எனக்கெங்கே அடை என்றான். சேஷி ‘அப்பா உனக்கும் உன் தமையனுக்குஞ் சேர்த்து 20-அடைகளனுப்பி நடுவில் அடையாளமாக ஓர் எரிமுட்டையைக் கூட வைத்திருந்தேனே. ஒரு வேளை வேலைக்காரன் தின்றுவிட்டானோ? வா போவோம் வயலுக்கு, என்று இருவரும் இராமனிடம் வந்து சேர்ந்தார்கள். இராமா எத்தனை அடைகள் தின்றாயென அவன் இவ்வளவென்று கணக்கு பார்க்கவில்லை, நீ அனுப்பிய அடைகளை எறியாமல் எல்லாவற்றையுந் தின்றுவிட்டேன் என்றான். சேஷி ‘அடை நடுவில் ஒருஎரிமுட்டையை அடையாளமாக வைத்திருந்தேனே’ யென, இராமன் அப்படியா அம்மா! அதுதானோ எரிமுட்டை, வாசனைவந்தது, அடைகாந்திப் போயிருக்கு மென்றெண்ணினேன், என்றான். இதுபோல் மூடன் ஸாரமில்லாத நூல்களையும் விஷயங்களையுங் கற்று காலத்தை வீணாக்குகிறான்.

---

“மோக்ஷமென்பதுயாது” வைகுண்டம் போவதுங் கைலாஸஞ் செல்வதும் மோக்ஷமென்று அத்வைதிகள் கூறவில்லை, பிரம்ம

மொன்றே உண்மை, தானே பிரம்மமென்று அறிவதுதான் மோக்ஷமெனப்படுகிறது. ஒவ்வொருவனுந் தன்னைப் பிரம்மமென்று சொல்லிக்கொள்வதால் மோக்ஷத்தை யடைந்து விடுகிறானா? இல்லை. அவன் முக்தனல்ல. எவன் தன்தேகத்தையும் இவ்வுலகத்திலுள்ள மற்றப் பொருள்களையும் மும்மூர்த்திகளையும் பிரம்மமென்று அறிகிறானோ, எப்போதும் அம்மாதிரியே காணுகிறானோ, எவன் தனனை வேறாகவுங் கடவுளை வேறாகவும் நினைக்குந் தன்மையை உண்மையில் இழந்து எங்குந் தானே நிறைந்திருக்கிறதாகவுந் தன்னையின்றி வேறு பொருளில்லை யென்றுந் தானே பிரம்மமென்றுந் தெளிகிறானோ அவனே ஜீவன்முக்தன். அவனே மோக்ஷத்தை யடைந்தவன். அவனுக்கு ஜனனமரண துக்கங்களில்லை. இதுதான் அத்வைதிகளின்கொள்கைப்படி மோக்ஷமென்பதின் கருத்து.

சற்கருமங்களைச் செய்து பாவத்தை யொழித்து பகவானை யடைந்து சதா அவர் சன்னிதானத்தில் சேவை செய்துகொண்டு பகவதானந்தத்தையடைவதே துவைதிகள் கூறும் முக்தி. இம்முக்தி ஓர்வித பதவி முக்தியேயன்றி வேறல்ல. திரிமூர்த்திகளுஞ் சுத்தமாயையில் பிரதிபிம்பித்த பிரம்மத்தைத்தவிர வேறல்லாததாலும் மாயாரகிதமாய் நின்றபோது திரிமூர்த்திகளும் அவர்கள் லோகங்களும் இல்லாமற்போய் பிரம்மமொன்றே மிஞ்சுவதாலுந் திரிமூர்த்திகளது லோகத்தில் அடைந்த பதவிமுக்தி நித்யமில்லாமல் அழிவுறுவதாலும் அது முக்தியாகாதென்பது அத்வைதிகளின் கொள்கை.

---

"காலத்துக்கேற்ற கோலம்' என்று ஓர் பழமொழியுண்டு. அதாவது பலவைதீகர்கள் முன்னிலையில் வைதீகவேஷமும் லௌகீகர்கள் முன்னிலையில் லௌகீகவேஷமும் போடவேண்டும். ஒவ்வொருவர் குணத்துக்கும் நடத்தைக்கு மேற்றபடி நமது குணத்தையும் நடத்தையையும் மாற்றிக்கொள்ள வேண்டும். அதைத் தவிர்த்து நம்முடைய குணத்துக்கிணங்கி மற்றவர்கள் நடக்கவேணுமென்றெண்ணுவது பிசகு. நியாயமே பெரிதாயினுங் காலத்தையும் இடத்தையும் அனுசரித்து ஜீவனத்தைக் கெடுத்துக் கொள்ளாமலிருப்பதே புத்திசாலிகளின் இலக்ஷணம். புறமதஸ்தர் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர்களாயிருப்பவர்கள் ஹிந்துமதத்தைச் சிலாகித்துப் பேசுவதால் வேலையை யிழக்கிறார்கள். கிறிஸ்துவ உத்தியோகஸ்தரிடம் வேலைசெய்வோர் கிறிஸ்துமதத்தை யிகழலாகாது. ஆனால் அதிகலாபங் கிடைக்குமென்ற பேராசையால் சன்மார்க்கம், ஸத்ஸங்கம், இவைகளைத் தவிர்ப்பதும் புத்தியீனம். தன்ஜாதி, தன்மதம், தன்மானம் ஆகிய இவைகட்கு ஆனி உண்டாகாதவையில் இதரர்களுடைய குணத்துக்கிணங்கி நடக்கலாம். மேற்கூறியவற்றுள் ஏதேனுமொன்றுக்கு இழிவுண்டாகுமென்று தோன்றினால் உடனே இருக்கும் நிலையைவிட்டு அகலுவதுநன்று

---

முற்காலத்தில் ஓர் சிங்கம், கழுதை, நரி ஆகிய மூன்று ஒன்றோடொன்று இணங்கியிருந்தன. ஒரு நாள் இரையகப்படாமல் மூன்றும் அலைந்து திரிந்து சிற்சிலமிருகங்களைக்கொன்று அவைகளைத் தங்களிருப்பிடத்துக்கு இழுத்துவந்தன. சிங்கம் கழுதையை நோக்கி 'அடே நண்பா' நீ இந்த மாம்ஸங்களை நம்மூவருக்குஞ் சரியாகப் பிரித்துவை' யென்றது, கழுதை நியாயப்படி மாம்ஸங்களை ஒன்றாகக் குவித்து சரியாக மூன்று பங்காக்கி வைத்தது. உடனே ஸிம்ஹத்துக்குக் கோபமுண்டாய் ஒரே பாய்ச்சலாகப்பாய்ந்து கழுதையை அடித்துக் கொன்று தின்று நரியைப்பார்த்து 'நண்பா! நீ இந்த மாம்ஸங்களை உனக்கும் எனக்குமாக இரண்டு பங்குசெய்' என்றது. நரி நவத்துவாரங்களையும் பொத்திக்கொண்டு மாம்ஸங்களை, ஒன்றாகக்குவித்து முக்காலே மூன்றுவீசம்பாகத்தை சிங்கத்துக்கு வைத்து வீசம்பாகத்தைத் தான் வைத்துக்கொண்டது. சிங்கஞ் சந்தோஷமடைந்து நரியைப்பார்த்து 'ஓ, நரியே, நீதான் புத்திசாலி. கணக்குத் தெரிந்தவன். இந்த கணக்கை யாரிடம் கற்றுக்கொண்டாய்' என, நரி 'கழுதையினிடமிருந்து கற்றேன். அது பட்டபாடு எனக்கு நற்பாடமாயிற்று,' என்றது. இதனால் காலத்துக்கும் இடத்துக்குந் தக்கபடி நடக்கவேண்டுமென்றறிகிறோம்.

"கஸ்தூரி ரங்கா, கல்யாண ரங்கா" வென்று பக்தர்கள் பற்பல விதமாய்ப் போற்றும் பள்ளிகொண்ட பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதனையுஞ் சித்ஸபேசா, ஆனந்த நடராஜாவென்று ஞானிகள் ஸ்துதிக்கும் நர்த்தன சுந்தராகிய நடராஜ மூர்த்தியையும் ஸதா தியானிக்கக்கடவோம்.

---

"அவரவர் ஜாதிக்கு அவரவர் தொழில் எளிது." பன்றிக்குட்டி ஆகாயத்தில் பறக்க முடியாது. கோழிக்குஞ்சு கிணற்றில் இருக்க முடியாது. மீன்கள் பூமியில் வஸிக்கமுடியாது. நாய் எவ்வளவு பலமாயும் லக்ஷணமாயுமிருந்தாலும் ஏருழ முடியாது. மிருகங்களில் இவ்வித வித்யாஸமிருப்பதுபோல் மனிதர்களுக்குள்ளும் வித்தியாஸம் உண்டா வென்பது ஓர் கேள்வி. உண்டென்றே பெரியோர் கூறுகின்றனர். தொழில்களை யனுஸரித்தே வர்ணாச்சிரமங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு வர்ணத்தான் மற்றொரு வர்ணத்தானுடைய தொழிலை யனுஸரிப்பதால் கேடுண்டாகும், இதற்கு உதாரணமாக ஓர் கதை சொல்லுவோம்

"காரியம் ஆகும்வரை கழுதையின் காலைப்பிடி" என்று ஓர் பழமொழி. அந்தக் கழுதை யொன்று ஒருநாள் கானகத்தில் திரிந்து கொண்டிருந்தது. அது எதேஷ்டமான புற்களை மேய்ந்து மிகுந்த ஸந்தோஷத்தால் கொஞ்சங் கானஞ்செய்யவே காலமைல் தூரத்துக்கப்பால் இரையகப்படாமல் பசியால் வருந்தியலைந்து கொண்டிருந்த ஓர் கோனாய் அதனிருப்பை யறிந்து ஆனந்தஞ்செறிந்து கழுதையினிருப்பிடத்துக் கோடிவந்தது. பார்த்தது

கழுதை, ஓகோ! இனி இவன் நம்மை உயிருடன் விடமாட்டான் இவனிருப்பை யறியாமல் கானஞ்செயது விட்டோம். இப்போ தொரு யுக்தி செய்து தப்பித்துக்கொள்ள வேண்டுமென்று ஒரு காலைத் தூக்கிக்கொண்டு நொண்டி நொண்டி நடந்தது. கோனாய் கழுதையை நோக்கி 'ஏன் நொண்டுகிறாய்'? என, 'அப்பா, நான் என்னசெய்வேன், இந்தக் காட்டிலுள்ள பெரிய முள்ளொன்று என் காலில் தைத்துவிட்டது. நீ என்னைப்பக்ஷிப்பதில் எனக்கு ஆக்ஷேபமில்லை ஆனால் என் காலில் தைத்தமுள் உன் தொண்டையிற் சிக்கி இறந்துபோவாயே யென்று மாத்திரம் விசனமடைகிறேன்' என்றது, அதைக்கேட்ட கோனாய் 'அப்படியானால் உனது காலைக் கொஞ்சந் தூக்கிக்கொள், நான் முள்ளைப்பிடுங்கி விடுகிறேன்' என்றது. கழுதை அவ்வாறே காலைத்தூக்கிக்கொண்டது. கோனாய் வெகு சிரத்தையுடன் கழுதையின் காலுக்கு நேரில் முகத்தை வைத்துக்கொண்டு முள்ளிருக்கு மிடத்தைத் தேடியது.

"காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்றிருப்பதால் அது தான் சமயமென்று கழுதை தன் பலமெல்லாங்காலில் கூட்டி கோனாயின் மூஞ்சியில் எட்டி உதைத்தது. ஷை கோனாய் பற்களுதிர்ந்து பின்புறமாய்ச் சாய்ந்து விழவே கழுதை ஓட்டம் பிடித்தது. உடனே கோனாய் மெள்ள எழுந்து "ஐயோ என் தகப்பன் எனக்குப் பாய்ந்து பிடுங்கித்தின்னுந் தொழிலைக் கற்பித்தானே யன்றி முள்ளெடுக்குந் தொழிலைக் கற்பிக்கவில்லை. நான்முட்டாள் தனமாய் என் ஜாதித் தொழிலைவிட்டு முள்ளெடுக்குந் தொழிலைச் செய்ததால் இந்தக் கஷ்டமடைந்தேன்" என்றது.

---

"முன்யோசனையே முதற்ற யோசனை" ஒருஸமயம் பெரிய குரங்கொன்று பல மிருகங்கள் முன்னிலையில் கோணக் கூத்தாடி அவர்களெல்லோரையும் ஸந்தோஷிப்பித்தது. அதனால் மிருகங்களெல்லாம் அக்குரங்கைத் தங்களுக்கு அரசனாக நேமித்துக்கொண்டன. இதையறிந்த ஓர் குள்ளநரி மிகுந்த பொறாமையுங் கோபமுங்கொண்டு ஓர்நாள் குரங்கரசனை ஓர் கூட்டண்டை கூட்டிப் போய் திவ்யமான பக்ஷணம் வைத்திருப்பதாயும் அதை யெடுத்துக்கொள்ளும்படியுங் கூறியது. குரங்கு வாயில் ஜலம் ஊற அந்தப் பக்ஷணத்தைக் கவ்வுகையில் கதவு மூடி கூட்டிலகப்பட்டு அவதியடைந்து நரியை நிந்திக்கத் தொடங்கியது. நரியோ அதைநோக்கி "முன் யோசனையில்லாத மூடா! இந்த அற்ப புத்தியைக்கொண்டா நீ அரசனாகவிருந்து மிருகங்களை யாளப்போகிறாய்" என்று பரிகாஸஞ் செய்தது. இக்கதையால் ஒரு ஸமயம் கோமாளியைப் போல் கூத்தாடுவதால் பலர் ஹாஹாவென்று ஸந்தோஷித்துப் பெருமைப் படுத்தினாலும் அப்பெருமை நிரந்தரமாயிராதென்றறிகிறோம்.

---

"யதார்த்தவாதி வெகுஜன விரோதி." இந்தப்பழமொழியால் ஜனங்கள் எப்போதும் உண்மை சொல்லுகிறவனை விரோதிக்கிறார்களென்று அறிகிறோம். உலகில் ஞானவான்களும் படிப்பாளிகளுஞ் சொற்பம். படிப்பில்லாத பாமரர்களே விசேஷம். அத்தகையோர்க்கு உண்மையான விஷயங்களை யெடுத்துரைத்தால் ஸரிப்படுகிறதில்லை. எவனாவது பெரிய புளுகு புளுகினால் அதில மிகுந்த ஆவல் உண்டாகிறது. விவேகிகளோ அப்படியல்ல. அவர்கள் எந்தக் காரியத்தையும் ஆராய்ந்தே செய்வார்கள்.

"இரண்டு பெண்டாட்டிக்காரன் திண்டாட்டப் படுவது போல்" என்பது ஓர் பழமொழி. இதற்கு ஆங்கிலேயர்கள் ஒரு கதை சொல்லுவார்கள். வயது சென்ற ஒரு மனிதன் இரண்டு ஸ்திரீகளை விவாகஞ்செய்ய எத்தனித்தான். அவர்களில் ஒருத்தி எவ்வனமுடையவள். மற்றொருத்தி வயது சென்றவள். ஆங்கிலேயர்களுக்குள் சிறியவன் பெரியவளை விவாகஞ்செய்யும் வழக்கமுண்டு. ஆதலின் இரண்டு ஸ்திரீகளும் கிழவனைக் கல்யாணஞ்செய்ய இஷ்டங்கொண்டனர். வயது சென்றவள் தன் புருஷனுடைய தலை பாதி நரைத்துப் பாதி கறுத்திருப்பது சிலாக்கியமன்று. தன் தலை மயிரைப்போல முற்றிலும் நரைத்திருப்பதானன்றென எண்ணி ஒவ்வொரு கறுப்பு மயிரையுந் தினந்தோறும் பிடுங்கி வந்தாள். மற்றொருத்தி தான் இளமைப் பருவமாயிருப்பதும் தன் புருஷன் கிழவனைப்போ விருப்பதும் பிசகென்றெண்ணி அவன் தலையிலுள்ள நரைத்த மயிர்களை ஒவ்வொன்றாய்ப் பிடுங்கி வந்தாள். இவ்வாறு இரண்டு பெண்சாதிகளும் இடைவிடாமல் தங்கள் காரியத்தைச் செய்துவந்ததால் புருஷன் தலை பொட்டையாகி சொம்புஸ்தாலியைப் போலிருந்தது. இதனால் இரண்டு பெண்டாட்டிக்காரன் திண்டாட்டமடைந்ததுபோல் என்னும் பழமொழி வழங்கத் தலைப்பட்டதாம்.

---

"பேராசை பெருங்கேடு" என்பது பெரியோர் வாக்கியம். ஒரு காட்டில் பசியால் வருந்திய நரியொன்று இரை தேடிவருகையில் ஓர் மரப்பொந்தைக்கண்டது. அதில் வேட்டையாடுவோர் தங்களுடைய உபயோகத்துக்காக இறைச்சிகளை வைத்திருந்தனர். நரி ஸந்தோஷப்பட்டு உள்ளே நுழைந்து இறைச்சிகளெல்லாவற்றையும் விலாப்புடைக்கத் தின்றது. அதனால் வயிறு பெருத்து பொந்திலிருந்து வெளியே வரமுடியாமல் அவஸ்தைப்பட்டுக் கடைசியாக அவ்வழியேவந்த வேறொரு நரியைக்கண்டு தான் படும் ஸங்கடத்தைச் சொல்லி வெளியே வருவதற்கு ஏதேனும் யுக்தி உண்டாவென்றது. அந்நரி 'ஒரு யுக்தி உண்டு. இரண்டு மூன்று நாள் அப்பொந்திலேயே இருந்தால் ஆகாரமின்றி வயிறு ஒடுக்கும். பிறகு தாராளமாய் வெளியே வரலாம் என்று சொல்லி முடியுமுன் வேட்டைக்காரர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். மரப்பொந்தையும் அதில் தாங்கள் வைத்த ஆகாரத்தை யெல்லாம்

தின்று பருத்த நரியையுங் கண்டு அதை நன்றாகப்புடைத்து வெளியே இழுத்தெறிந்தனர்.

---

"நாளைவரும் பலாக்காய்க்கு இன்றுவருங் களாக்காய் நல்லது" இனி எப்போதோ ஒரு பெரிய லாபங் கிடைக்கப்போகிறதென்று இப்போது கிடைக்குஞ் சிறிய லாபத்தைக் கெடுத்துக்கொள்வது பிசகு. ஒரு நாள் குளத்தில் ஒரு செம்படவன் மீன்களைப் பிடிப்பதற்காகவலையைவீசினான். ஓர்சிறியமீன் அகப்பட்டது. அது வலைஞனை நோக்கி 'ஐயா என்னை விட்டுவிடும். நான் உமது கடைவாய்க்குக்கூட பற்றமாட்டேன். இன்னுஞ் சிலநாள் இந்தக் குளத்திலேயே என்னை வாழும்படி நீர் விட்டுவிட்டால் பெரிதாகிக் கொழுத்து மறுபடியும் உமது வலைக்குட் சிக்குவேன். என்னை யாருக்கேனும் விற்று பணம் ஸம்பாதிக்கலாம்' என்றது. செம்படவன் "ஏ, சிறிய மீனே, உன்னை இப்போது விட்டு விட்டால் மறுபடியும் நீ என்னிடஞ் சிக்குகிறாய் என்பது என்ன நிச்சயம். இப்போது கிடைக்கும் லாபத்தைக் கெடுத்துக்கொள்ளும் அவ்வளவு மூடனென்றென்னை மதியாதே" என்றான்.

---

கழுகுகள் வெகுதூரத்திலுள்ள பொருள்களைப்பார்க்கக்கூடிய சிறந்த கண்களைப் பெற்றிருந்தும் பூமியிலுள்ள சுகந்தமான வஸ்துக்களையும் மிகு அந்தமான பொருள்களையும் நோக்காமல் எப்போதும் பிணங்களையே பார்க்கின்றன நல்ல பழங்களையும் ஆகாரங்களையும் விரும்பாமல் பிரேத போஜனத்தையே இச்சிக்கின்றன. இவ்வாறு செய்வது அப்பக்ஷிகளின் தன்மை. அவைகளோ பகுத்தறிவில்லாப் பிராணிகள். ஆதலின் அப்பிராணிகள் பேரில் நாம் குற்றஞ் சொல்வதற்கிடமில்லை. ஆயினும் பிணத்தைப் பிடுங்கித் தின்னுங் கழுகுகளிடம் ஜனங்களுக்கும் பிரீதியுண்டா? பிரஜைகள் அக்கழுகுகளைக் கூண்டில்வைத்து வளர்க்கிறார்களா? மடியில் வைத்துக் கொஞ்சுகிறார்களா? முகத்தில் சாய்த்து முத்தமிடுகிறார்களா இல்லை. அதுபோல் பிறர்செய்யும் உபகாரங்களையெல்லாம் எண்ணிப் பாராமல் என்னவென்று ஓராமல் அவர் செய்ததாகத் தாம் எண்ணிய இரண்டொரு அபகாரத்தை நினைத்து உபகாரிகளை நிந்தித்தலும், அவர்கட்கு இடையூறுகளை விளைவித்தலுஞ் சில மனிதர்கட்கு இயல்பு. இத்தகைய துர்க்குணிகள் பிறரால் வெறுக்கப்படுவதுடன் நரகயாதனைக்குமுள்ளாவார்கள். ஏனெனில் பகுத்தறிவுள்ள பிராணிகள் அதாவது மனிதர்கள் தாங்கள் திரிகரணங்களாலுஞ் செய்யுங் காரியங்கட்கு உத்தரஞ்சொல்லக் கடமைப்பட்டவர்கள். அவர்களுடைய காரியம் அயோக்யமாயும் பாபகரமாயுமிருந்தால் அதற்குத் தக்க பலனை யனுபவித்தே தீரவேண்டும். ஆதலின் ஒவ்வொருவரும் நல்லது இன்னது கெட்டது இன்னது என்று தெரிந்து கொள்ளுவது அவசியம். நல்லது கெட்டது என்பன மூன்று வகைப்படும். சில காரியங்கள் சரீர வளர்ச்சிக்கு நல்லவை சில காரியங்கள் ஆத்மார்த்தமானவை. சரீரம், ஆத்மா ஆகிய இர

ண்டுக்கும்நன்மையை விளைக்கக்கூடிய காரியங்களுமுண்டு. இம்மாதிரியே செட்டகாரியங்களும் மூன்றுவிதம். உதாரணமாக மாம்ஸாதிகளைப் புசித்தல் சரீர வளர்ச்சிக்குக் காரணம். ஆனால் ஆத்மார்த்தமானதல்ல. ஆத்மார்த்தமான காரியங்கள் புண்யமென்றும் மற்றவை பாபமென்றும் பொருள். விதிப்படி பகவானுக்கு நிவேதனம் பண்ணிய அன்னத்தை யுட்கொள்வது சரீரத்துக்கும் நன்மை. அதனாற் புண்யமுண்டு. விரதாதிகளை யனுஷ்டிப்பது சரீர வளர்ச்சிக்கு ஸாதகமா யிராவிட்டாலும் ஆத்மார்த்தமானதே. மேற்கூறியனபோலுள்ள அனேக காரியங்களை விவேகிகள் பிரித்து இகபர ஸாதகமாகவும் அல்லது பரத்துக்கே ஸாதகமாகவுமுள்ள காரியங்களை மட்டுஞ்செய்து பாபகரமான செய்கைகளைத் தவிர்க்க வேண்டும். நல்லது இன்னது கெட்டது இன்னதென்று அறியுஞ்சக்தியுடையவர்களே விவேகிகளெனப்படுவர். இத்தகைய விவேகிகளையே நல்லோரென மதிக்கவேண்டும். தனக்குக் கிடைத்த நிதியையும் பந்துக்களையுஞ் செல்வாக்கையுங் கொண்டு பிறருக்குத் தீங்கு விளைப்பவர்கள் அவிவேகிகளே. ஒருவனது குற்றத்தை யவனுக்கு இரகஸ்யமாய்த் தெரிவிப்பது நியாயமே யன்றி அதைப்பலர் அறியும்படி பறையடிப்பது தவறு. பலர் முன்னிலையில் ஓர் மனுஷ்யனை அவமதிக்கும் மனிதர்களிடம் உலகத்தார் வெறுப்பு கொள்ளுகின்றனர். பஞ்ச தந்திரத்திலுஞ் சபர்த்தனாயிருக்கிறவன் பிறரை நிந்திக்கலாகாதென்று கூறியிருக்கிறது. ஒருவனுடைய குற்றத்தை யெடுத்துரைப்பது குற்றஞ் செய்தவனுக்கு உபயோகமாயிருக்குமென்ற நியாயஞ் சொன்னாலும் அவ்விதஞ்செய்யும்போது நிந்தனையான சொற்களை வழங்காமல் மரியாதையான பதங்களை உபயோகிப்பது சிலாக்கிய மன்றோ? தரையை மெழுகுவதற்கு சாணிச்சட்டி உபயோகமே, ஆயினும் அந்த சாணிச்சட்டியை நாம் ஒரு மூலையில் வைக்கிறோமே யன்றி ஸமீபத்தில் வைத்துக்கொள்ளுகிறதில்லை. அதுபோல் ஒருவனுடைய குற்றத்தையெடுத்துச் சொல்பவன் அந்த ஸமயத்தில் தான் ஏதோ பெரிய காரியஞ் செய்துவிட்டதாயுஞ் சாமர்த்திய பட்டம் பெற்றுவிட்டதாயும் எண்ணிக் கொள்ளுகிறானேயன்றி நாளடைவில் அவன் துர்க்குணியென்றறிந்து நல்லோர்கள் அவனை நாடுகிறதில்லை.

---

காலக்ஷேபம் என்றால் பாகவதர்கள் பலவித சரித்திரங்களை ஸங்கீத வாத்தியங்களுடன் நடத்திக் காலங்கழிப்பதென்று பொருள்படும். இத்தகைய காலக்ஷேபங்கள் இப்போது அதிசமாய்விட்டன. இவைகளால் விளையும் பயனைப்பற்றிச் சிறிது கூறுவோம். நமது ஆரிய மதாசாரங்களைச் சிறிதேனு முணராமல் கேவலந் திரவிய ஸம்பாத்யத்திலேயே நாட்டங்கொண்டு பகவத் விஷயமான கிரந்தங்களையும் ஞான நூல்களையும் பார்க்கப் பாக்கியம் பெறாத ஸாமான்யர்கள் மாதமொருமுறையோ அல்லது இருமுறையோ நான்கு முறையோ ஓர் குறித்த நேரத்தில் குறித்த விடத்தில் கூடி

யாரேனும் ஓர் கல்விமானை எவ்விதனும் ஓர் சரித்திரத்தைச் சொல்லும்படி நேமித்து அவர் மூலமாக நமது புராண இதிகாஸங்களில் சிற்சில பாகங்களைத் தெரிந்து கொள்ளுவதுதான் காலக்ஷேபத்தின் கருத்து. இக்கருத்து சிலாக்கியமென்பதிற் றடையில்லை. ஆனால் இக்கருத்தை நிறைவேற்றிக்கொள்ளவேண்டியவர்கள் வேறுவிதமான கெடுதல்களை வருவித்துக்கொள்ளாமல் ஜாக்கிரதையாயிருக்கவேண்டிய அவசியமுண்டு. சிற்றின்பத்தை விர்த்தி செய்யக்கூடிய அனர்கமான பாட்டுகளையுங் கதைகளையுஞ் சொல்லும்படி பாகவதர்களை நிர்ப்பந்திக்கலாகாது. பணம் வாங்கினாலும் உண்மையாகவே ஜனங்கள் கடைத்தேறட்டுமென்னும் நல்ல எண்ணமுடைய சில பாகவதர்கள் மோகத்தை மூட்டும் பாடல்களையாவது சரித்திரங்களையாவது நடத்தமாட்டார்கள். மற்றவர்கள் பணங் கொடுப்பவர்களிஷ்டப்படி எல்லா சரித்திரங்களையும் நடத்தத் துணிகின்றனர். காலக்ஷேபத்துக்கு வரும் ஜனங்களில் மூன்றிலிரண்டு பங்கு பாமரர்களாகவேயிருப்பதால் அவர்கள் சுபத்திரா கல்யாணத்தால் காந்தர்வ விவாகஞ்செய்லாமென்று சாஸ்திரமிருப்பதாக நினைத்து இல்லமேகினவுடன் எதிர் வீட்டுப் பெண்ணை பலாத்காரமாய்த் தூக்கிக்கொண்டுபோய் இந்தியன்பினல்கோடு 366-வது செக்ஷன்படி குற்றவாளிகளாகின்றனர். ஓரிடத்தில் பாகவதர் ஒருவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி வேணுகானஞ் செய்ததாயும் அதைக்கேட்ட அடுத்தவனத்திலுள்ள பிராமண ஸ்திரீகள் மதிமயங்கித் தங்கள் புருஷர்களை அலட்சியஞ்செய்து வேண்டிய பலகாரங்களை யெடுத்துக்கொண்டு கிருஷ்ணனிடஞ் சென்றதாகவுங் கூறி இவ்வாறே ஸ்திரீகளெல்லாம் புருஷர்களை பகவத் பக்தர்களாகிய பாகவதர்களிடம் அன்பு பாராட்டவேண்டுமென்றார். இவருடைய காலக்ஷேபத்தால் சில ஸ்திரீகள் கெட்டு துன்மார்க்கத்தை யனுஸரிக்கக் கூடுமன்றா? நமது புராணத்திலுள்ள சில கதைகளுக்கு தத்வார்த்தங்கள் இருக்கின்றன. அவற்றை தெரிவிக்காமல் கண்மூடித்தனமாகச் சில பாகவதர்கள் சொல்லி விடுவதால் அனேக பாமரர்கள் பாப கர்மங்களைச் செய்யத் துணிகின்றனர். இதன்றி, தமிழ், கிரந்தம், தெலுங்கு முதலிய பல பாஷைகளில் நமது புராண இதிகாஸங்கள் அச்சடிக்கப்பட்டுப் புஸ்தக ரூபமாகவிருக்கின்றன. ஸங்கீத வாத்தியங்களுடன் பகவானது சரித்திரங்களை கேட்கவிரும்பினால் அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், நந்தன் முதலிய பக்தர்கள் ஆழ்வார்கள் முதலிய அடியார்களின் சரித்திரங்களைச் சொல்லக்கேட்பது நன்று. இதன்றி ஸ்திரீ வர்ணனையும் தில்லானாப் பாட்டுகளையுங் கேட்பது வீண்காலக்ஷேபமேயாம்.

---

"ஸர்வம் பிரம்மமயம் ஜெகத்" இதன் அர்த்தத்தைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம், இந்த ஜெகமெல்லாம் பிரம்மமயமே என்பதால் இந்த ஜெகமே பிரம்மம் என்று ஏற்படுகின்றது. பிரம்மம் வேறு, உலகம் வேறன்றாவெனின், அன்றென்றும் உண்மையில்

இரண்டும் ஒன்றுதானென்றும் அத்வைதிகள் கூறுகிறார்கள். அதெப்படியெனில் கயிற்றரவை உபமானமாகச் சொல்லுகின்றனர். அதை யாராய்ந்து பார்ப்போம்.

"கயிற்றரவு" என்றால் வழியேகிடந்த இருட்டுவேளையில் பாம்புபோல் தோன்றுகிற கயிறு என்றருத்தம். வழியேசெல்பவன் அதைக் கண்டுமருண்டு பாம்பென்று கூறுகிறான். அவன் சொல்வது உண்மையா? பொய்யா? அவன் தான் கண்டபடியான தோற்றத்தைச் சொன்னது பொய்யல்ல உண்மையே. ஆயினுங் கயிற்றைப் பாம்பென்று சாதிப்பது பொய்தான். கயிறு பாம்பு என்னும் இரண்டு வஸ்துக்கள் அப்போதில்லை. கயிறு, ஒன்றுதான் உண்டு. அது ஜெகத்தாகத் தோன்றுகிறது. கயிறு பாம்புபோல் காணப்படுஞ் சக்தியைப் பெற்றிருக்கிறது. அதுபோல் பிரம்மம் உலகைப்போல் தோன்றுஞ் சக்தியைக் கொண்டிருக்கிறது. இந்த சக்திதான் மாயை. இம்மாயை ஓர் பொருளன்று. இது ஓர் சக்தியே யன்றி வேறில்லை, பிரம்மமே ஜெகஜீவ பரங்களாய்த்தோன்றுகிறது. மாயையினின்றும் விடுபட்ட அத்வைத ஞானிகளுக்கு பிரம்மம் ஒன்றே ஸத்தியமாகும்.

பிரம்மத்தை நோக்கியவர்களுக்கு ஜெகஜீவ பரங்களில்லையாகும். விளக்கின் வெளிச்சத்தில் கயிற்றைப் பார்ப்போருக்கு பாம்பு தோன்றுமா? தோன்றாதன்றோ? அதுபோல் ஞானமாகியவிளக்கின் வெளிச்சத்தில் பிரம்மத்தைப் பார்க்கிற மகான்களுக்கு உலகந்தோன்ற மாட்டாது. அவர்களுக்கு இவ்வுலகிலுள்ள ஸகல வஸ்துக்களும் பிரம்மமயமாய்க் காணப்படும். இதுதான் ஸர்வம் பிரம்மமயம்; ஜெகத் என்னும் வாக்கியத்துக்கு அருத்தம்.

---

"செத்தபாம்பை யடிப்பது எளிது." உலகத்தில் பலர் ஒருவனை நிந்தித்தால் வலியற்ற பலஹீனனும் அவனை நிந்திக்கத்தொடங்குகிறான். நாலுபேர்கள் சேர்ந்து ஒரு திருடனைப் பிடித்தால்வழியேபோகிற ஒவ்வொருவனும் அவனையடிக்கத் துணிகிறான். ஆரம்பத்தில் திருடனைப் பிடித்துக் கட்டியுருட்டியவன் வீரனேயன்றி பின்னர் ஒருவனை விளாசும் வீணர்கள் வீரர்களல்லர். அதுபோல் எந்தக் காரியத்தையும் புதிதாய் கண்டுபிடித்துச் செய்பவன் புத்திசாலியேயன்றி அவனைப் பின்பற்றும் மற்றவர்கள் புத்திசாலிகளாகார். ஆகிலுங் கல்வி விஷயத்தில் பெரியோர்களைப் பின்பற்றுவது குற்றமாகாது. சிஷ்யனது பிரஸங்கத்தால் குருவின் பெருமை புலப்படுகிறதன்றோ.

---

"அழையாவீட்டில் நுழையாவிருந்து" என்ற ஓர் பழமொழியுண்டு. அதற்கொரு கதை சொல்லுகிறோம். முன்னொரு சமயம் ஓர் தனவான்வீட்டில் விருந்தொன்று நடந்தது. அதற்காக வெகுஸாமான்கள் வரவழைத்து அனேக சமயற்காரர்களை நேமித்தார்கள். அத்தனவானது கிருகத்தில் அருமையாய் வளர்ந்த நாயொன்று தன் நண்பனாகிய மற்றொரு நாய்க்கு இச்சங்கதியைச் சொ

ல்லித் தன் வீட்டுவிருந்துக்கு வரும்படியழைத்தது. அந்நாய்அவ் வாறே வந்து விருந்துக்காக வைத்திருக்குஞ் சோறு, கறி, பழவர்க் கங்கள் பாயஸம் முதலியவற்றைக்கண்டு வாயில் ஜலம் ஊற சந் தோஷமடைந்து இன்றைக்கு வயிறார இப்பதார்த்தங்களை யெல் லாம் புசிக்கலாமென்று போஜன அறையில் அங்குமிங்கும் உலா விக்கொண்டிருந்தது. பார்த்தான் பரிசாரகன், இப்புது நாயைபொ த்திஞன கடியால். அதன் கால்களைப்பிடித்து அப்படியே தூக்கி ஜன்னல் வழியாக வீதியில் விட்டெறிந்தான். அது வாள்வாளெ ன்று கத்திக் குறைந்து காலை நொண்டிக்கொண்டு முன்னிருந்த விடத்திற்குச் சென்றது மற்ற நாய்களெல்லாம் அதை நோக்கி விருந்து எப்படியிருந்ததென, "அடடா வெகு தரமாயிருந்தது. அங்கே வைத்திருந்த பாயஸத்தை யதிகமாய்க்குடித்து உடம்புதெ ரியாமல் மயங்கிப்போனேன். அந்த வீட்டைவிட்டு எப்படி வந்தே னென்று எனக்கே தெரியவில்லை" என்றது. இதைப்போல் அழை யா வீட்டில் நுழையும் விருந்தாளிகள் தாங்கள் பட்ட அவமான த்தை மறந்து வெளியே கௌரவமாய்ச் சொல்லிக்கொண்டாலும் அவ்வாறு நுழைந்து மானங்கெட்டுத்தன்புறுவது பொய்யாகுமா?

---

பொன்னைக்கொண்டுபலவித ஆபரணங்கள்செய்யப்படுகின்றன. ஒரு ஆபரணம் மற்றொரு ஆபரணத்தினின்றும் வேறாகத்தோன் றுகிறதேயன்றி எல்லா ஆபரணங்களும் பொன்னேயன்றி வேறி ல்லை. அதுபோல் மாயையின் காரியத்தால் ஜெகத்திலுள்ள பொ ருள்களால் பலவிதமாய்க் காணப்படினும் உண்மையில்அவைகளெ ல்லாம் ஆத்மஸ்வரூபமேயன்றி வேறல்ல.

இரவில் கட்டையைக்கண்டு கள்ளனென்று மருண்டுபயத்தை யடையும் புருஷன் மின்னல் தோன்றியவுடன் அதன் நிஜமான ஸ்வபாவத்தை யறிந்து பயத்தைவிட்டு சந்தோஷமடைகிறான். அதுபோல் அஞ்ஞானியானவன் உலகிலுள்ள இன்ப துன்பங்கட் குப் பயந்து காலம் தள்ளி ஞானம் அடைந்தபின் உலகிலுள்ள இன்ப துன்பங்கள் பொய்யென்றறிந்து அவைகளால் தனக்குப்பா தகமில்லை யென்றுணருகிறான்.

கடலில் வஸித்த ஓர் நண்டு கரையை அடைந்து அங்குள்ள விநோதத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. பூமியிலிருந்தால் இன்னும் அநேக ஆச்சரியங்களைககண்டு திருப்தியடையலாமெ ன்று அங்கேயே இருந்துவிட்டது, ஒருநாள் ஓர் நரி அவ்விடத்து க்குவந்து அந்நண்டைப் பிடித்து வாயிற்போட்டுக்கொண்டு விழுங் குகையில் நண்டு "ஐயோ, நான் இயற்கையாயிருக்க வேண்டிய சமுத்திரத்தை விட்டு தரையில் வஸித்தது மூடத்தனம். அதனா லன்றோ என் பிராணனை யிழக்கிறேன்" என்று சொல்லிக்கொண் டே இறந்தது.

"உள்ளும் புறமும் ஒன்றாயிருக்க வேண்டும்." எல்லோரு டைய முன்னிலையிலும் வேதாந்தம்பேசி பொருளாசையும்,பொரு

மையும், அகங்காரமும் அதிகமாய்க்கொண்டவன் ஆசாரியனுகான் அவன் ஊரிலுள்ள சாஸ்திரங்களையெல்லாங் கற்றால் என்ன? கற்கக் கசடறக் கற்றபின் நிற்க அதற்குத்தக என்பதை யுணராமல் பொறாமையே குடிகொண்டு பொருளாசையே மேலிட்டு தன்னைப் போன்ற மற்ற ஆசாரியர்களையும் வித்வான்களையும் நிந்தித்துக் காலங்கழித்தால் ஏதேனும் பிரயோஜன முண்டா? ஒருபோதும் உண்டாகாதென்றபடி.

சூரியன் மிகப்பெரிதாயிருந்து ஒளியை வீசியும் உலகத்தை யெல்லாம் பிரகாசிப்பதும் அதன் இருப்பையுங் குணத்தையும் உபயோகத்தையுங் குருடன் அறிகிறதில்லை அதுபோல்பெரியோர்களின்மகிமையையும் நல்ல பத்திரிகைகளின் பெருமையையும் ஞானநூல்களின் அருமையையும் மதிஹீனர்கள் அறியமாட்டார்கள்.

வெகு தூரத்திலிருக்கும் புஷ்பத்தின் வாசனையை வண்டுகள் எப்படியோ அறிந்துசெல்லுகின்றன அதுபோல்நன்மையைத்தரும் விஷயங்களைப்புத்திமான்கள் எப்படியோ தேடியனுபவிக்கின்றனர்.

விஷத்தையும் அமிர்தத்தையும் ஒரேகாலத்தில் உட்கொள்பவன் புத்திசாலியா? நல்ல ரோடுந்தீயாபோடும்ஒரேகாலத்திற்பழகுகிறவன் யோக்யனுவானு? முன்னும் பின்னுமாக ஓர் வண்டியை யிழுத்தால்அதைநம்பி ஏறலாமா? அதுபோல ஒன்றிற்கொன்று விரோதமாயிருக்கும் இரண்டு மதங்களை யனுசரிப்பவன்மூடனே.

---

பிரம்மமானது ஜெகஜீவ பரங்களாய்த் தோன்றுகின்றது. ஜெகம் என்றால் உலகம். ஜீவன் என்றால் உலகத்தில் வாழும் பிராணிகள். பரம் என்றால் சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடாத்தும் பிரம்மா விஷ்ணு ருத்திரர்கள். ஜெகஜீவபரங்களெல்லாம் உண்மையில் பிரம்மத்தின் தோற்றமேயன்றி வேறல்ல. இவ்வாறிருக்கப் புறமதத்தார் ஒருவர் பள்ளியில் வாசிக்கும் மாணுக்கர்களை நோக்கி உங்கள மதத்தில் மூன்று கடவுளிருக்கின்றன. கடவுள் ஒன்றாயிருக்க மூன்று என்று எப்படிச் சொல்லலாமெனக் கேட்கிறார்கள். அதற்கு சமாதானஞ் சொல்லத்தெரியாத இந்துப் பிள்ளைகள் ஆந்தைபோல் விழிக்கின்றனர். இத்துடன் விடுகிறார்களா கிறிஸ்துவர்கள்?

பிரம்மாதானே உலகிலுள்ள எல்லாவற்றையுஞ் சிருஷ்டித்தவர். ஸரஸ்வதியையும் அவர்தானேசிருஷ்டித்தார். அப்படியிருக்க அவர் தம் பெண்ணுகிய ஸரஸ்வதியைத்தாமே கல்யாணஞ்செய்துகொள்ளலாமாவென்னும் அஸந்தர்ப்பமான கேள்வியை கேட்கிறார்கள். முன்கூறியபடி பிரம்மமானது திரிமூர்த்திகளாய்த் தோன்றி சிருஷ்டி, திதி ஸம்ஹாரம் என்னும்முத்தொழில்களைநடத்துகிறதென்றுவைத்துக்கொள்வோம். சிருஷ்டிப்பதற்கு வித்தை அவசியம். ஆதலின் பிரம்மமானவர் வேதமாகிய வித்தையைக் கொண்டிருக்கிறார்,வித்தையைத்தான் ஸரஸ்வதியென்கிறோம். ஸரஸ்வதியென்பது கையுங் காலுந் தலையுமுள்ள ஓர் ஸ்திரீயைக் குறிக்கவில்லை.

வித்தையையே குறிக்கிறது. அவனுடைய நாக்கில் ஸரஸ்வதி யிருக்கிறாளெனின் அவனுடைய நாக்கில் ஸரஸ்வதியென்று 150-பவுண்டு நிறையுள்ள ஓர்பெண்ணிருக்கிறாளென்று அர்த்தமாகுமா? இப்படித்தான் பிரம்மாவின் நாக்கில் ஸரஸ்வதியிருக்கிறாளென்பதும், பிரம்மாவுக்கு ஸரஸ்வதி மனைவியென்பதும். இந்த தத்வத்தை யறியாமல் கிறிஸ்துவர்கள் அவலக்ஷணமான கேள்விகள் கேட்கின்றனர். இக்கேள்விகள் ஆபாஸமென்பதை அறியாமல் பள்ளிப்பிள்ளைகள் வீணாய்க்கெட்டுப்போகின்றனர். இரக்ஷிக்குந் தொழில்விஷ்ணுவுக்குமுண்டு. இரக்ஷிக்கவேண்டுமானால் பணமிருக்கவேண்டும். பணத்தை லக்ஷ்மியென்கிறோம். இப்போதும் பணக்காரனை லக்ஷ்மிபுத்திரன் என்கிறோம். நிஜமாகவே லக்ஷ்மியென்பவள் ஓர்பெண்ணாகவும் அவள் விஷ்ணுவென்னும் புருஷனுக்கு மனைவியாகவுமிருந்தால் அவ்விஷ்ணுவுக்குச் சொந்தமான வைகுண்டத்தை லக்ஷ்மிபுத்திரர்களாகிய பணக்காரர்களன்றோ பங்கிட்டுக்கொள்வார்கள். ஆதலின் லக்ஷ்மியென்பது தனத்தைக் குறிக்குஞ் சொல்லென்றறிக. இம்மாதிரியே ஸம்ஹாரஞ் செய்வதற்குத் தோள்வலிவேண்டும். அதாவது சக்தி அவசியம். இந்த சக்தியைத் தான் ருத்திரனுக்கு மனைவியென்று சொல்லுகிறோம். மேற்கூறியவற்றால் ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதியென்னும் பதங்களெல்லாம்முறையே வித்தையையும், செல்வத்தையும், சக்தியையுங்குறிக்கின்றனவென்று புறமதஸ்தர் கண்டுகொள்வராக. முதலில் பிரஸ்தாபிக்கப்பட்ட பிரம்மமே ஸரஸ்வதி, அந்தபிரம்மமேலக்ஷ்மி, அந்தபிரம்மமேபார்வதி, அந்தபிரம்மமேதிரிமூர்த்திகளும், அந்தபிரம்மமேசகலமும்ஆனதால் இந்த தத்துவத்தையுணர்ந்து இந்துமாணாக்கர்கள் புறமதஸ்தர்களின் வினாக்களுக்குத் தக்கபடி விடையளிப்பார்களென்றெண்ணுகிறோம்.

---

"நம்பினவன் நலம் பெறுவான்" என்றொரு பழமொழியுண்டு. முற்காலத்தில் புங்கனூர் என்னுங்கிராமத்தில் ஓர் பிராமணனிருந்தான். அவன் ஒருநாள் விடியற்காலமே எழுந்து ஒரு குயவனுடைய முகத்தில் விழித்தான். அந்த குயவனுக்கு முன்பல் நீண்டு விகாரமாயிருந்தது. பிராமணன் அந்தப் பல்லைப்பார்த்து இனி நமக்கென்ன கேடோ தெரியவில்லை. இந்த குசப்பயல் மூஞ்சியில்விழித்தோம். அதிலும் அவனது நீண்ட முன்பல்லைப் பார்த்திருக்கிறோம். பிரதிதினமுங் கிடைக்கும் அபிசிரவணதக்ஷிணையாகிய அரையணாகூட கிடைக்குமோ கிடைக்காதோவென்று ஸந்தேகித்து உபாதானச் செம்பை கையிலெடுத்துக்கொண்டு புறப்பட்டான். ஒவ்வொரு வீட்டிலுஞ்சென்று "ஸ்ரீ கிருஷ்ணாய நம:" என்று சொல்லி அரிசியால் செம்பை நிரப்பி வழக்கம்போல் வீட்டுக்கு வந்தவுடன் அதை ஓர் முறத்தில் கொட்டினான். இரண்டு ரூபாய் அரிசியுடன கிணுக்கென்று விழுந்தன. பிராமணன் ஒருநாளும் இரண்டு ரூபா சம்பாதித்ததில்லை. ஆதலின் மிகுந்தஸந்தோஷங்கொண்டு இன்றைக்குப் பகவான் நமக்கு கிருபைசெய்தார். யாரோ மகராஜி அரிசி

போடும்போது இரண்டு ரூபாயையுங் கலந்து போட்டுவிட்டான். நல்ல பொழுதாக விடிந்தது. அடடா அந்தக் குயவனை வைதோமே அவன் பல்லைப்பார்த்தகாலன்றோ இரண்டு ரூபா கிடைத்தன. இனி அவன் முகத்திலேயே விழிக்கவேண்டும். அதிலும் அவன் பல்லைப்பார்ப்பது தான் ஸ்வாரஸ்யம். இந்த சங்கதியை வேறொருவரிடஞ் சொன்னால் நமக்கு வரும்படி குறைந்துபோமென்று மறுநாள் முதல் குயவன் முகத்திலேயே விழித்துவந்தான். பிராமணனைப் பிடித்த அதிர்ஷ்டமோ, அல்லது குயவனுடைய வக்கிர தந்த மகிமையோ, பிரதிதினமும் இரண்டு மூன்று ரூபாய்க்குக் குறையாமல் அவனுக்கு வரும்படி கிடைத்துக் கொண்டிருந்தது.

"உருசிகண்ட பூனை அடுப்பங்கரையைத் தாவும்" என்றபடி பிராமணன் பிரதிதினமும் அதிகாலையில் எழுந்து குயவன் வீட்டுக்கெதிரிலுட்கார்ந்து அவன் பல்லைப் பார்த்துப் பிறகுதான் உபாதானத்துக்குப் போகிறவழக்கம். இவ்வாறிருக்கையில் ஒரு நாள் குயவன் ஏதோ கழனி காரியமாக விடிய ஜாமத்துக்கெழுந்து வெளியே போய்விட்டான். பிராமணன் அவனைப்பார்க்க முடியவில்லை. அவன் குயவனைத் தேடிக்கொண்டு எல்லா விடங்களிலும் அலைந்து பகல் 15-நாழிகை வேளையில அவனைக் கால் மைல தூரத்தில் கண்டு அவனது பல்லைப்பார்க்கவேண்டி வெகு வேகமாய் ஓடி வந்தான். இதற்குள்ளாக குயவன் ஓரிடத்திலுழுதுகொண்டிருக்கையில் ஆற்றங்கரையில் புதையலொன்று தென்பட்டது. அதை யெடுத்து ஒருவருக்குந் தெரியாமல் பத்திரப்படுத்திக்கொண்டிருந்தான் அந்த ஸமயத்தில் குயவன் பல்லைப்பார்ப்பதற்காக ஓடிவந்த பிராமணன் "அப்பா; கண்டேனடா" என்றான்.

"குயவன்பாடு கொஞ்சங் கடகடத்தது" ஓகோ இந்தப் பிராமணன் நாம் எடுத்த புதையலைக் கண்டுகொண்டான். இனி இவனுக்கு ஏதேனும் பங்கு கொடாவிட்டால் வெளியே சொல்லிவிடுவானென்று ஐயா, உமக்கும் இந்தப்புதையலிற் பாதி தருகிறேன், வெளியே சொல்லாதேயும் என, பிராமணன் உடனே ஸங்கதியையறிந்து ஜாக்கிரதைப்பட்டு புதையலிற் பாதியை எடுத்துக்கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தான். அதில் ஆயிரம் ஸவரன்களிருந்தன. இந்தக்கதையால் நம்பினவன் நலம் பெறுவான் என்னும் பழமொழி உண்டாயிற்று. ஆதலால் நாம் எல்லோரும் பகவானை பஜித்தால் நன்மைகிடைக்குமென்ற முழுநம்பிக்கையைக்கொள்ளவேண்டும்.

---

"சுகமுந் துக்கமும்" ஓர் தனவான்வீட்டில் கழுதைக்குப் புல் போடாமல் இரண்டுகாலையுங்கட்டி வெளியே துரத்தி. வெள்ளாட்டுக்கு மட்டும் புல்லையுந் தழையையும் ஏராளமாகப்போட்டுக் கொழுக்கவைத்தனர். அதைக்கண்டு அவ்வாடு இறுமாப்படைந்து 'ஏ, கழுதையே, நீ நமது எஜமானுக்கு சுமையெடுக்கிறாய். நன்றாய் உழைக்கிறாய். உனக்கு அவர் தீனிபோடுகிறதில்லை. நீ கிட்டவந்தால் உன்னை அடித்து விரட்டுகிறார். என்னை அவரே யழைத்து உட

ய்பெல்லாந் தடவிக்கொடுக்கிறார். எனக்குவேண்டிய புற்களைப் போடுகிறார். வேலை யிடுகிறதேயில்லை' நான் ஜென்மாந்திரத்தில் புண்யஞ்செய்தேன் இப்போது சுகமடைகிறேன். நீபோன ஜென் மத்தில் பாபஞ்செய்தாய் இப்போது துன்பமடைகிறாய் என்றது. அதைக்கேட்ட கழுதை அப்பா, நீ சொல்லுகிறது ஸரிதான். ஆயினுஞ் சுகமுந் துக்கமும் மாறிமாறி வரும். கொஞ்சநாள் பொறுத்துக்கொண்டிரு வென்றது. சிலநாள் சென்றபின் பிடாரிகோயிலில் ஓர் திருவிழா நடந்தது. அதற்காகப் பலிகொடுக்க வேண்டி ஆட்டை யவிழ்க்கவந்தார்கள். அதன் கண்ணீர் ஆறாகவோடிற்று. அப்போது கழுதை 'அதை நோக்கி ஏனப்பா அழுகிறாய்? நீ முன் சுகத்தையனுபவித்தாய். இப்போது துக்கமனுபவிக்கிறாய். எனக்கு முன் துக்கமாயிருந்தது. இப்போது உன் கதியைப் பார்த்தவுடன் அது நீங்கிச் சுகம் உண்டாயிற்று' என்றது. ஆதலின் இன்பத்துக்குத் தக்கபடி துன்பமு மிருக்குமென்பதை தனவந்தர்களறிந்து சர்வப்படாமலும் ஏழைகளை ஹிம்ஸியாமலு மிருக்கவேண்டும்.

---

ஓரூரில் பொதுநன்மையான காரியார்த்தமாய் ஒருவரை வரி கொடுக்கும்படி மற்றவர்கள் நிர்ப்பந்தித்தனர். அவர் நான்கொடுக்கவேண்டிய காரணமென்னவென, நீர் இந்தவூரில் குடியிருப்பதால் வரி கொடுக்கத்தான் வேண்டுமென்றார்கள். அவர் உங்களால் எனக்கு வருஷந்தோறும் இருபது முப்பது ரூபா செலவாகிறது. நீங்களில்லாவிட்டால் நான் வஸ்திரமின்றி உபாயமாகக் காலங்கழிப்பேன். உங்களாலன்றோ எனக்கு துணிச் செலவு நேரிடுகிறதென்றார்.

---

"மகம்மது, சுல்தான், போப்" ஆகிய இவர்கள் தங்கள் பிரஜைகளுக்கு ஒவ்வொரு கட்டளையிட்டிருக்கிறார்கள். அதாவது மகம்மது தமது சிஷ்யர்கள் சாராயங்குடிக்கக் கூடாதென்று உத்தரவு செய்திருக்கிறார். சுல்தான் தமது தேசத்தில் கல்வியை பரவச்செய்யவில்லை, போப் பாதிரிகளல்லாத மற்றவர்கள் வேதபுஸ்தகத்தைப் படிக்கக் கூடாதென்றார். இவைகளால் நாமறிவ தொன்றுண்டு. அதாவது மேற்கூறியவற்றை மிகமிஞ்சி உபயோகிப்பதால் தங்களுடைய கருத்து நிறைவேறாமற் கெட்டுப்போமென்பதே. மகம்மது தம்மார்க்கத்தை சண்டைபோட்டே ஸ்தாபிக்கவேண்டுமென்னுங் கருத்தைக்கொண்டதால் சாராயம் அருந்துவதால் பலங்குன்றுமென்றும் ஜெயம் கிடைப்பதருமையென்றும் அதையருந்தக்கூடாதென்றும் விதியேற்படுத்தினார். சுல்தான் தம் நாட்டுப் பிரஜைகள் படிப்பாளிகளாயிருந்தால் தம் இஷ்டப்படி நடத்த முடியாதென்று படிப்பு வேண்டாமென்றனர். போப் தம்முடைய மடாதி பத்யம் நிலைத்திருக்க வேண்டுமானால் மூடபக்தி போய் விடுமென்றறிந்து வேதத்தைப் பாதிரிகள் மட்டுமே படிக்கலாமென்று கட்டளையிட்டார்.

"புத்திமானுக்கும் மூடனுக்கும் என்ன வித்யாஸம்?" புத்திமானுங்குற்றஞ்செய்கிறான் மூடனுங்குற்றஞ் செய்கிறான். புத்திமானுடைய குற்றம் அவனுக்கு மட்டுந்தெரியும். உலகத்தாருக்குத்தெரியாது. மூடன் செய்யுங்குற்றம் அவனுக்குத் தெரியாது, உலகத்தாருக்குத் தெரியும். இதுதான் இருவர்களுக்குமுள்ள வித்தியாஸம்.

"காடு வாவா என்கிறது வீடு போபோ என்கிறது" என்று சில கிழவர்கள் பிறரிடம் பேசுவார்கள். ஐயோ என்னை எமன் கொண்டுபோனால் நல்லது என்பார்கள். அந்த எமன் பிரத்யக்ஷமாக வந்தால் அப்போது உள்ளே ஓடிப்போய் கதவைமுடிக்கொள்வார்கள். முன்னொரு சமயம் கூலிக்காரக் கிழவனொருவன் தலையில்பெரிய மூட்டையைத் தூக்கிக்கொண்டு வெயில் வேளையில் நடந்து போனான், மிகுந்த அலுப்பினாலுங் களைப்பினாலும் அந்த மூட்டையை யிறக்கி 'ஐயோ, எமனே நீ வரமாட்டையா' என்றான். அதைக்கேட்டு எமன் இதோ வந்துவிட்டேனென்று அக்கிழவனுக்கெதிரில் பிரத்யக்ஷமாகி ஏன் என்னைக் கூப்பிட்டாய். உனக்கு என்ன வேண்டும் என்றான். கிழவன் பயந்து எனக்கு ஒன்றும் வேண்டாம். இந்த மூட்டையை என் தலையில் ஏற்றிவை, இவ்வுபகாரஞ் செய்தபின் நீ போகலாம் என்றான். எமன் சிரித்துக்கொண்டு அவ்வாறே மூட்டையை அக்கிழவன்மேல் ஏற்றித் தான்மறைந்துபோனான். இச்சதையால் யாருக்கும் இறந்துபோக மனம் வராதென்பதை யறிந்துகொள்ளுகிறோம்.

"சிவ, சிவ, கிர்ஷ்ண, கிர்ஷ்ண," என்னும் பதங்கள் ஸர்வபாபங்களையும் போக்கடிக்கும் வல்லமையைப் படைத்துள்ளன. மகா பாபங்களுக்கு விதித்திருக்கும் பிராயச்சித்தம் இரண்டுதரஞ் சிவ, சிவ என்று சொல்வதே. இவ்வளவு பெருமைவாய்ந்த சிவநாமத்தை ஸதா ஸ்மரணை செய்வோர் அதி சீக்கிரத்தில் ஞான ஸம்பத்தை யடைவர்.

"விருப்பம் வெறுப்பு" இரண்டுமில்லாதிருத்தல் நன்று. ஏனெனில் சுகத்தால் விருப்புந் துக்கத்தால் வெறுப்பும் உண்டாவதாலும் சுகத்தின் நிழலே துக்கமென்று மேலே கூறியிருப்பதாலும் இந்த ஜெகத்திலுள்ள எந்தப்பொருளிலும் ஞானிகள் விருப்பம் அல்லது வெறுப்பைக் கொள்ளுகிறதில்லை. அவ்வாறு இரண்டையுங் கொள்ளாதிருப்பதால் என்ன பயன் உண்டு? இதற்கு ஒருதாரணங்கொடுக்கிறோம். நம்முடைய தேகத்திலுள்ள நாடிகள் சுகத்தையுந்துக்கத்தையும்நமக்குத்தெரிவிக்கின்றன. மிருதுவானவஸ்து நமது கையிற்பட்டால் சுகமுண்டாகிறது. கரடுமுரடாயிருக்கும் வஸ்துபட்டால் துக்கமுண்டாகிறது. இவ்விரண்டையும் ஸ்பரிசித்தவுடன் கையிலுள்ள நரம்புநாடிகள் மேற்கூறிய இருவகை வஸ்துக்களின் குணத்தையும் மூளைக்குத் தெரிவிக்கின்றன. ஒரே நாடியானது சுகத்தையும் அறிவிக்கிறது. துக்கத்தையு மறிவிக்கிறது.

கை மரமரத்துப்போனால் சுகமுந் தெரிகிறதில்லை. துக்கமுந்தெரி விக்கிறதில்லை. அதுபோல் சுக துக்கங்களிரண்டையும் அடையாதிருக்கவேண்டி எந்த வஸ்துவிலும் விருப்பம் வெறுப்பு ஆகிய இரண்டையுங் கொள்ளாதிருப்பது நன்று.

---

"உற்றுப் பார்த்தால் உண்மை விளங்கும்" என்பது ஓர் சிறந்த பழமொழி. இதை நிரூபிக்க ஓர் கதை சொல்லுகிறோம். வெகுநாளைக்குமுன் பிரான்சுதேசத்தில் லூயி என்ற ஓர் தனவானிருந்தான். அவன் சிற்றின்பத்திலேயே ஸகல ஸொத்துகளையுஞ் செலவிட்டு வருங்கால் பாரிஸ் நகரத்தில் சிங்காரவனத்துக்குள் உலாவிக்கொண்டிருந்த அழகிய ஓர் ஸ்திரீயைக்கண்டு மோகங்கொண்டான். அவளுடன் சேரவேண்டுமென்னும் விருப்பம் லூயிக்கு அதிகமாயிற்று. ஒருவருமில்லாத ஸமயத்தில் அவளருகே சென்று தான் கொண்ட எண்ணத்தைத் தெரிவித்தான். அம்மாது ஓரிரவு தன்னுடன் இருக்கவேண்டுமானால் 500-பவுண்டு தரவேண்டுமென்றாள். லூயிக்கு 500-பவுண்டு லக்ஷியமில்லை. ஆகையால் உடனே அந்தத்தொகையை அவளிடந் தந்து மேல்விலாஸத்தைக் கேட்டுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றான். அஸ்தமனமானவுடன் சிறந்த ஆடைகளை யணிந்து மிகுந்த குதூகலத்தோடு ஒய்யாரமாக வீதியில் கையைவீசி நடந்து மேற்கூறியபெண்மணியின் வீட்டுக்குப்போனான். அவள் வெகு மரியாதையாய் லூயியைத் தன் படுக்கையறைக்குள் அழைத்துப்போய் நல்ல கீர்த்தனைகளைப் பாடிப் பலவித ஸம்பாஷணைகளால் அவனுக்கு ஸந்தோஷத்தை யுண்டாக்கிக் கடைசியில் தன் ஆடையாபரணங்களைக் களைந்து வலதுகையி னுதவியால் இடதுகையைக் கழற்றிவைத்தாள். லூயிக்கு ஆச்சரியமுண்டாயிற்று. இவளுக்கு ஒரு கைதானுண்டென்பதும மற்றொருகை போலிக்கை என்பதும் இவனுக்கு முன்னாடி தெரியாது. பிறகு ஒரு கண்ணைக் கழற்றிவைத்தாள். லூயிக்கு வெறுப்பு உண்டாகத் தலைப்பட்டது. பிறகு அம்மாது ஒரு காலைக் கழற்றிவைத்தாள். ஐயோ இந்த முண்டத்தின்பேரில் நாம் ஆசை கொண்டோமேயென்று லூயி துக்கித்தான். கைநொண்டி, கால்நொண்டி, கண்பொட்டை இவ்வளவு அவலக்ஷணமுள்ள ஸ்திரீயைக் கண்ணால் பார்ப்பதே கஷ்டம். லூயி அவளுடன் எவ்விதம் இணங்கியிருப்பான். அவன் ஓரே ஓட்டமாக ஓடி தன் வீட்டை யடைந்தான். தூக்கம் வரவில்லை, அப்போது அடடா வெளிப்பகட்டைக்கண்டு ஏமாந்து 500-பவுண்டு கொடுத்தோமே. உற்றுப்பாராத தோஷத்தால் இத்தனை நஷ்டமுண்டாயிற்றென்று எண்ணிக் கொண்டான். இந்த லூயியைப்போல் பிரஜைகள் பிரபஞ்சத்தில் ஏதோ சுகமுண்டென்று நினைத்து வீண் பிரயாஸைப் படுகின்றனர். நன்றாக ஆராய்ந்துபார்த்தால் ஐம்புலன்களாலும்

அனுபவிக்கப்படுஞ் சுகம் போலிசுகமேயன்றி உண்மையான சுகமல்ல. லூயிக்கு எவ்வாறு வெறுப்புண்டாயிற்றே அவ்வாறே இப்பிரபஞ்சத்தின் உண்மையை யறிந்த ஞானிகளுக்கு இதிலுள்ள சிற்றின்பங்கள் வெறுப்பாகத்தோன்றும்.

ஏகாக்கிரசித்தமாயிருக்க வேண்டிய பெரியோர்கள் யோகாப்பியாஸஞ்செய்கின்றனர். மனது சலிக்காமல் ஓரேநிலையில் நின்றாலன்றி நம்மை நாம் காணமுடியாது. நம்மை நாம் இப்போது காணவில்லையாவெனின் நமது கண் நம்முடைய சரீரத்தைப் பார்க்கிறதேயன்றி நமது கண் நாமாகிய ஆத்மாவைப் பார்க்கவில்லை. ஆத்மாவை தரிசிக்க இவ்வூன் கண்ணால் முடியாது. நமது சரீரம் நாமல்ல. சரீரத்தை நாம் என்று நினைப்பது நாஸ்திகர்களின் காரியம். ஆஸ்திக சிரோமணிகள் யாவருஞ் சரீரத்தை நாமென்று நினையார்கள். காற்றினால் அலைகளுண்டாகும்போதுங் கலங்கியிருக்கும்போதுந் தண்ணீரில் நம்முடைய நிழலை நாம் காணமுடியாது. ஆதலின் சித்தவிர்த்தியின்றி ஓரே நிலையில் மனம் நிற்கும்போது ஆத்மாவைத் தரிசிக்கலாம் யோகமானது சித்தத்தைப் பல விகாரங்களை யடையவொட்டாமல் தடுக்கின்றது.

வெளியேயுள்ள பொருள்களைப் பிடிப்பதற்கு மனம் ஓர் கருவியாகிறது. இந்தப் பத்திரிகையை யெடுத்துக்கொள்வோம் பத்திரிகை யென்ற வியவகாரத்தில் இது வெளியேயில்லை. வெளியேயிருப்பது இன்னதென்று தெரியாது. அதை யறியவும் முடியாது மனதுக்கு ஓர் யோசனை யுண்டாக்கி அதனால் அது அடிபட்டு உடனே அவ்வடியை வெளியே தள்ள பத்திரிகையென்னும் ரூபமுண்டாகிறது. ஓர் கல்லைக் கிணற்றில்போட்டால் கிணற்றுத்தண்ணீருக்கு அடிகிடைக்கிறது. அடியைப்பட்டுக்கொண்ட தண்ணீர் அலைரூபமாகக் கல்லையடிக்கிறது. உண்மையான ஜெகந்தான் மனதிலிருந்து வரும்படியான பிரதி அடிக்கு ஸந்தர்ப்பம் அல்லது காரணம். பத்திரிகை ரூபம், புஸ்தகரூபம், யானைரூபம் ஆகிய ரூபங்கள் ஒன்றும் வெளியேயில்லை. வெளியேயுள்ள உலகத்தால் மனதிற்கு ஓர் அடிகிடைத்து அதன் பிரதிஅடி வெளியே வருவதைத்தான் நாம் காண்கிறோம்.

"தைரியமே பிரதானம்" ஸ்கிட்ஸர்லாண்டு என்னும் மலைநாட்டில் திருடர்களதிகம் அக்தேசத்தில் அஞ்சாததீரராகிய ஸ்காட் என்னும் ஓர்பிரபுவிருந்தார் இவர் ஓர் நாள் குதிரைவண்டியில் காட்டுப்பார்க்கமாய்ச் சவாரி போகையில் ஓர் திருடன் வெகுதைரியமாய் வண்டியிலிருந்த பலகணிவழியாய்ச் சிறு துப்பாக்கியொன்றை நீட்டி ஸ்காட்டன் முகத்துக்கெதிரே பிடித்து "ஓய், நீர் உம்மிடமுள்ள பணத்தைத் தருகிறீரா அல்லது இந்தத் துப்பாக்கியால் சுடட்டுமா ? திருடனிடம் நீர் அகப்பட்டுக் கொண்டதில்லையென்று வீரம்பேசிக்கொண்டீரே, இப்போதென்ன சொல்லுகிறீர்

என்றான். தனவான் தம்முடைய சொக்காய்ப் பைக்குள்ளிருக்கும் பணத்தை யெடுப்பதுபோல் கையைப்போட்டு "அடே, உன்பின்னாலிருப்பவனாலன்றோ நான் அகப்பட்டுக் கொண்டேன். இல்லாவிட்டால் உன்னிடம் நான் அகப்படுவேனா" வென்றார். திருடன் கிழவனென்று திரும்பிப்பார்த்தான். க்ஷணமே தனவான் பையிலிருந்தெடுத்த துப்பாக்கியால் அத் திருடனைச் சுட்டுக்கொன்றார். இந்தக்கதையில் வரும் திருடன் தன் பின்னால் யாரோவிருப்பதாகபிரமித்து திருமபிப்பார்த்து பிராணனையிழந்ததுபோல் அவிவேகிகள் வெளியே சுக மிருக்கிறதென் றெண்ணி அங்குமிங்கு மலைகின்றனர்.

---

ராஜஸ்தானம் என்னுந் திவ்யதேசத்தில் ஓர் பெரியவரிருக்கிறார். அவர் எப்போதுஞ் சிறுபிள்ளைகளிடம் பிரீதிகொண்டு அவர்கள் கேட்குங்கேள்விகளுக்குத் தக்க விடையளிப்பார். எல்லோரையுஞ் சன்மார்க்கத்தில் கொண்டுவந்து தெய்வபக்தியைப் புகட்டவேண்டுமென்பது அவரது முக்கியகருத்து. ஒருநாள் நீலகாந்தன் என்னும் ஓர்பக்தன் அவரிடஞ்சென்று "ஜனங்கள் கடவுளைத் தங்களுக்குப் பரமபிதாவென்றும் ரக்ஷகரென்றுஞ் சொல்லுகிறார்கள். ஆயினும் அவர்விஷயமாய்ப் பணஞ்செலவிட மட்டும் மனமிசைகிறதில்லை. இதற்கென்ன காரணம்?" என்றான். அதற்கு அவர் சொல்லுகிறார். அப்பா! கடவுள் வஞ்சனையில்லாதவர். ஸகல வஸ்துக்களையுஞ் சிருஷ்டித்து அவைகட்குப் பணம்வாங்காமல் இனமாக ஜனங்களுக்குக் கொடுக்கிறார். அதனால் ஜனங்கள் அவரிடம் நன்றிபாராட்டுகிறதில்லை. சூரியனைச் சிலநாள் ஒளித்துவைத்தால் பிரஜைகள் வேண்டிய பணங்கொடுத்துப் பெற்றுக்கொள்வார்கள். காற்றையும் நெருப்பையும் மறைத்துவைத்தால் கலப்பணந்தருகிறோமென்று கதறுவார்கள். பகவான் அவ்வாறு செய்யாமல் யாதொரு வஞ்சனையுமில்லாமல் தாம் படைத்த எல்லாப்பொருள்களையும் பணிகர்களுக்கு இலவசமாய்க் கொடுத்துவிடுகிறார். அதனாலன்றோ மாநதர்கள் நன்றிகெட்டுப்போகின்றனர், என்றார். அதுபோல் உபயோகமான எந்தப்பொருளையும் இலவசமாய்க்கொடுப்பதால் பிறரை நன்றியற்றவர்களாய்ச் செய்வதுடன் அப்பொருளின் பெருமையையுங் குறைத்துவிடுகிறோம். இதனால் தர்மஞ்செய்யப்படாதென்பது கருத்தல்ல. தர்மத்தைச் செய்யவேண்டியதவசியமே. அதை யாருக்குச் செய்யவேண்டியதென்பது அதிஅவசியம். அதை மறந்து கடவுளைப்போல் எல்லோருக்குந் தர்மஞ்செய்வது கூடாது. ஏனெனில் அவருக்கும் நமக்கும் அனேகவித்யாஸங்களுண்டு. நன்றிகெட்டவனைத் தண்டிக்குந்திறமை அவருக்குண்டு. நமக்கு அதில்லை. சூரியனைக் கொடுத்த கடவுளையடியைஸ் தோத்திரஞ்செய்யாத பாதகனது கண்களைக் கடவுள் பொட்டையாக்குகிறார். அவன் தன்கண்திறந்து பிரகாசமடையவேண்டுமானால் சூரியநமஸ்காரஞ் செய்யவேண்டும். ஏதேஷ்டமான தானியங்களை

யளித்ததற்காகப் பரமனிடம் நன்றிபாராட்டாத பாமரனுக்குக் குன்மாதி வியாதியைக் கொடுக்கிறார். அவன் சோறு உண்ணமுடியாமல், தவிக்கிறான். தண்ணீரையருளிய தயாநிதியை மறக்கும் மனிதனைத் தண்டிக்குமாறு கோடைகாலத்தை வருவித்து ஜலத்தை வற்றச்செய்கிறார். அப்போது ஆ,சாமி சாமி! தண்ணீரில்லையே யென்று வருண ஜெபஞ் செய்கிறான். இவ்விசாரண சக்தி பகவானுக்கு உண்டு, நமக்கில்லை. ஆகலின் நாம் உபயோககமான பொருளை அயோக்கியர்களுக்கு விலையின்றிக் கொடுப்பது பெரும்பிசகேயாம்.

---

தன் கடமையைச்செய்யும் வேலைக்காரன் நம்மைக்கண்டெழுந்திருக்காதது பிசகல்ல. அதற்காக நாம் அவனிடங் கோபங்கொள்வது அறியாமையே. முன்னொரு சமயம் ஒரு பிரபுவினிடம் பாட்டுக்காரப் பையனொருவன் பசுங்கற்றின் கழுத்தில் கயிற்றைக்கட்டி இரண்டு கையாலும் இழுத்திவந்தான். அதனைக்கண்ட எஜமானன் ஏன் தனக்கு கும்பிடு போடவில்லையென்றார். அதற்கு அச்சிறுவன் இந்தக்கன்றைநீங்கள் பிடித்துக்கொண்டால் தங்களை இரண்டு கைகளையும் உயரத்தூக்கிக் கூப்பிக் கும்பிடுபோடுவதில் ஆக்ஷேபமில்லை யென்றான். இது சரிதானென்று பிரபுவின் மனதிற்பட்டது.

---

வருத்தமில்லாமையே இன்பமென்பர். வெகு சிரமப்பட்டுசுற்களை யெறிந்து கைகளோய்ந்த பின்னர் விழுந்த ஓர் மாங்காயைத் தின்பதே இன்பமெனப்படுகிறது. வெகுதூரஞ் சுமை தூக்கி அலைந்து திரிந்தவன் சுமை தாங்கிக்கல்லில் மூட்டையை யிறக்கிச் சிலநேரம் அப்பாடாவென்று இளைப்பாறுகிறான். இதுவும்ஒருவித இன்பம். இன்பமென்பது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாய்க் காணப்படுகிறது. ஒருவன் சங்கீதம் கேட்பதில் இன்பங்கொள்ளுகிறான். மற்றொருவன் சுராபானஞ் செய்வதில் இன்பங்கொள்ளுகிறான். இவ்வாறு இன்பமானது பலவகைப்பட்டிருப்பதால் விவேகள் அதைத்தவிர்த்து ஞானத்தைப்பிரதானமாகநாடுகிறார்கள்.

---

"அரியும் அரனும் ஒன்று" ஒருவர் முராரி, மற்றொருவர் புராரி; ஒருவர் ஸ்ரீதரர், ஒருவர் கங்காதரர்; ஒருவர் ரமாபதி, மற்றொருவர் உமாபதி. பெயர்களில்கூட அனேகமாய் வித்தியாஸமின்றி யிருந்தலால் பக்தர்கள் யாவரும் ஒருவரோடொருவர் சண்டை போடாமல் தத்தந்தெய்வங்களைப் போற்றிக் கடைத்தேக்கடவர்;

"துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம்" என மூன்று மதங்களிருக்கின்றன. அனேகமாய் மாத்வர்களெல்லாந் துவைதிகள், ஸ்மார்த்தர்களெல்லாம் விசிஷ்டாத்வைதிகள் அவ்வாறிருந்தும் வே

தாந்திகள் என்னும் பெயர் அத்வைதிகளுக்கே பெரும்பாலும்வழங்குகிறது. இதற்குக் காரணம் யாது? அத்வைதிகள் தங்கள் மதக்கோட்பாடுகளுக்கு அனேகமாய் வேதத்தையே ஆதாரமாகக்கொள்ளுகின்றனர். துவைதிகள் கடவுளானவர் ஜீவாத்மா, பிரகிருதி ஆகிய இரண்டினின்றும் வேறாயிருக்கிறார். ஜீவாத்மா, பிரகிருதி, கடவுள் ஆகிய மூன்றும் லயத்தையடையா. ஆனால் பிரகிருதியும் ஆத்மாக்களும் தோன்றி மாறுகின்றன. கடவுள் மட்டும் மாறுகிறதில்லை. அவருக்கு சரீரமில்லை. குணங்களுண்டு ஸத்குணங்களெல்லாம் அவரிடம் பொருந்தியிருக்கின்றன. துர்க்குணமென்பதுசிறிதேனுமில்லை. இவ்வுலகங்களை ஆக்கியளிப்பவர் அவரே. அவர் இரக்கமுள்ளவர். நீதி தவறாதவர், ஸர்வோத்கர்ஷர், ஸர்வ வல்லமையுள்ளவர். அவரிடம நாம் போகலாம். அவரை ஸ்தோத்திரஞ்செய்யலாம். அவரை நேசிக்கலாம். அவரும் நம்மை நேசிப்பார். அவர் பிரகிருதியினின்றும் உலகத்தைச் சிருஷ்டிக்கிறார். மண்ணைக்கொண்டு குடத்தைச்செய்வது போல் ஈசுவரன் பிரகிருதியினின்று உலகத்தையுண்டாக்குகிறார் இந்தப்பிரகிருதியானது அணுக்கூட்டங்களாலாகியது ஈசுவரனுடைய ஸங்கல்பத்தால் இவ்வணுக்கள் ஒன்று சேர்ந்து பிரகிருதியாகிறது என்கிறார்கள். அத்வைதிகள் அது பிசகென்று கூறுகின்றனர். அணுவென்பது பகுக்கப்படாதது. அகல நீளமற்றதெனின் சூன்யமாயுள்ள அவ்வணுக்கூட்டங்கள் ஒன்று சேரின் பெருஞ்சூன்யமாகுமேயன்றி, பிரகிருதியாகவும் உலகமாகவும் ஆகுமா? ஒரு பூஜ்யத்துடன் ஆயிரம் பூஜ்யங்களைச் சேர்த்தாலும் ஏதேனும்பயனுண்டா? பெருந்தொகையாமா? ஆகலின் துவைதிகள் கூறுவது நியாயத்திற் கொவ்வாதது என்று அத்வைதிகள் ஆக்ஷேபிக்கின்றனர். உலகத்திலுள்ள அனேகர் துவைதிகளாகவே யிருக்கின்றனர். ஸாதாரணமாக மனுஷ்யன் பகவானை ஓர் மனுஷ்ய ரூபமாகப் பாவிக்கக் கூடுமேயன்றி உருவற்றது, குணாதீதம் என்று பாவிக்கமுடியாது. மிகுந்த புத்திசாலிகள் மட்டுமே அத்வைத உண்மைகளை யறிய முடியும்.

"அத்வைதிகளின் மதம் யாது' அத்வைதிகள் என்ன சொல்லுகிறார்கள்? கடவுள் ஒருவருளரேல் அவரே இவ்வுலகத்திற்கு காரணராயும் இவ்வுலகமாயுமிருக்கவேண்டும். அவரே சிருஷ்டிப்பவர். சிருஷ்டிக்கப்படுவோரும அவரே. அவர்தான் இவ்வுலகமும். அது எப்படியிருக்கக்கூடும்? சூக்ஷ்மரூபியும் பரிசுத்தருமான கடவுள் இவ்வுலகமாக எப்படி ஆவார். ஆம் அவ்வாறே ஆகிறார் அஞ்ஞானிகளாகிய நாம் பார்க்கும இவ்வுலகம் உண்மையில் இல்லை. உலகம்பொய். நீ, நான், இதரவஸ்துக்கள் ஆகிய பொருள்களெல்லாம என்ன? எல்லாம் மாயையின் தோற்றங்கள். ஒன்றுதானுண்டு. அது அகண்டமானது. எப்போதுமிருப்பது. அதில் நாம் பற்பல ஸ்வப்னங்களைக் காணுகிறோம். அதுதான் ஆத்மா. அதுமூலமாகவே நாம் இவ்வுலகத்தைப் பார்க்கிறோம். உண்மைப்பொருள் அஃதொன்றே. அது தான் நாற்காலி, அதுதான் சுவர், அதுதா

ன் பூமி, சூரியன், சந்திரன், நக்ஷத்திரம் ஆகிய ஸகல பொருள்களு
ம். அதுபோல நாமமும் ரூபமுந்தான் பொருள்களை வித்யாஸப்படுத்
துகின்றன. அவ்விரண்டையும் நீக்கிப் பார்த்தால் எல்லாம் ஒன்
றெனத் தெரியவரும்.

ஆத்மா ஆணுமன்று பெண்ணுமன்று. ஒவ்வொரு வஸ்துவி
னின்றும் நாமத்தையும் ரூபத்தையும் பிரித்துப்பார். அப்போது
ஆண் பெண் என்ற வியவகாரமிராது. பேதந் தோன்றுவதெல்லா
ம் மாயையின் காரியமேயல்லாது வேறல்ல. நாமத்தையும் ரூபத்
தையும் நீக்கிப்பார்த்தால் ஸகலபொருள்களும் ஒன்றெனவே தோ
ன்றும், இரண்டென்னும் வியவகாரமேயில்லை. ஆத்மா ஒன்றுதா
னுண்டு. மற்ற ஜெகஜீவ பரங்களெல்லாஞ் சொற்பனம். நானும் நீ
யும் ஒன்றுதான் பிரகிருதியுமில்லை சிருஷ்டிப்பவருமில்லை, உலக
முமில்லை, பரப்பிரம்மம் ஒன்றுதானுண்டு. அதினின்றும் நாம ரூப
ங்களாய் பற்பல தோற்றங்களுண்டாகின்றன. அவ்விதத் தோற்ற
ங்களும ஞானிகளுக்கில்லை. சர்வஞ்ஞராகிய பிரம்மத்தைநாம் அறி
யமுடியுமா? உன் ஆத்மாவை நீ எப்படி காணலாம். (உன் கண்ணை
நீ எப்படி பார்க்கலாம், கண்ணாடியில் அதன் பிரதி பிம்பத்தைக்க
ண்டு தெளியலாம் அதுபோல பரப்பிரம்மத்தினிருப்பை அதன்
பிரதி பிம்பமாகிய உலகத்தால் அறியலாம், ஆனால் பிரதி பிம்பம்
உண்மையோ? இல்லை. அதுபோல உலகமும் உண்மையல்ல. கண்
ணாடியில் நாம் பிரதிபிம்பத்தைப் பார்ப்பது பொய்யோ? அல்ல
அதுபோல் நாம் உலகத்தைப் பார்ப்பதும் பொய்யல்ல, ஆகலின்
உலகம் மெய்யுமல்ல, பொய்யுமல்ல. அது இன்னதென்று சொல்ல
முடியாதது. இதைத்தான் அநிர்வசனீயமென்று பெரியோர் கூறு
கின்றனர். ஆத்மா பரிசுத்தமானது. பரிசுத்தமான கண்ணாடியில்
கழுதையின் ரூபங் கழுதையாகவே தோன்றும்!

அதுபோல் ஆத்மா ஒன்றாயினும் வியவகாரதசையில் மனிதர்
களெல்லாந் தங்கள் கர்மங்களுக்குத் தக்கபடி நல்லவர்களாயுங் கெ
ட்டவர்களாயுங் காணப்படுகிறார்கள். தன்னை பிரமமென்று அறி
வதே மோக்ஷம் என்று அத்வைதிகள் கூறுகின்றனர் இதனால் து
வைதமதம் பிசகென்று அத்வைதிகளும் விசிஷ்டாத்வைதிகளுஞ்
சொல்லவில்லை. துவைதமதம் உண்மையைக் கண்டு பிடிப்பதற்கா
ன மார்க்கம் ஆனால் அத்துடன் நின்று விடுவதுமட்டும் பிசகு
முதலில் துவைதத்தில் ஆரம்பித்துப் பின்னர் விசிஷ்டாத் வைதி
யாகி முடிவில் அத்வைதியாக வேண்டும். ஆகலின் எல்லா மதங்க
ளும் உண்மைப் பொருளை அறியும் மார்க்கங்களென்று உணர்ந்த
எதையும் வெறுக்காமல் நல்லஞானத்தைத் தரும்படி பகவானை
போற்றக் கடவோம்.

---

“பொறாமைபொல்லாது” மனிதர்களிலும் விலங்குகளிலு
பொறாமையுடைய பிராணிகள் சுகமடைகிறதில்லை. ஒருவன
வாழ்க்கையையும் ஆக்கத்தையுங் கண்டு பொறாமைப் படுவதா

நமக்கே பெரிய துன்பத்தை விளைவித்துக்கொள்ளுகிறோம். முன்
னாளில் வடாரண்யம் என்னும் காட்டிலுள்ள ஓர்புலத்தில் உச்சை
சிரவம் என்னுங் குதிரைமேய்ந்துகொண்டிருந்தது. வெகுநாளாய்
அப்புலத்தில் வேறு பிராணிகள் வராததால் அது ஒன்றே அங்கு
ள்ள புற்களை யெல்லாந் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டு சுகமா
ய் வாழ்ந்துவந்தது. அவ்வாறிருக்கையில் எங்கிருந்தோ ஓர் ஆண்
மானொன்று வழிதப்பி அப்புலத்தில் வந்து பச்சென்றிருக்கும்
புற்களைக்கண்டு மேய்ந்து அங்கேயே வாஸஞ்செய்யத் தொடங்கி
ற்று. இந்த மானைக் கண்டு பொறாமைகொண்டு குதிரை ஓர் மனித
னிடஞ்சென்று அதைக் கொல்லும்படி வேண்டிக்கொண்டது.

அம்மனிதன் 'நல்லது அப்படியே செய்கிறேன், என்னைமுது
கிலேற்றிக்கொள். மானைக் கொல்லும்வரையில் உன் வாயிற் கடி
வாளம் போடும்படி யனுமதி கொடு' என்றான். குதிரை ஸம்மதித்த
து. உடனே மனுஷ்யன் அதன் வாயிற் கடிவாளத்தைப் போட்
டு முதுகின் மேலேறி உட்கார்ந்துகொண்டான். அதுமுதல் குதி
ரை ஸ்வாதீனத்தை இழந்தது. மான்பேரில் பழிவாங்கச்சென்று
தானே அவஸ்தையில் அகப்பட்டுக்கொண்டது. ஆதலின் எப்போ
தும் பிறரைக்கண்டு பொறாமைபடுகிறதும் ஆசையைகொள்வதும்
நமக்கே துன்பந் தருமாதலின் அவ்விரண்டு துர்க்குணங்களையும்
ஒழிக்கக் கடவோம்.

---

"அத்திப்பழத்தைப் பிட்டுப்பார்த்தால் அத்தனையுஞ்சொத்தை"
யென்பது பொய்யல்ல. வேதாந்த உபன்யாஸஞ் செய்பவர்களெல்
லாம் நம்மை மோக்ஷத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பார்களென்
றெண்ணலாகாது. அவர்களுடைய குணத்தை ஆராய்ந்து பார்த்தா
ல் தெரியவரும். சிலருக்கு பொருளாசையிருக்கும், சிலர் சபையில்
தம்மைப்போன்ற இதரவித்வான்களை பழிப்பார்கள். சிலர் தம்மை
யே ஸ்தோத்திரஞ் செய்துகொள்வார்கள். ஆதலின் உபன்யாஸ
கர்களின் வல்லமையை மட்டும் அறிந்து மகிழ்ந்து அந்த மட்டில்
அவர்களை விட்டுவிட்டு ஸ்வயமாகவே உசிதமான அப்பியாஸங்க
ளைச் செய்யவேண்டும். நல்ல மார்க்கத்திலேயே நம்மனத்தைச் செ
லுத்தவேண்டும். வாய்ப்பேச்சையும் பிரஸங்கத்தையுமட்டுங் கே
ட்டு மோசம் போகலாகாது.

---

"உபகாரிகளுக்கு அபகாரஞ் செய்வது உலகவியல்போ?" மு
ன்னொரு சமயஞ் சாலையோரத்தில் சாய்ந்து வளர்ந்த ஓர் மாமரம்
பல கிளைகளும் அவைகளில் பழங்களும் நிரம்பி அழகாயிருந்தது
அதைப்பார்த்தவர்கள் அதிலுள்ள கனிகளைப்புசிக்கவெண்ணி கல்
லால் எறிந்து பயன் படாவிட்டால் மரத்திலேறி கிளைகளை முறித்து
கொம்புகளையாட்டி இலைகளையசைத்துப் பழங்களைக்குலுக்குவது
வழக்கம். அதைக்கண்டு அம்மரம் அடடா, நாம்பழங்களை வைத்

துக்கொண்டு ஜனங்களுக்கு உபகாரஞ்செய்வதாலன்றோ நம்மேல் அவர்கள் ஏறிமிதித்து ஆட்டியசைத்துக்குலுக்கிக் கல்லைவிட்டெறிகிறார்கள். நாம் பழுக்காமலிருந்தால் மெத்த நன்மையாயிருக்குமேயென்றது. இதனால் உலகத்தில் எப்போதும் உபகாரஞ்செய்வோர்களுக்கு அபகாரஞ்செய்வது அறியாதவர்களின் சுபாவமென்றெண்ணியவரிடமுங் கோபங்கொள்ளாதிருத்தல் பெரியாரினியல்பு.

"நன்றிமறந்தார் நலிவடைவார்" வெகுநாளைக்குமுன் வேட்டைக் காரர்களைக்கண்டு அரண்டோடிவந்த ஓர்மான் அவர்களுடைய கண்ணுக்குப் புலப்படாமல் திராக்ஷைக் கொடிகளுக்கிடையில் பதுங்கியொளிந்தது. வேட்டைக்காரர்கள் அதனிருப்பையறியாது வெடிதீர்த்தகால் அவ்வெடி மான்மேலில் படாமல் வியர்த்தமாய்ப் போயிற்று. மான் சிறிதுநேரத்துக்கெல்லாந் தான் அபாயத்திலிருந்து தப்பித்துக்கொண்டதாக எண்ணி மெள்ள திராக்ஷை இலைகளைத் தின்னத்தொடங்கிற்று. இலைகள் அசைவதைக ஓர் வேட்டைக்காரன் குறிப்பாகப்பார்த்து வில்லில் அம்பைத்தொடுத்து மான்மேரில் விடுத்தான். அதுகாயமடைந்து இறக்கும்போது ஐயோ, என்னைக்காப்பாற்றிய திராக்ஷச்செடியை நான் நன்றிமறந்து தின்னத்தொடங்கினேன். அந்த தோஷத்திற்காக இப்போது பிராணனைவிடுகிறேன் என்றது. ஆகலின் நன்றிகெட்டாருக்கு எப்போதும் இடுக்கண் உண்டாகுமென்பது நிச்சயம்.

---

"பரத்தைப்போற்றி பவத்தையகற்று" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். பரம் என்பது திரிமூர்த்திகளைச் குறிக்கிறது. அவர்களைப் பரப்பிரம்மமென்றறிந்து வணங்கினால் ஸகல தீவினைகளும் நெருப்பிலிட்ட பஞ்சாய்ப் பறக்குமாம். பிரதிதினமும் பிரதிநிமிஷமும் பகவானைப் பிரார்த்திப்பதைவிட வேறுமார்க்கமில்லை. ஆதலின் அவரதுபாதாரவிந்தங்களை ஸதா தியானிக்கக்கடவோம்.

"திரிகரணங்கள் என்பன எவை?" மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றுந் திரிகரணங்களாம். இவற்றால் நாம் புண்யபாவங்களைச் செய்கிறோம். மனதால் ஒருவனைக் கொல்லவேண்டுமென்று நினைப்பது பாவம், வாயால் கொல்லுவேன் என்று சொல்வது அதைவிட அதிகமானபாவம். கொல்வது மகாபாவம். இம்மூன்றுக்குந் தண்டனை படிப்படியாய் அதிகப்படும். புஷ்பங்களையெடுத்து விக்கிரகத்துக்கு அர்ச்சனைசெய்வது புண்யம். ஈசுவரனை வாயால் வழுத்துவது அதைவிட அதிகபுண்யம். எந்த செய்கைக்கும் மனமே காரணமாயிருப்பதால் அதையடக்கியாள்வது அறிவாளிகளின் கடமை கெட்டவழியில் நாடவொட்டாமல் நாளடைவில் மனதைத்தடுத்து நல்வழியில் நடத்துவதற்காகவே ஸமஸ்த கர்மானுஷ்டானங்களு மேற்பட்டிருக்கின்றன. ஆதலின் நாம் கர்மங்களை யனுஷ்டிக்கவேண்டும். ஒவ்வொரு படியாய் ஏறி மெத்தைக்குபோவதுபோல் விவேகியானவன் கர்மம், பக்தி முதலிய மார்க்கங்களை யனுஸரித்துக் கடைசியில் ஞானியாகவேண்டும்.

---

“சுருதி யுக்தி யனுபவம்” என்னும் மூன்றனுள் இரண்டாவதாகிய யுக்தியைப்பற்றி ஓர் கதைசொல்வோம். கங்காநதிதீரத்தில் இலந்தைவனத்தில் ஸ்ரீஜெயசேகரி என்னும் ஓர் சிங்கம் வசித்துக்கொண்டிருந்தது. ஓர்நாள் இரையகப்படாமல் அது திரிந்துகொண்டிருக்கையில் ஒரு குடியானவனும் அவனுடைய அழகியபெண்ணும் எதிர்ப்பட்டனர். ஸிம்ஹம் குடியானவனைப்பிடித்துப் புசிக்க எத்தனித்தது அவன் ஐயா, ஸிம்ஹராஜாவே நான் தங்கள் வலிக்கு எம்மாத்திரம். யானையைக்கொன்று தின்பதன்றோ தங்களுடைய கவுரவத்துக்கழகு. என்னைத் தயைசெய்து விட்டுவிடவேண்டும் என்று கெஞ்சினான். குடியானவன்செய்த ஸ்தோத்திரத்தைக்கேட்டு ஸிம்ஹம் ஸந்தோஷமடைந்து “நல்லது உன்னை மன்னித்தேன், ஆனால் எனக்கு ஒரு விருப்பமுண்டாயிருக்கிறது. அது என்னவெனில் உன்னுடைய பெண்ணைக் கல்யாணஞ் செய்யவேண்டுமென்னும் எண்ணம் பலமாயிருக்கிறது. ஆதலின் நீ இப்போதே நல்ல முகூர்த்தம் பார்த்து அவளை எனக்கு விவாகஞ்செய்துகொடு” என்றது. குடியானவன் பயமடைந்து இதற்கென்ன செய்வதென்று யோசித்தான். சிலநேரங்கழித்து சிங்கத்தை நோக்கி “ஐயா, ஸிம்ஹராஜனே தங்களுடைய இஷ்டப்படியே என் பெண்ணைக்கொடுக்கிறேன். ஆனால் ஒரு விஞ்ஞாபனமுளது. என் குமாரத்தி தங்கள்பற்களையும் நகத்தையுங்கண்டு பயமடைகிறாள். அவைகளை தட்டிவிடும்படி எனக்கு அனுமதி கொடுத்தால் பிறகு உங்கள்பேரில் மோஹங் கொள்வாள்” என்றான். கேசரி அதற்கு ஸம்மதிக்கவே குடியானவன் ஒரு பல்லைக்கூட தவிரவிடாமல் தட்டியெறிந்து நகங்களைப் பெயர்த்தான். அதன் பிறகு கண்டீரவங் குடியானவனை நோக்கி ஏன் இன்னுந்தாமதம், உன் பெண்ணை வரச்சொல்லென, அவன் பெரிய தடியைதூக்கி சிங்கத்தின்முதுகில் மொத்த அது அவனையெதிர்க்கமாட்டாமல்வெட்கிஓடிப்போயிற்று.

---

“ஸ்தானம்வேறு பொருள்வேறு” மாஜிஸ்திரேட் என்னும் ஸ்தானத்துக்கு மரியாதையேயன்றி அவ்வதிகாரத்தைவகிக்கும் ஆசாமிக்கு மரியாதையில்லை. எவன் எந்த பீடத்திலேறுகிறானோ அவன் அந்த பீடத்திலிருக்கும்வரை மரியாதை பெறுகிறான். இடம் விட்டுப்பெயர்ந்தால் இருந்த கௌரவம் பறந்துபோகிறது. இதை அறியாமல் அநேகர் தங்களுக்கு இயல்பாயே யாரும் மரியாதை செய்யவேண்டுமென்னுங் கர்வங்கொண்டு ஏழைகளை ஹிம்ஸிக்கின்றனர். இத்தகையோருக்குப் புத்திவருமாறு அடியில்வருங் கதையைக்கூறுகிறோம். முற்காலத்தில் கிரீஸ் என்னும் நாட்டின் பிரதானநகரில் ஓர் பெரிய கோயிலைக்கட்டி அதில்விக்கிரகத்தை ஸ்தாபிக்கவெண்ணி சில கனவான்கள் ஒன்றுகூடி ஒருகழுதையின்மேல் புதிதாய்ச்செய்த விக்கிரகத்தை வைத்து வீதிவழியே ஓட்டிவந்தனர். அவ்விக்கிரகத்தைகண்ட ஜனங்களெல்லோரும் வீதியில்

ன் பூமி, சூரியன், சந்திரன், நக்ஷத்திரம் ஆகிய ஸகல பொருள்களும். அதுபோல நாமமும் ரூபமுந்தான் பொருள்களை வித்யாஸப்படுத்துகின்றன. அவ்விரண்டையும் நீக்கிப் பார்த்தால் எல்லாம் ஒன்றெனத் தெரியவரும்.

ஆத்மா ஆணுமன்று பெண்ணுமன்று. ஒவ்வொரு வஸ்துவினின்றும் நாமத்தையும் ரூபத்தையும் பிரித்துப்பார். அப்போது ஆண் பெண் என்ற வியவகாரமிராது. பேதந் தோன்றுவதெல்லாம் மாயையின் காரியமே யல்லாது வேறல்ல. நாமத்தையும் ரூபத்தையும் நீக்கிப்பார்த்தால் ஸகலபொருள்களும் ஒன்றெனவே தோன்றும், இரண்டென்னும் வியவகாரமேயில்லை. ஆத்மா ஒன்றுதானுண்டு. மற்ற ஜெகஜீவ பரங்களெல்லாஞ் சொற்பனம். நானும் நீயும் ஒன்றுதான் பிரகிருதியுமில்லை சிருஷ்டிப்பவருமில்லை, உலகமுமில்லை, பரப்பிரம்மம் ஒன்றுதானுண்டு. அதினின்றும் நாம ரூபங்களாவ் பற்பல தோற்றங்களுண்டாகின்றன. அவ்விதத் தோற்றங்களும் ஞானிகளுக்கில்லை. சர்வஞ்ஞராகிய பிரம்மத்தைநாம் அறியமுடியுமா? உன் ஆத்மாவை நீ எப்படி காணலாம். (உன்கண்ணை நீ எப்படி பார்க்கலாம், கண்ணாடியில் அதன் பிரதி பிம்பத்தைக்கண்டு தெளியலாம் அதுபோல் பரப்பிரம்மத்தினிருப்பை அதன் பிரதி பிம்பமாகிய உலகத்தால் அறியலாம், ஆனால் பிரதி பிம்பம் உண்மையோ? இல்லை. அதுபோல உலகமும் உண்மையல்ல. கண்ணாடியில் நாம் பிரதிபிம்பத்தைப் பார்ப்பது பொய்யோ? அல்ல அதுபோல் நாம் உலகத்தைப் பார்ப்பதும் பொய்யல்ல, ஆதலின் உலகம் மெய்யுமல்ல, பொய்யுமல்ல. அது இன்னதென்று சொல்ல முடியாதது. இதைத்தான் அநிர்வசனீயமென்று பெரியோர் கூறுகின்றனர். ஆத்மா பரிசுத்தமானது. பரிசுத்தமான கண்ணாடியில் கழுதையின் ரூபங் கழுதையாகவே தோன்றும்!

அதுபோல் ஆத்மா ஒன்றாயினும் வியவகார தசையில் மனிதர்களெல்லாந் தங்கள் கர்மங்களுக்குத் தக்கபடி நல்லவர்களாயுங் கெட்டவர்களாயுங் காணப்படுகிறார்கள். தன்னை பிரமமென்று அறிவதே மோக்ஷம் என்று அத்வைதிகள் கூறுகின்றனர் இதனால் துவைதமதம் பிசகென்று அத்வைதிகளும் விசிஷ்டாத்வைதிகளுஞ் சொல்லவில்லை. துவைதமதம் உண்மையைக் கண்டு பிடிப்பதற்கான மார்க்கம் ஆனால் அத்துடன் நின்று விடுவதுமட்டும் பிசகு. முதலில் துவைதத்தில் ஆரம்பித்துப் பின்னர் விசிஷ்டாத் வைதியாகி முடிவில் அத்வைதியாக வேண்டும். ஆதலின் எல்லா மதங்களும் உண்மைப் பொருளை அறியும் மார்க்கங்களென்று உணர்ந்து எதையும் வெறுக்காமல் நல்லஞானத்தைத் தரும்படி பகவானைப் போற்றக் கடவோம்.

---

“பொறாமைபொல்லாது” மனிதர்களிலும் விலங்குகளிலும் பொறாமையுடைய பிராணிகள் சுகமடைகிறதில்லை. ஒருவனது வாழ்க்கையையும் ஆக்கத்தையுங் கண்டு பொறாமைப் படுவதால்

நமக்கே பெரிய துன்பத்தை விளைவித்துக்கொள்ளுகிறோம். முன்னாளில் வடாரண்யம் என்னும் காட்டிலுள்ள ஓர்புலத்தில் உச்சைசிரவம் என்னுங் குதிரைமேய்ந்துகொண்டிருந்தது. வெகுநாளாய் அப்புலத்தில் வேறு பிராணிகள் வராததால் அது ஒன்றே அங்குள்ள புற்களை யெல்லாந் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டு சுகமாய் வாழ்ந்துவந்தது. அவ்வாறிருக்கையில் எங்கிருந்தோ ஓர் ஆண்மானொன்று வழிதப்பி அப்புலத்தில் வந்து பச்சென்றிருக்கும் புற்களைக்கண்டு மேய்ந்து அங்கேயே வாஸஞ்செய்யத் தொடங்கிற்று. இந்த மானைக்கண்டு பொறாமைகொண்டு குதிரை ஓர் மனிதனிடஞ்சென்று அதைக் கொல்லும்படி வேண்டிக்கொண்டது.

அம்மனிதன் 'நல்லது அப்படியே செய்கிறேன், என்னைமுதுகிலேற்றிக்கொள். மானைக் கொல்லும்வரையில் உன் வாயிற் கடிவாளம்போடும்படி யனுமதிகொடு' என்றான். குதிரை ஸம்மதித்தது. க்ஷணமே மனுஷ்யன் அதன் வாயிற் கடிவாளத்தைப் போட்டு முதுகின் மேலேறி உட்கார்ந்துகொண்டான். அது முதல் குதிரை ஸ்வாதீனத்தை இழந்தது. மான்பேரில் பழிவாங்கச்சென்று தானே அவன்கையில் அகப்பட்டுக்கொண்டது. ஆதலின் எப்போதும் பிறரைக்கண்டு பொறாமைபடுகிறதும் ஆசையைகொள்வதும் நமக்கே துன்பந் தருவதாதலின் அவ்விரண்டு துர்க்குணங்களையும் ஒழிக்கக் கடவோம்.

---

"அத்திப்பழத்தை பிட்டுப்பார்த்தால் அத்தனையுஞ்சொத்தை" யென்பது பொய்யல்ல. வேதாந்த உபன்யாஸஞ் செய்பவர்களெல்லாம் நம்மை மோக்ஷத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பார்களென்றெண்ணலாகாது. அவர்களுடைய குணத்தை ஆராய்ந்து பார்த்தால் தெரியவரும். சிலருக்கு பொறாமையிருக்கும், சிலர் சபையில் தம்மைப்போன்ற இதரவித்வான்களை பழிப்பார்கள். சிலர் தம்மையே ஸ்தோத்திரஞ் செய்துகொள்வார்கள். ஆதலின் உபன்யாஸகர்களின் வல்லமையை மட்டும் அறிந்து மகிழ்ந்து அந்த மட்டில் அவர்களை விட்டுவிட்டு ஸ்வயமாகவே உசிதமான அப்பியாஸங்களைச் செய்யவேண்டும். நல்ல மார்க்கத்திலேயே நம்மனதைச் செலுத்தவேண்டும். வாய்ப்பேச்சையும் பிரஸங்கத்தையுமட்டுங் கேட்டு மோசம் போகலாகாது.

---

"உபகாரிகளுக்கு அபகாரஞ் செய்வது உலகவியல்போ?" முன்னொருசமயஞ் சாலையோரத்தில் சாய்ந்து வளர்ந்த ஓர் மாமரம் பல கிளைகளும் அவைகளில் பழங்களும் நிரம்பி அழகாயிருந்தது. அதைப்பார்த்தவர்கள் அதிலுள்ள கனிகளைப்புசிக்கவெண்ணி கல்லால் எறிந்து பயன் படாவிட்டால் மரத்திலேறி கிளைகளை மிதித்து கொம்புகளையாட்டி இலைகளையசைத்துப் பழங்களைக்குலுக்குவது வழக்கம். அதைக்கண்டு அம்மரம் அடடா, நாம்பழங்களை வைத்

துக்கொண்டு ஜனங்களுக்கு உபகாரஞ்செய்வதாலன்றோ நம்மேல்
அவர்கள் எறிமிதித்து ஆட்டிமைசைத்தாக்குலுககிக் கல்லை விட்டெறி
கிறார்கள். நாம் பழுக்காமலிருந்தால் மெகத நன்மையாயிருக்கு
மேயென்றது. இதனால் உலகத்தில் எப்போதும் உபகாரஞ்செய்
வோர்களுக்கு அபகாரஞ்செய்வது அறியாதவர்களின் சுபாவமென்
றெண்ணியவரிடமுங் கோபங்கொள்ளாதிருத்தல் பெரியாரினியல்பு.

"நன்றிமறந்தார் நலிவடைவார்" வெகுநாளைக்குமுன் வேட்
டைக் காரர்களைக்கண்டு அரண்டோடிவந்த ஓர்மான் அவர்களுடை
ய கண்ணுக்குப் புலப்படாமல் திராக்ஷக் கொடிகளுக்கிடையில் ப
துங்கியொளிந்தது. வேட்டைக்காரர்கள் அதனிருப்பையறியாது
வெடிதீர்த்ததால் அவ்வெடி மான் மேரில் படாமல் வியர்த்தமாய்ப்
போயிற்று. மான் சிறிதுநேரத்துக்கெல்லாந் தான் அபாயத்திலிரு
ந்து தப்பித்துக்கொண்டதாக எண்ணி மெள்ள திராக்ஷ இலைகளைத்
தின்னத்தொடங்கிற்று. இலைகள் அசைவதை ஓர் வேட்டைக்கா
ரன் குறிப்பாகப்பார்த்து வில்லில் அம்பைத்தொடுத்து மான்மே
ரில் விடுத்தான். அதுகாயமடைந்து இறக்கும்போது ஐயோ, என்
னைக்காப்பாற்றிய திராக்ஷச்செடியை நான் நன்றிமறந்து தின்னத்
தொடங்கினேன். அந்த தோஷத்திற்காக இப்போது பிராணனைவி
டுகிறேன் என்றது. ஆகலின் நன்றிகெட்டாருக்கு எப்போதும்
இடுக்கண் உண்டாகுமென்பது நிச்சயம்.

---

"பரத்தைப்போற்றி பவத்தையகற்று" என்று பெரியோர் கூ
றியிருக்கின்றனர். பரம் என்பது திரிமூர்த்திகளைக் குறிக்கிறது.
அவர்களைப் பரப்பிரம்மமென்றறிந்து வணங்கினால் ஸகல தீவினைக
ளும் நெருப்பிலிட்ட பஞ்சாய்ப் பறக்குமாம். பிரதிதினமும் பிரதி
நிமிஷமும் பகவானைப் பிரார்த்திப்பதைவிட வேறுமார்க்கமில்லை.
ஆதலின் அவரதுபாதாரவிந்தங்களை ஸதா தியானிக்கக்கடவோம்.

"திரிகரணங்கள் என்பன எவை?" மனம், வாக்கு, காயம்
ஆகிய மூன்றுந் திரிகரணங்களாம். இவற்றால் நாம் புண்யபாவங்க
ளைச் செய்கிறோம். மனதால் ஒருவனைக் கொல்லவேண்டுமென்று
நினைப்பது பாவம், வாயால் கொல்லுவேன் என்று சொல்வது அ
தைவிட அதிகமானபாவம். கொல்வது மகாபாவம். இம்மூன்றுக்
குந் தண்டனை படிப்படியாய் அதிகப்படும். புஷ்பங்களையெடுத்து விக்
கிரகத்துக்கு அர்ச்சனைசெய்வது புண்யம். ஈசுவரனை வாயால் வழு
த்துவது அதைவிட அதிகபுண்யம். எந்த செய்கைக்கும் மனமே
காரணமாயிருப்பதால் அதையடக்கியாள்வது அறிவாளிகளின்கட
மை கெட்டவழியில் நாடவொட்டாமல் நாளடைவில் மனதைத்த
டுத்து நல்வழியில் நடத்துவதற்காகவே ஸமஸ்த கர்மானுஷ்டான
ங்களு மேற்பட்டிருக்கின்றன. ஆதலின் நாம் கர்மங்களை யனுஷ்டி
க்கவேண்டும். ஒவ்வொரு படியாய் ஏறி மெத்தைக்குபோவதுபோ
ல் விவேகியானவன் கர்மம், பக்தி முதலிய மார்க்கங்களை யனுஸரி
த்துக் கடைசியில் ஞானியாகவேண்டும்.

---

"சுருதி யுக்தி யனுபவம்" என்னும் மூன்றனுள் இரண்டாவதாகிய யுக்தியைப்பற்றி ஓர் கதைசொல்வோம். கங்காநதிதீரத்தில் இலந்தைவனத்தில் துர்ஜெயசேகரி என்னும் ஓர் சிங்கம் வசித்துக்கொண்டிருந்தது. ஓர்நாள் இரையகப்படாமல் அது திரிந்துகொண்டிருக்கையில் ஒரு குடியானவனும் அவனுடைய அழகியபெண்ணும் எதிர்ப்பட்டனர். ஸிம்ஹம் குடியானவனைப்பிடித்துப் புசிக்க எத்தனித்தது அவன் ஐயா, ஸிம்ஹராஜாவே நான் தங்கள் வலிக்கு எம்மாத்திரம். யானையைக்கொன்று தின்பதன்றோ தங்களுடைய கவுரவக்குக்கழகு. என்னைத் தயைசெய்து விட்டுவிடவேண்டும் என்று கெஞ்சினான். குடியானவன்செய்த ஸ்தோத்திரத்தைக்கேட்டு ஸிம்ஹம் ஸந்தோஷமடைந்து "நல்லது உன்னை மன்னித்தேன், ஆனால் எனக்கு ஒரு விருப்பமுண்டாயிருக்கிறது. அது என்னவெனில் உன்னுடைய பெண்ணைக் கல்யாணஞ் செய்யவேண்டுமென்னும் எண்ணம் பலமாயிருக்கிறது. ஆதலின் நீ இப்போதே நல்ல முகூர்த்தம் பார்த்து அவளை எனக்கு விவாகஞ்செய்துகொடு" என்றது. குடியானவன் பயமடைந்து இதற்கென்ன செய்வதென்று யோசித்தான். சிலநேரங்கழித்து சிங்கத்தை நோக்கி "ஐயா, ஸிம்ஹராஜனே தங்களுடைய இஷ்டப்படியே என் பெண்ணைக்கொடுக்கிறேன். ஆனால் ஒரு விஞ்ஞாபன முளது. என் குமாரத்தி தங்கள்பற்களையும் நகத்தையுங்கண்டு பயமடைகிறாள். அவைகளை கட்டிவிடும்படி எனக்கு அனுமதி கொடுத்தால் பிறகு உங்கள்பேரில் மோஹங் கொள்வாள்" என்றான். கேசரி அதற்கு ஸம்மதிக்கவே குடியானவன் ஒரு பல்லைக்கூட தவிரவிடாமல் தட்டியெறிந்து நகங்களைப் பெயர்த்தான். அதன் பிறகு கண்டீரவங் குடியானவனை நோக்கி ஏன் இன்னுந்தாமதம், உன் பெண்ணை வரச்சொல்என, அவன் பெரிய தடியைதூக்கி சிங்கத்தின்முதுகில் மொத்த அது அவனை எதிர்க்கமாட்டாமல்வெட்கிஓடிப்போயிற்று.

---

"ஸ்தானம்வேறு பொருள்வேறு" மாஜிஸ்திரேட் என்னும் ஸ்தானத்துக்கு மரியாதையேயன்றி அவ்வதிகாரத்தைவகிக்கும் ஆசாமிக்கு மரியாதையில்லை. எவன் எந்த பீடத்திலேறுகிறானோ அவன் அந்த பீடத்திலிருக்கும்வரை மரியாதை பெறுகிறான. இடம் விட்டுப்பெயர்ந்தால் இருந்த கௌரவம் பறந்துபோகிறது. இதை அறியாமல் அனேகர் தங்களுக்கு இயல்பாயே யாரும் மரியாதை செய்யவேண்டுமென்னுங் கர்வங்கொண்டு ஏழைகளை ஹிம்ஸிக்கின்றனர். இத்தகையோருக்குப் புத்திவருமாறு அடியில்வருங் கதையைக்கூறுகிறோம். முற்காலத்தில் கிரீஸ் என்னும் நாட்டின் பிரதானநகரில் ஓர் பெரிய கோயிலைக்கட்டி அதில்விக்கிரகத்தை ஸ்தாபிக்கவெண்ணி சில கனவான்கள் ஒன்றுகூடி ஒருகழுதையின்மேல் புதிதாய்ச்செய்த விக்கிரகத்தை வைத்து வீதிவழியே ஓட்டிவந்தனர். அவ்விக்கிரகத்தைகண்ட ஜனங்களெல்லோரும் வீதியில்

ஸாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தனர். கழுதை பார்த்தது. ஓகோ! நம்மைக்கண்டன்றோ இத்தனை ஜனங்களும் அடிபணிகின்றனர். நமக்குள்ள சிறப்பு வேறுயாருக்கு வரும் என்று கர்வங்கொண்டு ஒய்யாரநடை போடத்தொடங்கியது. கழுதை ஓட்டுபவன் அது மந்தமாய்ப் போவதைக்கண்டு தடிகொண்டு சாடினான். அப்போதுதான் கழுதைக்குப் புத்திவந்தது. ஓகோ நாம் தாங்கிகொண்டிருக்கும் விக்கிரகத்துக்கன்றோ ஜனங்கள் மரியாதை செய்கின்றனர். நமக்கல்ல, இனி, நாம் கர்வப்பட்டு விரைவாய்ப்போகாதிருந்தால் ஓட்டுகிறவன் கொடுக்கும் பூசையால் உயிர் போய்விடுமென்றறிந்து ஓடத்தொடங்கியது. இதைப்போல் அதிகாரம் விக்கிரகமாகவும் அதை வகிப்பவர் ஸாதாரணப் பிராணியாகவு மிருப்பதால் மாந்தர்களில் எவரும் கர்வங்கொள்ள நியாயமில்லை.

---

"மௌனம் ஸர்வார்த்த ஸாதகம்" என்று பழமொழியுண்டு. மௌனத்தின் பெருமையை தக்ஷிணாமூர்த்தியென்னும் பரமகுரு ஸனகாதியோகிகட்கு அறிவித்திருக்கிறார். அந்த நிலைமையை அடைவதென்றால் எளிதல்ல. ஆனால் அந்நிலைமையை அடைந்தவர்கள் அனுபவிக்கும் ஆனந்தத்தை யொருவாறு நாம் ஊகிக்கக்கூடும். இவ்வுலகத்தில் அதிகமாண வியாபாரத்தை வைத்துக்கொள்ளாமல் பிரவிருத்தியைக் கொஞ்சங்கொஞ்சமாய் விடுவது மனதிற்கு ஸந்தோஷத்தைத் தருகிறது. கவலைநீங்கினால் வியஸனமில்லை. உலகிலுள்ளாரை இருவகையாகப் பிரிப்போம். நல்லவர்கள் கெட்டவர்களென்னு மிருவகுப்பாருள் கெட்டவர்களுடன் ஸகவாஸஞ் செய்யாமலிருப்பதால் பல கவலைகளையுந் துன்பத்தையும் நீக்கிக்கொள்ளலாம். புற்றுக்கருகில் வஸித்தால் பாம்பு கடிக்குமோவென்னும் பயமுண்டாகும். அதைவிட்டகன்றால் அந்தபயமும் நீங்குகிறதன்றோ. இதையனுசரித்தே துஷ்டனைக்கண்டால் தூரவிலகென்று பெரியோர் கூறுகின்றனர். இப்போது நல்லவர் கெட்டவர் என்னுமிருவகுப்பாரில் கெட்டவரின் நேசத்தை யொழிப்பதால் நாம் கொள்ளவேண்டிய கவலையிற்பாதியை யொழித்துவிடுகிறோம் முன் இருவகையாரோடும் நேசஞ்செய்தகாலத்தில் நமக்கிருந்த சுகத்தைவிட இப்போது ஒருவகையாரோடுமட்டும் நாம் நட்புகொள்வதால் அதிக சுகமுண்டாகிறது. சுகமென்பது கஷ்டமின்றியிருத்தலைக் குறிக்கிறது. மூட்டைதூக்குகிறவன் அதை யிறக்கியபின் சுகமாயிருக்கிறதென்கிறான். இதனால் கவலையின்றியிருத்தல் சுகமென்றேற்படுகிறது. நல்லோர் என்ற ஓர்வகுப்பிலும் விவேகிகளோடுமட்டும் ஸம்பாஷிப்பதென்றும் மற்றவர்களுடன் ஏதேனுங்கேட்டகேள்விக்குமட்டும் மறுமொழிசொல்லி சும்மாவிருப்பது நலமென்றும் எண்ணி அவ்வாறுசெய்வது அதிக ஆனந்தத்தைத் தரும். எவரெவர் எந்தெந்தவிஷயத்தைச் சிலாகித்துப்பேசினாலும் அவரவர்க்குத் தக்கபடி அனுஸரித்து விடைகொடுப்பதால் மிகுந்த

நன்மையை அடைகிறோம். எந்த மனுஷ்யன் நாம் கொண்டகருத்துக்கிசைந்து சொல்லுகிறானோ அந்த மனிதனிடம் நமக்குப் பிரீதி உண்டாவது ஸகஜம். அதன்பிறகு ஒருவர் காரியத்திலுந் தலையிட்டுக்கொள்ளாமல் தனிமையாயிருப்பது சுகத்தைவிளைக்கிறது. இதை நூற்றான் இனிது இனிது ஏகாந்தமினிது என்று ஔவை கூறியிருக்கிறாள். இவ்வாறு ஏகாந்தமாயிருந்து அனுபவிக்கும் ஆனந்தத்தைவிட அவ்வேகாந்தத்தில் மௌனமாயிருந்து எல்லாவஸ்துக்களையும் பிரம்மஸ்வரூபமாகப்பார்ப்பது மகத்தாகிய ஆனந்தம், இதுவே பிரம்மாநந்த மெனப்படுகிறது.

---

ஒரு பெரிய மனிதன் இரண்டாட்களுக்குச் சம்பளங்கொடுத்து இராப்பகலாய் பங்கா இழுக்கச்சொல்லுகிறான். இவனுக்குள்ள ஆனந்தத்தைவிட ஏழையாகிய ஒருவன் ஆற்றங்கரையில்நின்று சுகமாய் வீசுங்காற்றை ஸ்பரிசிப்பது எத்தனை சந்தோஷத்தை விளைக்கும். ஸங்கீதவித்வானுக்கு ஏராளமான பணத்தைக்கொடுத்து அவனிடங்கேட்கும் பாட்டைவிட மெத்திற் கிளிகள் பாடுவதைக் கேட்டு ஸந்தோஷிப்பதுமேல். காட்டிலுள்ள அருவிகள் ஓடுவதைக்கண்டு நாம் ஆனந்தங்கொள்வதில் யாது தடை? இம்மாதிரி ஸகல ஸுகங்களும் ஏழை பணக்காரனென்ற வித்தியாஸமின்றி ஸர்வேசுவரனால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

---

"கிர்ஷ்ண, கிர்ஷ்ண, கிர்ஷ்ண" வென்றால் மகா பாதங்களெல்லாம் விநாசமாகின்றன. கருடன் தினமொன்றுக்கு ஆயிரம் பாம்பைக்கொன்றுங் கிர்ஷ்ணவென்று சப்திப்பதால் ஸகல பாபங்களும் நீங்கி ஸர்வஜனங்களாலும் போற்றப்படுகிறது. விருஷபமோ புல்லைத்தின்று நிலத்தையுழுது வண்டியையிழுத்து மனிதர்க்குப் பல உதவிகள்செய்துங் கிர்ஷ்ண ஸ்மரணை செய்யாதகாரணத்தால் அவஸ்தைப்படுகிறது. கட்டுததறியில் கட்டப்படுகிறது. பட்டியில் அடைக்கப்படுகிறது. படாதபாடு படுகிறது. கருடனைக் கண்டால் ஹரி ஹரி யென்று கையெடுத்துக் கும்பிடுகிறார்கள். காளை மாட்டைக்கண்டால் அடி அடி யென்று தடியெடுத்துப்புடைக்கிறார்கள். கருடனுக்கு தாங்களே ஆகாரங்களை விட்டெறிகின்றனர். காளை மாடு ஒருநெல் நெல்லைத்தின்றால் விரட்டுகின்றனர். ஒருவிதத்திலும் உபயோகமாகாத மாம்ஸ பக்ஷணியான கருடன் கிர்ஷ்ண ஸ்மரணை செய்வதால் பெருமையடைந்திருப்பதையும் பலவிதத்தில் உபயோகப்படுஞ் சாகபக்ஷணியான விருஷபம் அந்த ஸ்மரணையைச் செய்யாததால் சிறுமை யடைந்திருப்பதையும் பிரத்தியக்ஷமாகக் காண்கிறோம். ஆதலின் நாம் எப்போதுங் கிர்ஷ்ணனை ஸ்துதித்து பெருமை அடையக்கடவோம்.

"உருவுகண்டெள்ளாமை வேண்டும்" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். இரத்னக்கல் வெகு சிறிது, விலையோ ஆயிரம்

பதினாயிரம். கருங்கல் வெகுபெரிது, கூலிகொடுத்தாலுங் கொண்டுபோகார்கள். வியாதி பெரிது. அதை நிவர்த்திசெய்யும் மருந்து சிறிது. ஆத்மா அணுவிலும் அணு. அது ஒன்றில்லையானால் சரீரங் கட்டைதான். கால் கை முதலிய உறுப்புகள் அசைவற்றுப்போகின்றன. ஆதலின் புத்திமான் உருவத்தைக்கண்டு பெருமைபாராட்டான். எந்த வஸ்துவும் அதன் குணத்தினாலே மகிமையடைகிறது. இதற்கொரு கதை சொல்லுகிறோம் முன்னொரு சமயம் ஓரரசன் அரண்மனையில் சதிர்கச்சேரியொன்று நடந்தது. அதைப் பார்க்கவேண்டி ஆசைகொண்ட ஏழையாகிய ஓர் தமிழ் வித்துவான் மெள்ள உள்ளே நுழையத்தொடங்கினான். சேவகர்கள் கழுத்தைப்பிடித்து நெட்டித் தள்ளியதால் மனவருத்த மடைந்து ஓர் யுக்திசெய்தான்.

"வெள்ளையுஞ் சள்ளையுமுண்டானால் வேண்டியகாரியம் ஸாதிக்கலாம்" என்று வெள்ளையான உடைதரித்து அரை ரூபாய் கொடுத்து வாடகைப் பல்லக்கில் வந்து வாசற்காப்போனிடம் இராமனுக்கு அண்ணன் வந்திருப்பதாய் தெரிவி என்றான். அவ்வாறே காவலாளி உள்ளேசென்று தெரிவிக்க அரசன் அதிசயப்பட்டு ராமனுக்குப் பரதன், லக்ஷமணன், சத்துருக்னன் என்ற தம்பிகளுண்டு. அண்ணனில்லையே, இதென்ன ஆச்சரியமென்று அவரை உள்ளே அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவ்வரசனுடைய ராஜ்யத்தில் பொய் சொல்லுகிறவர்களின் தலையைவெட்டிவிடுவதென்னும் விதியிருந்தது, வித்துவான் அரசனுக்கெதிரில் உட்கார்ந்தார். மன்னன் அவரை நோக்கி 'நீர் யார்?' என, அவர் "நான் இராவணனை ஸம்ஹாரஞ்செய்த ஸ்ரீராமனுக்கு அண்ணன்" என்று பயப்படாமல் சொன்னார். உடனே அரசன் அதை நீர் ருஜுப்படுத்தாவிட்டால் உம்முடைய தலையை இப்போதே வாங்கிவிடுவேன் என, வித்வான் சற்றேனும் பயப்படாமல் "நல்லது, அரசனே உம்முடைய ஸமஸ்தானத்திலுள்ள பெரியவைத்தியரை அழைப்பியும்" என்றான். அவர் வந்தவுடன் வித்வான் தன் காலை நீட்டி 'இதிலென்ன இருக்கிறது' சொல்லுமென "வைத்தியர் வாயுபிடிப்பு" உண்டென்றார். உடனே வித்வான் 'ஸரி, அரசனே, ஸ்ரீராமருடைய பாதத்தை ஹனுமார் தாங்கினார்.' ஆதலின்நான் ராமனைவிடப் பெருமை பெற்றவன். அதனாலே ராமனுக்குஅண்ணன் என்றேன் என, எல்லோருங் கலீரென்று நகைத்தார்கள். பிறகு அரசன் அவர் நல்ல வித்வானென்றும் அவரது உருவத்தைக்கண்டு காவலாளிகள் அலக்ஷியஞ் செய்ததற்காக இவ்வாறு யுக்தி செய்தாரென்றும் அறிந்துகொண்டான். இதனால் ஒருவன் தன்னை உயர்ந்தவனாகச் சொல்லிக்கொண்டால் மட்டும் போதாது. எந்த விஷயத்தில் உயர்ந்தவன் என்பதை விவேகிகள் கவனிக்க வேண்டுமென்றேற்படுகிறது.

---

"உண்பான் உடுப்பான் சிவப்பிராமணன் குத்துக்கு நிற்பான் வீரமுஷ்டி" என்றொரு பழமொழி யுண்டு. அதுபோல்பெரியோர்

களாற் செய்யப்பட்ட கிரதங்களை வாசிப்பவர்களாயும் அவர்களால் விதிக்கப்பட்ட ஆசாரங்களை அனுஸரிப்பவர்களாயும் அனேகரிருக்க நாம் அவர்கள் செய்யத்தகாதென்று விலக்கிய கருமங்களையும் அனுஸரிக்கத் தகாதென்று ஒதுக்கிய அனுசாரங்களையும் அனுஷ்டித்து வீணைக் கெட்டுப்போகிறோம். முன்னொரு முறை பரமசிவனை நோக்கிஓர் பக்தன் கூறியிருக்கிறான், அதாவது 'ஹேபரமேசுவரா, உம்முடைய சிரசிலுள்ள சந்திரனை ஆகாயத்திற்கண்டு அனேகர் அதன் குளிர்ந்த கிரணங்களை யனுபவிக்கின்றனர். உமது ஜடாமகுடத்திலுள்ள கங்கையைப் பூமியிற்கண்டு எல்லோரும் ஸ்நானஞ் செய்து பரிசுத்தர்களாகின்றனர். உம்முடையதிருவடியை அடைந்த ஒவ்வொருவருக்கும் உம்மிடமுள்ள நல்ல பதார்த்தங்களைக் கொடுத்துவிட்டதால் கடைசியாக உம்மைச்சரணுகதி அடைந்த எனக்கு உமது பிக்ஷாபாத்திரத்தைக் கொடுத்தீர்போலும். அதனாலன்றோ நான் இப்போது கையிற் செம்பைக்கொண்டு வீடுவீடாய் நுழைந்து பிச்சைபெடுக்கிறேன், என்றான். இதைப்போல் பகவானையே கதியென்று நம்புஞ்சிலர் பலவிதத்தில் கஷ்டப்படுவதுமுண்டு, ஆயினும் அதனால் யாரும் அதைரிய மடையலாகாது.

"முன்னுக்கெல்லாம் வெயில் பின்னுக்கெல்லாம் மழை" என்பதுபோல் முதலில்பகவான் வறுமையைக்கொடுத்தாலுங்கடைசியில் மிகுந்த கிருபையைச்செய்வாரென்பது நிச்சயம்.

---

"பொறுமையே சிறந்த பூஷணம்" ஒருவன் பொறுமை என்னுங் குணத்தை வகித்தால் யாதொரு இடையூறுமின்றி வாழக்கூடும். பிறர் நம்மை நிந்திக்குமிடத்தும் நாம் பொறுமையாயிருப்பது நன்று. நம்மைவிட உயர்ந்தவர்கள் நம்மைநிந்தித்தால் நம்மிடம் ஏதோ குறையுளதென்றெண்ணி அதைநிவர்த்திக்க எத்தனப்படவேண்டும். நமது குறையை யெடுத்துக் கூறினதற்காக அப்பெரியோர்களிடம் நன்றி பாராட்டவேண்டும். நம்மைவிடத் தாழ்ந்தவர்கள் நம்மை நிந்தித்தால் அதையோர்பொருட்டா யெண்ணாமல் மறுமொழியுஞ் சொல்லாமல் சும்மாவிருப்பதுநன்று. கீழ்த்தரமானவர்கள் செய்யும் நிந்தையை விவேகிகள் லக்ஷியஞ் செய்யார்கள். நமக்கு ஸமானர்கள் நம்மை நிந்திப்பார்களாகில் அவர்களுக்குத் தக்க ஸமாதானஞ் சொல்வது கடமையே. அப்போதும் பொறுமையுடன் விடைகொடுக்கவேண்டுமே யல்லாது வரம்பு கடந்து வசனிக்கலாகாது. மேற்கூறிய நீதி லௌகிகர்களுக்கே யன்றி ஞானிகளுக்கில்லை. ஞானிகளும் ஸாதுக்களும் யார் எவ்விதமான நிந்தை செய்தாலும் அதைபாராட்டார்கள். இதற்குக் கங்காநதியே திருஷ்டாந்தம். பரிசுத்தமான கங்கையில் சாக்கடை ஜலம் விழுகிறது. அதற்காக கங்கையம்மன் ஜனங்களிடங் கோபங்கொண்டு வற்றிப்போகிறதில்லை. அதுபோல் ஞானிகள் யாரிடமுங் கோபங்கொள்ளுகிறதில்லை.

"அம்பிகையின் பாதத்தில் நம்பிக்கை வை" என்று காளிதாஸன் என்னுங் கவி சிரேஷ்டர் கூறியிருக்கிறார். ஆபத்காலத்தில் அம்பாளுடைய பாதமே கதியென்று நம்புகிறவர்கள் அவ்வாபத்தினின்றுந் தப்பித்துக்கொள்வார்கள் பிள்ளைகளிடந் தந்தையைவிட தாய்க்கு அதிகப்பிரீதியுண்டு, இதற்கு உதாரணமாக ஸ்ரீமத் ராமாயணத்திலிருந்து ஓர் விஷயஞ்சொல்லுகிறோம். இராவகப்பெருமான் சீதையம்மனுடன் வனவாஸஞ் செய்கையில் விராதன் முதலிய அரக்கர்களைச் சம்ஹரித்தார். அப்போது அம்மனுடைய கண் கலங்கி நீர் வடிந்தது. இதற்கென்ன காரணமெனில் ஜானகி உலகமாதா வாதலின் தன்பிள்ளையாகிய விராதனுயிர் இறந்துபோகின்றனரே யென்று வியஸனமடைந்தாள். துஷ்டப்பிள்ளையாயினுந் தாயின் அன்பு மாறுகிறதில்லையன்றோ, பிள்ளைவைதால் வாழைப்பழமாகவும், திட்டினால் திரட்டுப் பாலாகவும், அடித்தால் அப்பமாகவும், குட்டினால் கொழுக்கட்டையாகவும் எண்ணி சந்தோஷப்படுவது தாயின் இயல்பு தான் பட்டினி கிடந்தாலும் பிள்ளைக்கு அமுதூட்டி வளர்ப்பது தாயின் உத்தம குணமாதலால் பரப்பிரம்ம ஸ்வரூபியாகிய ஸ்ரீ அகிலாண்டேசுவரியை நாம் தியானிப்பது நன்று. அதனால் ஸகல ஆபத்துகளும் நீங்கி, சிக்கிரத்தில் காரியஸித்தி யுண்டாகிச் சுகத்தை யடைவோம்,

---

"கண்ணே காதே நமஸ்காரம் கண்டதைக்கேட்டதைச் சொல்லாதே" யென்னும் பழமொழி வழங்குகிறது. இதற்கு சிலர் விபரீதமான அர்த்தத்தைச் செய்கிறார்கள். அதாவது கோர்ட்டில் ஸாக்ஷியஞ் சொல்லும்போது கண்ணால் கண்டவற்றையுங் காதால் கேட்டவற்றையுஞ் சொல்லாதே, பொய் சொல்லாதே என்று பொருளாம். இதுசுத்தப் பிசகு அக்கிரமஞ்செய்யென்று முன்னோர்கள் கூறியிருப்பார்களா? இதன் அர்த்தம் வேறு. கண்ணையுங் காதையும் நம்பாதே. அவ்விரண்டும் எப்போதும் உண்மையைத் தெரிவிக்கின்றனவென்று நினைத்து மோசம் போகாதே, எந்தக்காரியத்தையும் புத்தியினால் ஊகித்துப்பார். சாஸ்திரத்தை நம்பு. பரிசோதனை செய். முரட்டுத்தனமாய் நான் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்று பிடிவாதஞ் செய்யாதே, ஆராய்ந்து நிதானித்து குணாகுணங்களைக் கிரகித்துக்கொள். என்பதுமேற்கூறியபழமொழியின் தாத்பரியம். அதெப்படி? கண்ணாற் கண்டதை நம்புவதற்கென்ன தடையெனில் சொல்லுகிறோம். ஜாலவித்தைக்காரன் ஒரு பையனைப் படுக்கவைத்துக் கத்தியால் குத்தி இரத்தத்தைக் காட்டுகிறான். உன் கண்ணுக்குக் குத்தியதும் இரத்தம் வடிகிறதுந் தெளிவாய்த் தெரிகிறது. அதை நம்புகிறையா? இல்லை சூரியன் சிறிய உருவமாய்த் தோன்றுகிறது. சாஸ்திரத்தைப் பார்த்தால் அது பூமியைவிட எத்தனையோ மடங்கு பருமன் என்று அறிகிறோம். சாஸ்திரத்தைப் பாராமல் சூரியன் பெரிய அப்பளம்போலிருக்கிறது, என்றான். கண்ணாற் கண்டேனென்றால் புத்திமான்கள் நம்புவார்

களா? வெகு தூரத்திலுள்ள மலை வெகு ஸமீபமாயிருப்பதுபோல் காணப்படுகிறது. நாமிங்கிருந்து பார்த்தமட்டில் இரண்டு மைல் தூரத்தில் மலையிருக்கிறதென்று சாதிக்கலாமா? ஆகாசமும் பூமியும் ஒன்றாய்ச் சேருவதுபோல் நம்முடைய கண்ணுக்குத் தென்படுகிறது. அவ்விரண்டுஞ் சேருமிடத்தைப் பார்ப்பதற்காக நாம் ஆயுள்நாள் முழுவதும் நடந்துபோனாலும் அலைந்து திரிந்தாலும் ஸாத்தியப்படுமா? ஆகாசமும் பூமியுஞ் சேருகிறதுதானுண்டோ? மேற்கூறிய காரணங்களால் கண்ணை நம்பாதேயென்று பெரியோர் கூறுகின்றனர். ஒரு இந்திரியமாகிய கண் நம்மை இப்படியேமாற்றத் தொடங்கினால் மற்ற இந்திரியங்கள் நம்மை மயக்குவதைக் கேட்கவேண்டுமா? நிமிஷத்துக்கு நிமிஷஞ் சலித்துக்கொண்டிருக்கும் மனதால் நாம் மோசம் போவதற்குக் கணக்கில்லை ஆனதால் புத்தியால் கேவலம் விஷயசுகங்களையே பெரிதாயெண்ணி சும்மாவிராமல் தத்வார்த்தங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஒரு க்ஷணமேனும் வீணாய் காலக்ஷபஞ் செய்யலாகாது.

---

“பொய்சொல்லி வாழலாமா” வென்பது பெரியோர் வாக்கியம். நிஜம்சொல்லி நெடுந்தூரம் போகலாம். முன்காலத்தில் சமரபுரியென்னும் நகரத்தரசன் ஜெயபுரி நாட்டின்மேற் படையெடுத்து அதையாண்ட ஜெயகாந்தனை யோட்டி ராஜ்யத்தைத் தன் ஸ்வாதீனமாக்கிக் கொண்டான். அப்போதவன் தன் போர்வீரர்களை நோக்கி ‘நீங்கள் இந்த ஜெயபுரியிலுள்ளவர்களைச் சிறிதேனும் ஹிம்ஸிக்கலாகாது. அவர்களுக்குச் சொந்தமான ஓர் துரும்பைக்கூட அபகரிக்கலாகாது’ என்று கண்டிப்பானகட்டளையிட்டான், இவ்வாறிருக்கையில் ஒருநாள் அத்தேசத்துக் குடியானவன் வீட்டுக்கோழிக்குஞ்சை ஓர் போர்வீரன் திருடிக்கொண்டுபோனான். அக்குடியானவன் அரசனிடம் ஓடிவந்து தன்வீட்டில்நுழைந்து கோழிக்குஞ்சைக் கொள்ளையடித்துக் கொண்டுபோனதாகப் போர்வீரன் மேல் குற்றஞ்சாட்ட அரசன் தன்னுளக்கோபிக்க அவன் அடியில் வருமாறு உத்தரஞ்சொன்னான். “மகாராஜாவே, தாங்கள் செய்த அக்கிரமத்தைவிட நான் அதிகஞ்செய்யவில்லை. தாங்கள் இந்நாட்டு அரசனது ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு அவனைத் துரத்திவிட்டீர்கள். நான் இந்தக் குடியானவனுக்குச் சொந்தமான அனேக கோழிக்குஞ்சுகளில் ஒன்றைமட்டுந் திருடினேன். வேறுவிதமான இம்சை செய்யவில்லை யென்றான். மகாராஜா உண்மைசொன்னதற்காக போர்வீரனைத் தண்டியாமல்விட்டு அவனைநோக்கி “அடே இந்த ராஜ்யத்தை எனக்காக நான் அபகரித்துக்கொள்ளவில்லை. ஜனங்களுடைய நன்மைக்காக இதை ஜெயித்தேன். பிரஜைகளே இவ்விராஜ்யத்தின் பொருள்களை யனுபவித்து சுகமடைகின்றனர் நீ திருடிய கோழிக்குஞ்சு உன்னுடைய உபயோகத்துக்கன்றோ? ஆதலின் நான் அடித்தது கொள்ளையாகாது” என்றான். போர்வீரன் சரிதானென்று ஒப்புக்கொண்டு வெட்கிப்போனான்.

"பொறுமை பொல்லாது" ஓர் இருண்ட தோப்பில் அனேக குரங்குகளிருந்தன. அவற்றில் ஒன்று மிகுந்த பொறுமைக் குணமுள்ளது. அது அத்தோப்பிலுள்ள பற்பல மரங்களினின்று பழங்களை யுதிர்த்து எல்லாவற்றையும் பொறுக்கி தன்னிடம் வைத்துக்கொண்டது. மற்றக் குரங்குகளெல்லாம் அதனிடம் ஓடிவந்து தங்களுக்குப் பங்கு கொடுக்கும்படி கேட்க அது எல்லாவற்றையு மெதிர்த்து ஒவ்வொரு பழத்தாலும் அக்குரங்குகளை யடித்து விரட்டி கடைசியில் ஜெயமடைந்து தன்னிடமுள்ள பழங்களை எண்ணும்போது ஒரேபழம் மீதியிருந்தது. ஐயோ! எல்லோரோடுஞ் சண்டைபோட்டுங் கடைசியில் ஒரு பழமே மீந்தது. நாம் சண்டைபோடாமல் தயையும் அன்பும் பாராட்டி ஆளுக்கொருபழங் கொடுத்திருந்தால் எல்லோரும் நம்மை தர்மவானென்று கொண்டாடுவார்கள். வீணாக நற்பெயரைக் கெடுத்துக்கொண்டோமேயென்று ஏக்கமடைந்தது. அதுபோல் பொறுமைக்காரர்கள் சகல வரும்படிகளையுந் தாங்களே அடையவெண்ணி எல்லோரையும் பகைத்து முடிவில் திரவிய நஷ்டமடைகின்றனர்.

---

"உலகம் பலவிதம்" ஒருவனுக்கு இரண்டு குமாரத்திகளிருந்தனர். அவர்களில் ஒருத்தியை செங்கலறுத்துச் சூளை போடுபவனுக்கும் மற்றொருத்தியைத் தோட்டக்காரனுக்கும் விவாகஞ்செய்து கொடுத்தான். சிலநாட்கள் சென்றபின் அவன் தன் மூத்த குமாரத்தியிடஞ்சென்று 'அம்மா, சுகமா?' என்றான். அவள் 'சுகந்தான். ஆனால் இப்போது பெய்கிற மழை ஓய்ந்து நல்ல வெயிலெறித்தால் செங்கல் உலரும்' என்றாள். பிறகு இரண்டாவது குமாரத்தியிடஞ் சென்று 'என் குழந்தாய், சுகமாயிருக்கிறாயா? வென்றான். அதற்கவள் 'அண்ணா, சுகந்தான், இப்போது பெய்கிறமாதிரி மழை பெய்துகொண்டிருந்தால் தோட்டத்தில் செடிகள் நன்றாய் வளரும்' என்றாள். தந்தை அவ்விரண்டு குமாரத்திகளையும் நோக்கி "குழந்தைகாள்! உங்களில் ஒருத்தி மழையையும் மற்றொருத்தி வெயிலையுங் கோருகிறீர்கள். ஆனதால் நான் எதைக்கோருகிறதென்பது தெரியாமல் விழிக்கிறேன்" என்றான். இதனால் உலகம் பலவிதமென்றும் உலகத்தாரெல்லோருக்குந் திருப்தி உண்டாகும்படி நடக்க முடியாதென்றும் அறிகிறோம்.

"சிவனே வல்லவன், அவனே நல்லவன்" என்று ஓர் பெரியவர் அடிக்கடி கூறுவதுண்டு. நல்லவன் என்னும் பட்டம் வல்லனுக்கே கொடுக்கவேண்டும். வல்லவனல்லாத மற்றவன் நல்லவனா யிருந்தென்ன? கெட்டவனா யிருந்தென்ன. ஆதலின் ஸர்வ சக்தியுள்ள பரமசிவனை தியானித்தால் ஸகல நன்மைகளு முண்டாம்.

"உலகம் பலவிதம்" ஒவ்வொருவரும் ஒவ்வொரு விஷயத்தில் பிரீதி கொள்ளுகிறார்கள். எல்லோருடைய இஷ்டப்படி நடப்பது ஸாத்தியமல்ல. ஆயினும் ஒவ்வொருவருக்கும் பிரீதியாக நடந்தாலன்றி நல்லவனென்ற பெயர் எடுக்கமுடியாது.

"மோசங்களிற் பலவிதமுண்டு." சிலர் ஜோஸ்யர்களாகவும் மாந்திரிகர்களாகவும் வைத்தியர்களாகவுந் தோன்றி அதிசீக்கிரத்தில் அந்தர்த்தானமாகிறார்கள் சென்னையில் ஓர் மாந்திரீகர் ஒரு கனவானிடம் ரூ. 50-பெற்றுக்கொண்டு அவருக்கு ஸாதகஞ் செய்வதாய்ச் சொல்லி ஏமாற்றிவிட்டார். தென்னாட்டில் ஒருவர்ஜோஸ்யஞ் சொல்வதாகப் பெயர் வைத்துக்கொண்டு ஏனைவாயனிடம் பணம் பறித்துக் காலங்கழிக்கிறார் இப்போது வைத்தியர்களைப்பற்றி மட்டும் பிரஸ்தாபிப்போம்.

"புலி பெரிதோ கிலி பெரிதோ" யென்றொரு கேள்வியுண்டு. புலியால் வருங்கேட்டைவிட கிலியால் வருங்கேடு அனந்தம். இதை நிரூபிக்க ஓர் கதை சொல்லுகிறோம். ஆரியூர் என்னுங் கிராமத்தில் அப்பாவையர் என்னுமோ ரந்தணரிருந்தார். அவருக்கு ஏதேஷ்டமான திரவிய மிருந்தும் அதையாருக்கும் உபயோகப்படுத்தாமல் வீட்டிற் புதைத்து வைத்துக்கொண்டிருந்தார். இதையறிந்த ஓர் வைத்தியன் அவருடைய பொருளை நஷ்டப்படுத்தவெண்ணி ஓர் யோசனை செய்யலானான். தன்னுடன் மூன்று பேர்களையழைத்துக்கொண்டு சிறிது தூரத்துக்கப்பால் ஒருவர் பின் ஒருவர்வர காவேரியை நோக்கிப் போய்க்கொண்டிருந்தான். அப்பாவையர் எதிர்ப்பட்டார். அவரிடம் முதல்வன் சென்று "ஐயா, உம்முடைய முகத்தில் கரிமேகம் படர்ந்திருக்கிறது" என்றான். அப்பாவையருக்குக் கொஞ்சங் திகிலுண்டாயிற்று. சிறிதுதூரஞ்சென்றபின் இரண்டாவன் எதிர்ப்பட்டான். அவன்அப்பாவையரை நோக்கி "என்ன ஸ்வாமி, தங்கள் முகத்தில் கரிமேகம் படர்ந்திருக்கிறது. அத்துடன் காதுந் தடிப்பாயிருக்கிறது" என்றான். அப்பாவையருக்கு ஏற்கனவே உண்டான திகில் அதிகமாயிற்று. அவர் இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது. நம்முடைய முகத்தில் கரிமேகம் படர்ந்திருக்கிறதாக இரண்டு பேர்கள் சொன்னார்கள். ஐயோ, வியாதியைப் பரிகரிக்கவேண்டியது அவசியம். அதற்காக ஒருவைத்தியனைத் தேடவேணு மென்றெண்ணினார். இதற்குள்ளாக மூன்றுவன் எதிர்ப்பட்டு ஐயரை நோக்கி 'ஸ்வாமி தங்கள் முகத்தில் கரிமேகம் படர்ந்து காதுதடித்து நீர் பெருகியிருக்கிறது' என்றான் அப்பாவையர் திகில் அதிகரித்தது மூன்றுபேர்கள் ஒரே மாதிரியாகக் கரிமேகம் உண்டென்பதை ஸ்தாபித்து அதற்குரிய சின்னங்களைச் சொல்லிவிட்டார்களென்று கிலி பிடித்து வீட்டுக்கு வந்த உடனே ஊர் வைத்தியனாகிய நாலாவனை கூப்பிட்டுத்தமது கையைக்காட்டினார். அவன் 'ஸ்வாமி கர்ப்பச்சூடு அதிகமாயிருக்கிறது. உங்கள் முகத்தில் இப்போது மேகம்படர்ந்து வருகிறது. தேகஞ் சிறிது சிறிதாய்த் தடிக்கிறதால் சிலநாளில் ஊன் தண்ணீர் வடியும். நாற்றம் வீசும். உயிருக்கே ஆனியுண்டாகும்' என்றான். அப்பாவையர் நடுநடுங்கி 'நல்லது, இதற்கென்ன செய்யலாம்' என, வைத்தியன் ஐம்பது ரூபா செலவழித்து கந்தகபஸ்மஞ் செய்து

சாப்பிட்டால் திருமென்றான். அப்பாவையர் அவ்வாறே செலவழித்துமருந்துண்டு பொன்போன்ற தேகத்தைப் புண்ணாக்கிக்கொண்டு எதேஷ்டமான பொருளையுங் காலத்தையுஞ்செலவழித்து இல்லாத நோயைவரவழைத்து அவஸ்தைப்பட்டார். ஆகலினமோசகாரர்களான வைத்தியர்களிடம் நம்பிக்கைவைப்பது பிசகேயாம்.

"பித்தம் அதிகரித்தால் பைத்தியம்" என்பார்கள். யாதொரு நூலையும் படிக்காமலே நமது நாட்டு வைத்தியர்கள் சுக்கு மிளகு திப்பிலி முதலியவற்றை வைத்துக்கொண்டு வைத்தியஞ் செய்கிறார்கள். ஆங்கிலேயர்களோ அப்படியல்ல. வைத்திய நூல்களை முறையுடன் கற்றுக்கொடுக்கவேண்டி வெகு திரவியஞ் செலவழித்துக் கலாசாலைகளேற் படுத்தியிருக்கின்றனர். அவற்றில் பயிலும் மாணாக்கர்களுக்கு உதவி சம்பளங் கொடுப்பதுடன் வைத்திய நூல்களடங்கிய புஸ்தகங்களையும் இனாமாகக் கொடுக்கின்றனர். அவற்றுள் (Insanity) பைத்தியத்தைப்பற்றிய புஸ்தகமொன்று. அதில் பைத்தியம் பிடித்தவர்களின படங்களிருக்கின்றன. ஒரு பைத்தியக்காரன் ஆகாசத்தைப் பார்த்தவண்ணமாயிருக்கிறான். அவனுக்கு யாரைக்கண்டாலும் பயம். உலகமே அவனுக்கு விரோதிபோல் தோன்றுமாம். அந்த பயத்தால் அவன் கீழ்நோக்குகிறதில்லை. இரண்டு மூன்று பேர்கள் துணியைப்பிடித்து அவனுடைய இடுப்பில் கட்டினாலன்றி அது அரையிலிருப்பதரிது. இவன் ஜென்மாந்திரத்தில்செய்த பாபகர்மத்தால் எல்லோருந்தனக்குவிரோதிகளென்றெண்ணி உலகத்தைக்கண்டு பயப்படுகிறான். உலகமானது அவரவர் சித்த விர்த்திக்கு ஏற்றபடி பயங்கரமாயுந், துக்கமாயுஞ், சுகமாயுங் காணப்படுகிறது அதுபோல் சிலருக்கு பிராமணர்களைக்கண்டால் வெறுப்பு உண்டாகிறது. இதற்குக்காரணம் ஓர்வித பைத்தியமேயன்றி வேறில்லை.

"போகியென்று பாம்புக்குப் பெயர்." இதென்னவேடிக்கை? பாம்பைக்கண்டால் எல்லோருந் தடியெடுத்தடிக்கிறார்கள். இதற்குத்தான் அதற்குப் போகியென்ற பெயர்வந்ததோ? ஆகிலும் அப்பெயரை அது மாற்றிக்கொள்ளமுடியாது. மனிதர்களன்றோ அப்பெயரை வைத்தார்கள். ஆதலின் பாம்பின்பேரில் குற்றமில்லை. அது போகியென்று தனக்கு ஏற்பட்டபெயரை இப்போதே ராஜிநாமா கொடுத்துவிடும். இது இருக்கட்டும் மனிதர்களில் அநதிகாரிகளான சிலர் ஸ்வாமிகளென்று பெயர்வைத்துக்கொண்டு பெரியோர்களை நிந்தித்துத் தங்களைப் பிசாசுகளென்று பிறர் எண்ணும்படி செய்கின்றனர். இந்த ஸ்வாமிகள் பட்டத்தைப் பிறர்சூட்டவில்லை யென்பது நிச்சயம். ஆதலின் அந்தப்பட்டத்தை ஏன் உடனே ராஜிநாமா கொடுக்கலாகாதோ அறியோம்.

"பரத்தைப்போற்றி பாவத்தை யகற்று" என்ற வாக்கியப்படி ஜெகதீசனைப் பிரார்த்தித்து சகலபாபங்களையும்போக்கவேண்டும். நாம் தினந்தோறுந் திரிகரணங்களாற் செய்யும் பாபங்களுக்கு அளவில்லை. ஒரு நிமிஷநேரமாவது நம்மனம் நல்லவழியிலிருப்பதரி

து. பிறர் செல்வத்தைக்கண்டு பொறாமைப்படாத நாளில்லை. நமது காலிற்பட்டு மாயும் எறும்புகளனந்தம். உட்கொள்ளுந்தண்ணீரில் ஏராளமான பூச்சிகளுண்டு இத்தனை பூச்சிகளுக்கும் நமது வயிறே நன்காடாயிருக்கிறது. நன்றாக ஆராய்ந்து பார்த்தால் ஒவ்வொரு நிமிஷமும் நாம் பாபஞ் செய்துகொண்டிருப்பது செவ்வனே புலப்படும். இந்த பாபங்களைச் செய்யாமலிருக்க முடியாது, பூச்சிகள் இறந்துபோமென்று நீருண்ணாமலிருக்க முடியுமா? எறும்புகள் நசிக்குமேயென்று நடக்காமலிருக்க முடியுமா? ஆகலின் தினந்தோறும் நம்மாற்செய்யப்படும் மேற்கூறிய பாபங்கள் நிவர்த்தியாகும்பொருட்டு பகவத்பக்தி செய்யவேண்டும். அடிக்கடி சிவசிவா, ராமராமா, கிர்ஷ்ண கிர்ஷ்ணாவென்று ஸ்மரிப்பது நன்று.

---

"ஞானிக்கில்லை இன்பமுந் துன்பமும்" கர்மபாசத்தால் கட்டுண்டவர்களுக்கே சுகமுந் துக்கமும் உண்டாகின்றன. ஞானிகளை கர்மம் பிடிக்காது. இதை நிரூபிக்க ஓர் கதை சொல்லுகிறோம். முற்காலத்தில் துர்வாஸரென்னும் மகரிஷியிருந்தார், இவர் வருஷத்துக்கொருநாள் அன்னம் புசிப்பதும் மற்ற நாட்களெல்லாந் தவமிழைப்பதும்வழக்கம். இந்தமாகானுபாவனுக்கு அன்னம்படைக்கும் பாக்கியத்தை கோபிகா ஸ்திரீகள் பெற்றிருந்தனர். துர்வாஸ மகரிஷிக்காக கோபிகைகள் ஷட்ரஸ பதார்த்தங்களுடன் பலவகை பக்ஷணங்களையு மெடுத்துக்கொண்டு அவர் கண்ணைத் திறக்குந் தினத்தில் கொண்டு வருவார்கள். ஓர் சமயங் கோபிகைகள் ருசிகரமான பதார்த்தங்களை சிறந்த பாத்திரங்களில் நிரப்பி எடுத்து வருகையில் நடுவழியிலுள்ள ஓராற்றில் வெள்ளம் பெருகி அக்கரை போகத் தடையுண்டாயிற்று. ஆற்றின் பெருக்கத்துக்கஞ்சி போகாமல் நின்றுவிட்டால் துர்வாஸருடைய கோபத்துக் கிலக்காகி சாபத்தையடைய நேரும். ஆகலின் கோபிகா ஸ்திரீகள் மனக்கிலேச மடைந்து ஒன்றுந் தோன்றாமல் தியங்கினார்கள். பின்னர் ஸ்ரீ கிர்ஷ்ணமூர்த்தியின் சரணத்தையடைந்து தாங்கள் படுஞ் சங்கடத்தைச் சொல்ல அப்பெருமான் அவர்களை நோக்கி நீங்கள் அந்த ஆற்றண்டை சென்று ஸ்ரீ கிர்ஷ்ணன் பிரம்மசாரியென்பது நிஜமானால் எங்களுக்கு வழிவிடு, விலகிப்போ என்றுசொல்லுங்கள். ஆறு விலகிப்போம். நீங்கள் சிரமமின்றி அக்கரைபோய்ச் சேரலாமென்றார் இதைக்கேட்ட கோபிகைகள் கைகொட்டி சிரித்தனர். அவர்கள் கிருஷ்ண பரமாத்மாவுடன் பலவித கிரீடைகள் செய்து சுகமனுபவித்தவர்கள். ஆதலின் பகவான் தன்னை நித்திய பிரம்மசாரியென்று சொல்லிக்கொள்வதை அவர்கள் எப்படி நம்புவார்கள்? ஆயினும் ஜனார்த்தரின் வார்த்தை பொய்யாகாதென்பதை கோபிகைகள் நன்றாயறிந்துளர். ஆதலின் அவருடைய சொற்படியே எல்லோருந் திவ்யான்னங்களைத் தலையிலும் இடுப்பிலும் வைத்துக்கொண்டு ஆற்றருகே சென்று கண்ணன் நித்ய பிரம்மசாரியென்பது உண்மையானால் இவ்வாறு விலகி எங்களுக்கு வழிவிட

ட்டும் என்றார்கள். உடனே ஆறு விலகிற்று. கோபிகைகள் சந்தோஷத்துடன் அக்கரைசேர்ந்து தூர்வாஸரைச் சேவிக்கார்கள். அம்மகரிஷி அவர்கள் கொண்டுவந்த போஜனத்தை வயிறார உண்டு பசி தீர்த்தார் இதன் பிறகு தர்மிஷ்டைகளாகிய கோபிகைகள் திரும்பி வரும்போது மறுபடியும் ஆற்றைக்கடப்பதற்கு வழியின்றிப் பரிதவித்து தூர்வாஸரிடமே திரும்பி வந்தனர். அவர் ஸ்திரீ ஜனங்களை நோக்கி "நீங்கள் ஆற்றருகே சென்று தூர்வாஸர் எப்போதும் பட்டினியாயிருக்கிறார். ஒரு எள்ளளவுகூட போஜன முண்பதே யில்லையென்பது நிச்சயமானால் வழிவிடு என்றுசொல்லுங்கள். அவ்வாறு விலகும்" என்றார். கோபிகைகள் அவ்வாறே சென்று சொல்ல ஆறு வழிவிட்டது. அதைப்பார்த்து அதிசயித்தனர். சிறிது நேரத்துக்குமுன் தாங்கள் எதேஷ்டமான அன்னம் பக்ஷணம் முதலியவற்றை தூர்வாஸருக்குக் கொடுத்ததையும் அவற்றை அவர் வயிறார உண்டதையும் நேரிற்கண்ட கோபிகைகள் மகரிஷி பட்டினியென்பதை எப்படி ஒப்புக்கொள்வார்கள். ஆயினும் ஆறு வழிவிட்டதால் அதை நிஜமென்றே நம்பவேண்டியிருக்கிறது. மட்டற்ற மகிழ்ச்சியுடனும் அளவில்லாத ஆச்சரியத்துடனுங் கோபிகா ஸ்திரீகளெல்லாங் கிர்ஷ்ணனிடம்வந்து தங்கள் சந்தேகத்தை விநயமாய்த் தெரிவித்துக்கொண்டார்கள். அவர் ஞானிகளைக் கர்மம் பீடிக்காதென்னும் அரிய விஷயத்தை எடுத்துக் கூறினார். கோபிகா ஜனங்கள் கொண்ட சந்தேகமும் ஒழிந்தது.

---

"பக்தியில் பத்துவிதமுண்டு." முதலாவது சிரவணபக்தி, இதைப் பரீக்ஷித்து மகாராஜன் அனுசரித்து பதம்எய்தினான். 2-வது கீர்த்தன பக்தி, இதை சுகர் அனுசரித்து நற்கதிபெற்றார். சுகர் பிரம்மஞானி. 3-வது ஸ்மரணபக்தி, இதை யனுசரித்தவர் பிரகலாதர். 4-வது சேவனபக்தி, இதைச் செய்துகொண்டிருப்பவள் லக்ஷ்மி. 5-வது வந்தனபக்தி, இதைச்செய்து பதவியடைந்தவர் அக்குரூரர். இவருக்குத்தான் பரமாத்மா சதுர்ப்புஜத்துடன் ஆற்றில் ஸ்நானஞ் செய்தபோது பிரசன்னமானார். 7-வது தாஸத்வபக்தி, ஹனுமார் இந்த பக்தியைச்செய்து உக்கிருஷ்டமான நிலைமையை யடைந்தார், இவர் வஜ்ர சரீரமுஞ் சிரஞ்சீவிபட்டமும். படைத்தார். 8-வது சக்யபக்தி, இதை யனுசரித்தவன் அர்ஜுனன். இவனுக்குத்தான் பகவான் தேரோட்டி பார்த்தசாரதி யென்னும் பெயர் படைத்தார். சிநேக தர்மத்தை நன்றாயறிந்த பகவான் தேரோட்டுவதை இழிவென்றெண்ணாததுபோல் நேசர்கள் தாங்கள் ஒருவருக்கொருவர் செய்யும் ஊழியத்தை இழிவாகக்கருதுகிறதில்லை. 9-வது ஆத்மநிவேதனபக்தி, இந்த பக்தியைச்செய்து பாக்கியம்பெற்றவன் பலி. இவனுக்கு பரமாத்மா வாசற்காப்போனாயிருந்தார். 10-வது பிரேமலக்ஷணபக்தி, இதை புரிந்தவர் கோபிகைகள். மேற்கூறிய 10-வித பக்திகளில் கடைசியிற்கூறியதே வெகு சிலாக்யமானது.

"பக்திசெய்வதற்கு நம்பிக்கையே முக்கியகாரணம்." தெய்வ தைப் பிரார்த்தித்தால் அது நம்மைக்காப்பாற்றுமென்னும் நம்பிக்கை ஒவ்வொரு பக்தனுக்குமிருக்கவேண்டும். அவ்வித நம்பிக்கை யில்லாமல் பக்தி செய்கிறவன் ஒருநாளுங் கடைத்தேறமாட்டான். மங்கோ என்னும் ஓர்வெள்ளைக்காரன் சில வருஷங்களுக்கு முன் ஆப்பிரிக்கா கண்டத்தில் ஓர் பாலைவனத்திற் செல்லுகையில் பகல்பதினைந்து நாழிகையாயிற்று.சூரியோஷ்ணம் பொறுக்க முடியவில்லை. தாகத்தின் கொடுமையும் அதிகமாயிருந்தது. தான் புறப்பட்ட விடத்துக்குத் திரும்பிப்போவதுஞ் சாத்தியமாயில்லை. நாவரண்டு நெஞ்சுலர்ந்து நடந்து சலித்துக் களைத்து தரையில் விழுந்து விட்டான். இனி என்னசெய்கிறதென் றெண்ணமிட்டுக் கொண்டிருக்கும் மங்கோ தன்னருகில் பச்சென்றிருந்த ஓர் செடியைக்கண்டு அதிசயித்து இந்தப் பாலைவனத்தில் பசுமை நிறம் வாய்ந்த இந்தச்செடியை உண்டாக்கிப் பாரிபாலிக்குங் கடவுள்தாம் சிருஷ்டித்த மனிதரூபமாகிய என்னைத்தானு கைவிடுவார். கட்டாயமாக என்னைக் காப்பாற்றுவர் என்று தைரியத்துடன் ஈசுவரனை ஸ்தோத்திரஞ் செய்து நடந்துபோனான். சிறிதுதூரம் போவதற்குள் அவ்வழியாய் வந்த வர்த்தகர்கள் அவனைக்கண்டு ஆகாரங்கொடுத்து உபசரித்துத் தங்களுடன் அழைத்துக்கொண்டு போனார்கள். எந்த ஜாதியானாயினும் எந்த மதஸ்தனாயினுங் கடவுள் காப்பாற்றுவாரென்னும் உண்மையான நம்பிக் கைகொண்டால் சகல ஆபத்துகளினின்றுந் தப்பித்துக்கொள்வான்.] அவ்வித நம்பிக்கையில்லையேல் பக்தியுண்டாகாது. பரமபதமுங் கிடைக்காது.

---

எவன் தான் சொல்வதை சத்தியமென்று நீ நினைக்கும்படி பலவித பிரமாணங்கள் செய்கிறானோ அவன் பொய் சொல்லுகிறானென்பது நிச்சயம். இல்லையேல் அவ்வளவு சிரமப்பட்டு சத்தியஞ் செய்வதற்குக் காரணமில்லையன்றோ?

ஓர் துணியில் எண்ணெய்க்கறை பட்டிருப்பதை யறிந்த புத்திமான் அதை நீக்குவதற்கு உடனே உபாயந்தேடுவன். அதை விட்டு இந்த எண்ணெய்க்கறை ஏன் பட்டது? எப்போது பட்டதென்று கேள்வி கேட்பவன் மூடனே. இதைப்போல் அனேகர் நம்மை ஏன் கடவுள் சிருஷ்டிக்கவேண்டும்? சிருஷ்டியாமலிருந்தால் பாபஞ் செய்யமாட்டோமேயென்று அநாவசியமான கேள்வி கேட்கிறார்கள். அது பிசகு. இனி ஜெனனமரண துக்கங்களுண்டாகாதபடி முயற்சி செய்வதன்றோ சிலாக்கியம்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று படித்திருக்கிறோம். ஜெகன்மாதாவாகிய பரமேசுவரியை ஸ்தோத்திரஞ் செய்வதே நாம் செய்யவேண்டிய முதற்கடமை. ஈசுவரியைத் தியானஞ் செய்தால் ஸகல தேவர்களும் நமக்கு கிங்கரர்களாயிருந்து ஊழியஞ் செய்வார்கள். அன்றியுங் குழந்தை பசிக்கிறதென்றால் உடனே ஓடிவந்து அன்னமளிப்பவள் தாயேயன்றி வேறல்

லர். தாயின் கருணைக்கு ஒப்பான கருணை வேறொன்றில்லை. ஆதலின் சர்வலோக ஜனனியாகிய ஸாக்ஷாத் அகிலாண்டேசுவரியை நாம் ஸதா தியானிக்கக் கடவோம்.

"ஊத்தைக்கிடங் கொடுத்தாலும் வார்த்தைக்கிடங் கொடுக்கலாகாது" என்பது பெரியோர் வாக்கியம். பிறர் நம்மிடங் குறை காணாதவாறு நாம் ஒழுகவேண்டும், ஆயினும் எதார்த்தவாதி வெகுஜனவிரோதி யென்றிருப்பதால் உண்மையைச் சொல்லுமிடத்து அதற்கு மாறாகநடக்கும் பேர்வழி நமக்கு விரோதியாகவே ஏற்படுவன். அவன் நியாயவாதஞ் செய்தால் மட்டும் நாம் விடையளிக்க வேண்டுமேயன்றி கேவலம் பொறாமையாலும் பொருளாசையாலும் வாயில்வந்தபடி வழங்கத்தகாத வசைமொழிகளைக் கூறுவனாயின் அப்படிபட்டவனைக்கண்டு ஐயோ இவனுக்குப் பகவான் இவ்வளவு அறியாமையை ஏற்படுத்தினாரே என்று அவன் விஷயமாய் மிகுந்த இரக்கம் பாராட்டவேண்டும். இதுவே அறிவாளிகளின் இலக்ஷணம்.

---

"கோட்டைப்பிள்ளையாரே கேட்டுக்கொள்?" என்ற ஓர் பழமொழியுண்டு. இதன் வரலாற்றைச் சற்று விசாரிப்போம். ஓரூரில் ஒரு பிராமணனும் அவன் மனைவியும் அன்யோன்யமாய் வாழ்ந்துகொண்டிருந்தனர். அவ்வாறிருக்கையில் எதிர்வீட்டானொருவன் பிராமணனது மனைவியின்மேல் மோகமுற்று பலவிததந்திரங்களால் அவளது பிரியத்தை அடைந்தான், ஆயினும் புருஷன் எப்போதும் வீட்டைவிட்டகலாமலிருந்ததால் இருவருக்குந் தக்கசமயம் வாய்க்கவில்லை. இதையறிந்தபிராமணமாது ஓர் யுக்திசெய்தாள். ஒருநாள் தன்புருஷனைநோக்கி பிராணநாதா, என்மனதிலோராசையிருக்கிறது, அதைத் தீர்க்கவேண்டியது உமது கடனன்று.

"காலுக்குப் பதமான முள்ளும், பல்லுக்குப் பதமான கல்லும்" எனக்கு வேண்டும். நீர் எங்கேயாவதுசென்று அவ்விரண்டு வஸ்துக்களையுந் தேடிக்கொண்டு வாருமென்றாள். நாயகியின் ஆக்ஞையைத் தள்ளமுடியாத மூடப் பிராமணன் அந்தக்ஷணமே புறப்பட்டு ஊரூராய்ச்சென்று தரையிற்கிடக்கும் பலவித கற்களையெல்லாம் வாயிற்போட்டுப் பல்லால் கடித்துப் பார்த்தான். ஒருகல்லாவது பதமாயில்லை. காட்டிலும் படுகையிலுஞ்சென்று ஒவ்வொரு முள்ளையுந் தன்காலில் குத்திப்பார்த்தான். ஒன்றும் பதமாயில்லை. இவ்வாறு இரண்டுவருஷம் அலைந்தலைந்து மனம் வருந்தி ஓர் நாட் காலமே ஆற்றங்கரையில் உள்ள முட்களையுங் கற்களையும் பரீக்ஷித்துப் பார்க்கையில் விவேகியான வேறொரு பிராமணன் அவரைக் கண்டு சங்கதியை அறிந்து அடியில்வருமாறு கூறலுற்றார்.

"ஐயா, நீர் சூதுவினை அறியாதவர். பெண்சாதியின் மேலுள்ள அத்யந்தப் பிரீதியால் லௌகிக விஷயங்களை முற்றும் மறந்தவர், உமது மனைவியின் துர்நடத்தையை உமக்கு பிரத்யக்ஷமாகக்காட்டுகிறேன். என்னை உமது கிரகத்திற்கு அழைத்துப்போம்"

என்றார். ஒருவாரத்தில் இரண்டுபேர்களும் ஊரையடைந்தனர், அந்நேரத்தில் விவேகிமூடப்பிராமணனை விரைக்கோட்டையில் வைத்து மூடித் தலையில் சுமந்துகொண்டு பிராமண ஸ்திரீயிடஞ்சென்று "அம்மா, இன்றிரவு மட்டும் உங்கள் தெருத்திண்ணையில் படுத்துக் கொள்ள இடந்தாருங்கள். இந்த விரைக்கோட்டையை மட்டும் உள்ளே வைக்கிறேன்" என்றார். பார்ப்பினி 'ஐயா குளிர்மிகுதி தெருத்திண்ணையில் படுக்கவேண்டாம். உள்ளே படுத்துக்கொள்ளும், நானும் என்புருஷனு மட்டுமிருக்கிறோம். நாங்களிரண்டுபேரும் ஸங்கோசமின்றி உல்லாஸமாயிருப்பது வழக்கம்' என்றாள். விவேகி 'அதனாலென்ன? கர்நாடக அசடுகளன்றோ ஸங்கோசப்படுவார்கள். நானும் என் மனைவியும் மத்தப்பிளப்போம், குஷிக்கட்டாளுடுவோம்' என்றார், பிராமணஸ்திரீ மிகுந்த ஸந்தோஷமடைந்தாள். இரவு 8-மணி ஆயிற்று. எதிர் வீட்டான் உள்ளே நுழைந்தான். பிராமணஸ்திரீ அவனுடன் ஸரஸமான வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கையில் 'அந்தப் பைத்தியம் வெளியேபோச்சே. இரண்டு வருஷம் ஆச்சே. இனி எப்போது வரும்' என்றான். வியபிசாரி 'அந்தப்பிணத்தைப்பற்றி இப்போதென்னகவலை. அது பல்லுக்குப்பதமான கல்லுங்காலுக்குப்பதமான முள்ளுந் தேடிக்கொண்டிருக்கும். இனி வருகிறதேது' என்றாள். உடனே விவேகி 'கோட்டைப்பிள்ளையாரே கேட்டுக்கொள்' என, மூடப்பிராமணன் விரைக்கோட்டையினின்று எழுந்து ஒரு தடியைத் தூக்கிக்கொண்டு 'அடி, முண்டே, அப்படியா ஸங்கதி' யென்று அவளையுஞ் சோரபுருஷனையுங் கைசலிக்குமட்டும் அடித்துப் புடைத்து இருவர்களையும் வீட்டைவிட்டோட்டி குணவதியான வேறொரு பெண்ணை விவாகஞ்செய்து சுகஜீவியாய் வாழ்ந்தான். இதினால் புருஷர்கள் ஸ்திரீகளின் வார்த்தையிலும் நடவடிக்கையிலும அதிக நம்பிக்கை வைக்கலாகாதென்றுந் துஷ்டசுபாவமுள்ள பெண்சாதிக்குக் கடைசியில் கட்டாயமாய் துக்கமுண்டாகுமென்றும் ஏற்படுகிறது

---

ஆங்கிலேய வித்யார்த்திகள் நல்ல நாகரீகமுந் தெளிவான புத்தியும் அடைந்திருக்கிறார்களென்பதில் ஐயமில்லை. அனேகர் பி-ஏ. எம்-ஏ. பி-எல் முதலிய பெரிய பரீக்ஷைகளில் தேறி ஏராளமான திரவியத்தை ஸம்பாதிக்கிறார்கள். அதுவும் ஸந்தோஷமே. நியாயந்தெரிந்தவர்களாய் மரியாதையில் மிகுந்தவர்களாயிருப்பது மட்டும் போதுமென்று ஷை வித்யார்த்திகள் நினைத்து முன்னோர்கள் அனுஸரித்த ஆசாரங்கள், மதம் ஸம்பிரதாயம் முதலியவற்றை முற்றிலும் மறந்து கைசோர விடுகின்றனர். ஐயோ, இந்நாகரீகர் செய்யும் அக்கிரமத்தை நினைக்குந்தோறும் அன்னிய ஜாதியாருக்கே அதிவெறுப்பு உண்டாகிறதெனின் ஆரியர்களாகிய அவர்களின் தாய் தந்தையர் பிதுர்க்கள் முதலானோர் நேரில் பார்க்குமிடத்து என்ன பாடுபட்டார்கள்! முன்னோர்களாகிய ஆரியர்களின்

அடிவயிறு பற்றியெரியுமே. எத்தனையோ நாளாக வெயிலிலும் மழையிலும், பனியிலும், இருந்து உலர்ந்து வருந்தி சருகுகளைப் புசித்து தீக்ஷண்யமான புத்தியினாலும் மிகுந்த ஞானத்தாலும் பல நல்வழிகளைக்கண்டுபிடித்து சாஸ்திரங்களில்எழுதி ஆன்ஹிகம்ஏற் படுத்தி விதிகளுண்டாக்கி தங்கள் ஸந்ததியார் கடைத்தேறட்டும் ஆரியமதங் குறைவின்றி எந்நாளும் நீடித்து வாழட்டும் என்னுந் தீர்க்கமான ஆலோசனையுடன் ஏற்படுத்தியிருந்தஅவைகளைச்சிறி தேனும் மதியாமல் மனவைக் கருங்கல்லாக்கி மானத்தை யொழித்து மனச்சாக்ஷியை அழித்து ஐயோ, வெகுதாராளமாக ஈனஜாதியாரிடங் காபி, டீ, கோகோ முதலிய பானங்களைப் பெற்ற மிகு ஸம்பிரமமாக உட்கொண்டு மதப்பிரஷ்டர்களாய், ஆசாரஹீனர்களாய்ப் போகின்றனரே! அப்பன் பாட்டன் பாடுபட்டு சேகரித்த ஆஸ்திக்குமட்டுந் தாங்கள் வார்ஸுகளென்று கோர்ட்டில் வியாஜ்யஞ் செய்யத்தெரிகிறதே. பரம்பரையாய்ச் சொந்தமாயிருக்குஞ்ஞானஸம்பத்தையடைய வேண்டுமென்னும் எண்ணமுண்டாகவில்லையே. ஐயோ! இப்படியா நமது குழந்தைகள் விவேகமின்றிப்போக வேண்டும்? ஜெகதீசா இவர்களுக்கு நல்லவழி காட்டாயா, புத்தியை ஆரியமத ஸம்பிரதாயங்களில் நாட்டாயா என்று மனமுருகிப் பகவானைநோக்கி ஆன்றோர்களின் முன்னோர்கள் கதறுவார்களன்றோ? ஆகலின் படிப்புடன்ஆசாரமாயிருப்பது அவசியமென்பதை ஒவ்வொருவரும் அறியக்கடவர்.

---

பித்தம் அதிகரித்தால் பைத்தியமாகும். பைத்தியமுண்டானால் சித்தம் ஸ்வாதீன மற்றுப்போகும். ஆதலின் அநேகமாய் புத்தி ஸ்திரமில்லாதபோதும் மனம் நிலைதடுமாறும்போதும் பைத்தியம் உண்டாயிற்றென்றே சொல்லவேண்டும்,மனிதர்களுக்குக்கோபம் உண்டானால் சித்தம் ஸ்வாதீனமாயிருக்கிறதில்லை, அதிக சந்தோஷமாவது வியசனமாவது உண்டானால் மனம் நிலை தடுமாறுகிறது. திடீரென்று கிடைத்த பணம் அதிகாரம் முதலியவற்றால் கர்வமுண்டாகி புத்தி ஸ்திரமின்றிப்போகிறது, அதிபால்யர்களும் நோயாளிகளும் விருத்தர்களும் நீதி நெறிதெரியாமல் வாயில்வந்தபடி உளறுகிறார்கள், அவர்களின் சித்தமும் பேதிக்கிறது, மேற் கூறியவர்களுக்கெல்லாம் பைத்தியமுண்டென்று தெரியவருகிறதால் பெரியோர்கள் அவர்களிடங் கோபங் கொள்ளுகிறதில்லை.

பாபங்களெல்லாவற்றிலும் ஒருவரை அவதூறு செய்வது மிகக்கொடியது. ஒரு தீக்குச்சியைக்கிழித்து வைக்கோற் போரில் வைப்பதால் போர்முழுவதும் எரிந்து தீனியின்றி மாட்டின்வாயில் மண்விழுகின்றது. ஒரு தீக்குச்சியைக் கிழித்து கூரையில் வைப்பதால் அனேகவீடுகள் பற்றி யெரிந்து பண்டங்கள் கரிந்து வழிக்க இடமின்றி ஜனங்கள் தவிக்கின்றனர். வெகுசிரமப்பட்டு பலர் போட்டிருக்கும அணையை ஓரிடத்தில் திறந்துவிட்டால் ஜலப்பிரளயமாகி பயிர்களுங் கிராமங்களும் முழுகிப்போகின்றன. ஊமத்

தை, எட்டிக்கொட்டை; ஆளிமேவர் முதலிய விஷங்களைக் கொடுப்பதால் உயிருக்கே ஹானியுண்டாகிறது. மேற்கூறிய துஷ்டகாரியங்களைச் செய்கிறவர்களுக்கு மஹாபாபம் நேர்டுவதுடன் ராஜதண்டனையுங் கிடைக்கிறது. இவைகளெல்லாவற்றிலுங் கொடுமையானது அவதூறு; எத்தனையோ நாளாக நன்னடைக்கையாலும் ஒருவன் அடைந்த நற்பெயரைக் கெடுக்கவெண்ணங்கொண்டு அவதூறாட்டும், ஆரியமகாபாதகர்கள். பிராணனைவிட மானம் பெரிதாகையால் மானத்தைக்கெடுக்குஞ் சொற்களை வழங்குவது கொலைபைக்காட்டிலும் பெருத்த குற்றம். ஆதலின் அவதூறு செய்கிறவர்கள் கொலையாளிகளுக்கு அண்ணன்கள். ஒருவர்மேல் அபூதகற்பனையாய்ப் பழிபோடுவதுங் குற்றங் கூறுவதும் அவ்வாறு கூறுபவரின் செல்வத்தையும் புகழையுங் கெடுக்குமென்பதைவிவேகிகள் அறிந்திருக்கின்றனர். அவிவேகிகள் அதையறியாமல் நல்லோரைப் புறங்கூறி நிந்தித்துப் பாபிகளாகின்றனர்.

காசியில் வெள்ளைக்காக்கை தலைகீழாய்ப் பறக்கிறதென்றால் அதை நம்பும்பேர்வழிகளுமுண்டு. இதோஜலமிருக்கிறதென்று கானலைக்காட்டி ஏமாற்றுவோர் சிலர். தாமிரத்தைப்பொன்னாக்கித் தருவேனென்று கூறுவோர் சிலர். ஒருகாசைவிநோட்டைப்போல் இன்னொன்று சிருஷ்டிப்பேனென்று சொல்வோர் சிலர். இப்பொய்யர்கள் கூறும் மொழியை நம்பி மோசம் போகலாகாது. திடீரென்றுவந்து நமக்கும் பிறருக்கும் பிரதியுபகாரத்தை இச்சியாமலே நன்மைசெய்யப் பழகியபிறகே அவரது குணந்தெரியுமாதலின் யாரையும் உடனே நம்பிப்பொருளைக் கொடுப்பது நன்றல்ல.

---

"மாதவனை மனனஞ்செய்" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். ஸர்வ ஸம்பத்துகளையும் அளிக்க வல்லவராகிய ஸாக்ஷாத் மகாவிஷ்ணுவின் கிருபையுண்டாகுமாறு பிரதிதினமும் அவரைப் பத்திர புஷ்பங்களாற் பூஜிப்பதும் வாயால் வழுத்துவதும் மனதால் ஸ்மரிப்பதும் அவசியம். இவ்வாறு விஷ்ணுபக்திசெய்கிறவர்கள் இகலோகத்தில் ஸகல போகங்களையும் அனுபவித்து பரலோகத்தில் பகவானுடைய ஸமீபத்திலிருந்து ஸதா ஆனந்தத்தை யனுபவிக்கின்றனர். ஆதலின் நாம் கேசவா, நாராயணா, மாதவா, கோவிந்தா என்ற திவ்யநாமங்களை ஸதா உச்சரிக்கக் கடவோம்.

"ஆரியக்கூத்தாடினாலுங் காரியத்தில் கண்"ணாயிருப்பது நன்று. நமக்குப் பலவித லௌகீக காரியங்களிருந்தாலும் எப்போதும் பகவானையே நினைத்துக்கொண்டிருக்கவேண்டும். அதற்காகநமது முன்னோர்கள் செய்திருக்குஞ் சிறந்தயுக்தியைப் பாருங்கள். மனுஷ்யன் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்போதே 'ஹரி ஸ்ரீஹரி' என்று எழுந்திருக்க வேண்டுமாம். இதனால் பகவானுடைய நினைவு வருகிறது. பிறகு குளிரைப்பாராட்டாமல் காவேரி முதலிய நதிகட்கு ஸ்நானஞ்செய்யச் செல்லும்போது, 'நாராயணா மகாதேவா'

என்று சொல்லிக்கொண்டே போகவேண்டும். அதன் பின்னர் ஆற்றில் ஸ்நானஞ் செய்யும்போது 'ஹரி' என்று சொல்லவேண்டும். பிறகு ஸந்தியாவந்தனம் ஜெபம் முதலியவற்றில் பகவானுடைய ஸ்மரணையே மிகுந்திருக்கிறதென்பதை நாம் சொல்லவேண்டியதில்லை, வீட்டுக்கு வந்தவுடனே பூஜையாரம்பம். அது ஆனவுடன் ஸ்ரீமத் ராமாயணபாராயணம். இவைகளெல்லாம் முடிந்தவுடன் போஜனம். இந்தக் காலத்திலாவது பகவானை ஸ்மரிக்காமலிருக்கலாமோவெனின் முடியாது. ஒவ்வொரு கவள அன்னத்தையும் வாயிற்போட்டுக்கொள்ளும்போதே 'கோவிந்த கோவிந்த, கோவிந்தா' வென்று சொல்லவேண்டும். போஜனமான பிறகு ஆசமனீயம், உபநிஷத், பகவத்கீதை முதலிய வேதாந்த கிரந்தங்களைப் படித்துக்கொண்டிருப்பது. அஸ்தமனமானவுடன் ஸந்தியாவந்தனம், சிவதரிசனம், ஒளபாஸனம், போஜனம், புண்யகதாசிரவணம், பகவந் நாமஸ்மரணை இவ்வாறாக ஒவ்வொருநாளும் ஒவ்வொரு நாழிகையும் ஒவ்வொரு நிமிஷமும் நாம் பகவானை ஸ்மரித்துக்கொண்டேயிருக்கவேண்டுமென்ற பரமோத்கிருஷ்டமான எண்ணத்துடன் நமது முன்னோர்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர். அத்துடன் விட்டார்களா நம்மை? வில்வமரத்தைக்கண்டால் பிரதக்ஷிணம். வில்வ தளத்தைக்கண்டால் சிவனாகப்பாவித்து 'ஹர ஹர' என்று சொல்லவேண்டும். துளஸிச்செடியைக்கண்டால் நமஸ்காரஞ் செய்யவேண்டும். அரசமரத்தைக்கண்டால் நூற்றெட்டுப் பிரதக்ஷிணம். அதன் அடியில் பிரம்மாவும், மத்தியில் விஷ்ணுவும், நுனியில் பரமசிவனும் வஸிக்கிறார்களாம். கோபுரத்தைக்கண்டால் நமஸ்காரம், பெரியோரைக்கண்டால் கும்பிடு, குழந்தைகளைக்கண்டால் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் நினைவு. இப்படியாக எதைக்கண்டாலும் ஈசுவரனென்று தோன்றும்படியும் ஓர்வித பக்தி ஜனிக்கும்படியும் நமது முன்னோர்கள் செய்திருக்கின்றனர். இவ்வளவுதானா? இன்னும் அனேகமிருக்கின்றன. ஆகாசத்தைப் பார்ப்போம். சூரியனைக் கண்டவுடன் நமஸ்காரம். கருடனைப்பார்த்தால் ஸ்ரீஹரியின் ஞாபகம். பூமியைப் பார்ப்போம். பன்றி திருமாலவதாரம். நாய் பைரவ மூர்த்தி. விருஷபத்தைக்கண்டால் பரமசிவனுடையநினைவு. யானையைக்கண்டால் கஜேந்திர ஆழ்வானுக்கு மோக்ஷமளித்த ஆதிமூலப்பொருளாகிய எம்பெருமானுடைய நினைவு. குரங்கைப்பார்த்தால் ஹனுமவாகனராகிய ஸ்ரீகோதண்டபாணியின் நினைவு. ஜலத்தைப்பார்ப்போம். அதில் என்னவிருக்கிறது? மீன்கள் மத்ஸ்யாவதாரமெடுத்த மகாவிஷ்ணுவின் நினைவு உடனே உண்டாகிறது. இம்மாதிரியாக உலகெங்கும் ஈசுவரமயமாய்த் தோன்றும்படியும், நமக்கு 'ஸர்வம் பிரம்மமயம் ஜெகத்' என்னுஞ்சிறந்த அத்வைத உண்மை புலப்படும்படியும், ஸகல பிராணிகளிடத்தும் அன்பு உதிக்கும்படியும் வைகுண்டநாதரிடம் பக்தி ஜனிக்கும்படியும் உபாயஞ்செய்த நம்முன்னோர்களின் மதத்தையும் ஆசார ஸம்பிரதாயங்களையும் நாம் மறக்கலாமா? அன்யமதப் படுகுழியில்விழுந்திறக்க

லாயா மூடர்களன்றோ அவ்விதஞ் செய்வார்கள்? விவேகிகளாகவி ருக்க விரும்பும் நாம் பெருமை தங்கிய நமது மதத்தையும் ஆசா ரங்களையும் அனுஸரித்து பரம பக்தர்களாய் திவ்ய ஞானிகளாய்வி ளங்கி முடிவில் முக்தியை அடையக்கடவோம்.

---

"வாதத்திற் பலவிதமுண்டு" ரஸவாதம், திமிர்வாதம், விவாத ம், நியாயவாதம், பித்தவாதம் முதலியன. இவைகளெல்லாவற்றி லுங் கொடிதாகியது பிடிவாதம். பெரியோர்சொல்லும் ஹிதத்தை க்கவனியாமல் துஷ்டகாரியங்களைச் செய்வதில் பிடிவாதமுடைய பேதையர்கள் அந்தோ நரகத்தில் அழுந்தி அவஸ்தைப் படுகின்ற னர். முற்காலத்தில் நந்தகூபம் என்னும் ஓர்கிணற்றில் நயவசனன் என்றொரு தவளையிருந்தது. இதற்குப் பிடிவாதன் என்றொரு நண்பனுண்டு. இப்பெருந்தவளை சாலையோரத்தில் பழைத்தேக்கத திில் வஸித்துக்கொண்டிருந்தது. நயவசனன் அதைநோக்கி 'நண் பா நீ இங்கேயிருப்பது பிசகு உனக்கு அபாயம் நேரும் ஆனதா ல் என்னுடன் கிணற்றுக்குவந்து வாழ்ந்திரு. உனக்கு யாதொரு குறைவும் நேராது. ஆகாரங்களும் அபரிதமாகக் கிடைக்கும்' என் றது. பிடிவாதன் அதற்குச் சம்மதியாமல் 'நான் வெகு நாளாய் இ ங்கேயிருக்கிறேன். ஆதலின் இதைவிட்டுப் பெயரமாட்டேன்' எ ன்றது. உடனே நயவசனன் 'நேசா நீ உன் பெயருக்கேற்ற பிடி வாதகுணத்தையே கொண்டிருக்கிறாய். அது பிசகு. என் வார்த் தையைத் தள்ளாதே. இனி கோடைகாலம் வரப்போகிறது. தண் ணீர் வற்றிப்போம், நீ என்னுடன் வந்துவிடு' என பெருந்தவளை ஸம்மதிக்கவில்லை, நயவசனன் தன் வீடுபோய்ச் சேர்ந்தது. சில நாள்கழித்து ஓர் பாரவண்டி சாலையிற்போக பெருந்தவளை அதன் சக்கரத்திலகப்பட்டு உயிரிழந்தது. அதுபோல் இதமுரைப்பவர்க ளின் வார்த்தைக்கிணங்காத பிடிவாதக்காரர்பதங்கெட்டுநலிவுறுவர்.

"எமனெனும் கள்ளன்" ஒன்பது வாசலையுடைய நமது சரீர மாகிய கோட்டைக்குட்புகுந்து நடுவிலிருக்கும்விலைமதிக்கத்தகாத ஜீவன் என்னும் இரத்தினத்தைத் திருடுவதற்காக நாட்களையெண் ணிக்கொண்டு சுற்றிவருகிறான். ஆதலின் நாம் பகவந்நாமத்தைச் சொல்லி ஜாக்கிரதைப்படவேண்டுமென்று ஓர்பெரியவர்கூறுகிறார்.

"மக்கள் மனம்வேறு செய்கைவேறு" நாம் சொல்லுகிறபடி அநுஷ்டிப்பதில்லை. ஒருநாள் ஓர் தத்துவசாஸ்திரி கடற்கரையோ ரமாய் நின்றிருந்தான். சுமார் இரண்டுமைலுக்கப்பால் ஓர் கப்பல் வந்து கொண்டிருந்தது. சிலநேரத்துக்கெல்லாம் அக்கப்பல் உடை ந்து வெகுஜனங்கள் சமுத்திரத்தில் அமிழ்ந்துபோனார்கள். அப் போது அந்த தத்துவசாஸ்திரி ஆகாயத்தை நோக்கி 'பகவானே யாரோ ஒருமனிதன்செய்த தப்பிதத்துக்காக எல்லோரையுங் கட லில் அழுத்திவிடுவது நியாயமா?' வென்றான். அந்த சமயத்தில் இ வன் நின்றுகொண்டிருந்தவிடத்தி லிருந்து எறும்பு கூட்டங்கள் புறப்பட்டு தேகத்திலேறத் தொடங்கின. அவற்றில் ஓர் எறும்பு தத்துவசாஸ்திரியை வெடுக்கென்று கடித்தது. அந்த சாஸ்திரிக்கு

கோபம் உண்டாகி எல்லா எறும்புகளையும் ஒருங்கே தேய்த்துக் கொன்றுவிட்டான். உடனே பகவான் அவனிடம்வந்து 'அடே, சில நிமிஷத்துக்கு முன்னால் ஓர்மனிதன்செய்த குற்றத்துக்காக எல்லோரையுங் கடலில் அமுத்திவைத்து நியாயமாவென்று கடவுளை நோக்கி நொந்துகொண்டாயே. அடே உன்னை ஒருஎறும்புதானே கடித்தது. நீ ஏன் எல்லா எறும்புகளையும் ஒருங்கே தேய்த்துக் கொன்றுவிட்டாய். தான் சொல்லும் வண்ணம் அனுஸரித்துக் காட்டுவதன்றோ விவேகிகளின் கடமை' யென்றார். தத்துவசாஸ்திரி வெட்கித் தலைகுனிந்தான்.

---

"மனிதர்களுக்குரிய அஷ்டபோகங்களில் பெண்கள் ஒன்று. எந்த வஸ்துவால் நாம் சுகத்தை யடைகிறோமோ அந்தவஸ்துவை வெகு ஜாக்கிரதையாய் காப்பாற்றுவதவசியம் ஒவ்வொருவனுந் தன் பெண்சாதியால் சுகத்தை யடைகிறதுடன் இல்லறத்தையும் நடத்துகிறதால் அவளிடம் பிரீதியாயிருக்கவேண்டிய தவசியம். ஒரு சமயம் அதிகமான விசுவாஸம் பாராட்டுகிறதும் மற்றொரு சமயம் மடத்து நாயை அடிக்கிறதுபோல் பொத்துகிறதும் சுத்தப் பிசகு. எப்போதும் ஒரு தன்மையாயிருப்பது நன்று. ஸ்திரீகள் குற்றஞ் செய்யாத சுத்தர்களென்று நாம் சொல்லவில்லை. ஆனால் புருஷர்களுங் குற்றஞ் செய்யாமலிருக்கிறதில்லை. குற்றஞ் செய்கிறதென்பது மனிதப்பிறப்பையுடையஒவ்வொருவருக்கும் இயல்பு. குற்றமே செய்யாதமனுஷ்யனும், குற்றமே செய்யாத ஸ்திரீயும உலகத்திலில்லை. குற்றஞ் செய்வதானது அவரவர்களின் விவேகத்துக்கும் அனுபோகத்தும் ஏற்றபடி அமைந்திருக்கிறது ஆதலின் புருஷனாயிருப்பவன் தன்னைமட்டுஞ் சுத்தனென்றெண்ணித் தன் பெண்சாதி செய்வதெல்லாங் குற்றமென்றுன்னி அவளைச் சிக்ஷிக்கத்துணிவது நியாயமல்ல. தானிருக்குங்கௌரவத்தாலும் பெருமிதமான நடையினாலுந் தன்னிடம் பெண்சாதிக்குமதிப்புண்டாக்க வேண்டுமேயன்றி மூர்க்கத்தனமாய் அவளை அடித்து வசப்படுத்த எண்ணுவது அறியாமையேயாம். கோபத்தால் சிற்சில ஸமயங்களில் சித்த ஸ்வாதீனமற்று பெண்சாதியின் மிருதுவானசரீரத்தில் தன்பலமெல்லாங்கொண்டு அடிப்பது உயிருக்கு ஆனியுண்டாக்கி ஹத்திதோஷம் நேருவதுடன் இராஜதண்டனையுங் கிடைக்கச்செய்கிறது. ஆகலால் உத்தமனாயிருப்பவன் பெண்களை அடித்து உபத்திரவிக்காமல் தன் கம்பீரமான நடத்தையால் இல்லறத்தை நடத்துவான். ஒருவேளை பெண்சாதி மிகுந்த துஷ்டையாயிருப்பின் அவளை அடியாமல் தான் விலகிப்போவது நன்று. "பத்தாவுக்கேற்ற பதிவிரதை யுண்டானால் எத்தாலுங் கூடியிருக்கலாஞ் சற்றேனும் ஏறுமாறாக யிருப்பாளேயாமாயிற் கூறாமற்சன்யாஸங்கொள்' என்ற பெரியோர் வாக்கியத்தைக் கண்டுதெளிக.

அப்பன் மதப்பட்டான், ஆத்தாள் எதிர்ப்பட்டாள், நான் வெளிப்பட்டேன் என்று சொல்லுகிற வாக்கியப்படி புருஷன் தன்

மதத்தையடக்கிக் கொள்ளவேண்டி பெண்சாதி யுடனிணங்கி கர்ப் போற்பத்தி செய்கிறான். பின்னர் 10. மாதம்வரையுங் கர்ப்பத்தைச் சுமந்து எத்தனையோ கஷ்டங்களை யனுபவித்து பிள்ளைபெற்று அதைப் பாலூட்டிவளர்த்து சீராட்டி புருஷனைப் புத் என்னும் நரகத்தினின்று மீளச்செய்து அவனுக்கும் அவனுடைய பிதிர்க்களுக்கும் நல்லகதி கிடைக்கும்படி செய்யும மகோபகாரியான பெண்சாதியைத் தயவின்றி நடத்தும் புருஷர்கள் நன்றிகெட்டவர்களன்றோ? நமது நாட்டில் ஸ்திரீகளைக் கொடுமையாக நடத்துஞ்சுபாவம் ஆங்கிலேயபடிப்பு ஏற ஏறச் சற்று அடங்கிவருகிறது. ஆயினும் ஆங்கிலத்தைப் பயின்ற சில புத்திமான்கள் இன்னும் பழைய ஸம்பிரதாயத்தைக் கட்டியழுது பெண்சாதிகளைப்பொத்துகின்றனரே. ஐயா என்ன கோரமிது!!

---

"ஒற்றுமை உயர்வுண்டாக்கும்" சிலசகோதரர்கள் ஒருவரோடொருவர் சண்டைபோட்டுக் கொள்வதால் மூன்றாவது மனுஷ்யருக்கு இலாபத்தை விளைவித்துத் தாங்கள் நஷ்டமடைகின்றனர். இதற்கொரு கதை சொல்லுகிறோம். ஸஹரா என்னும் வனத்தில் ஓர் புலியுங் கரடியும் ஒன்றுசேர்ந்து மான் வேட்டையாடின. ஒரு மான் மட்டும் அகப்பட்டது. மற்றவை ஓடிப்போயின. பிறகு இரண்டு மிருகங்களும் அம்மானை எனக்குனக்கென்று அடித்து ஒன்றோடொன்று சண்டையிட்டுக் காயமடைந்து மூர்ச்சையாகி கீழே விழுந்தன. அதைப் பார்த்துக்கொண்டிருந்த ஓர்நரி வெகு தந்திர சாலியாகையால் இனி இரண்டு பிராணிகளும் மூர்ச்சை தெளிந்தெழுந்திருக்குமுன் அரைஜாமமாகுமென்றறிந்து யாதொருசங்கடமுமின்றி இறந்துகிடந்த மானை தன் வயிறாரத்தின்று பசிதீர்ந்தது. புலியுங்கரடியும் நரியைக்கண்டு வயிறெறிந்தனவே யன்றி எழுந்து தடுக்க முடியவில்லை. இதனால் இரண்டு மூடர்கள் சண்டைபோடுவதால் ஒரு கெட்டிக்காரன் இலாப மடைகிறானென்றேற்படுகிறது.

---

"மித்தை யெது?" இல்லாத பிரபஞ்சத்தை பிரம்மத்தில் ஆரோபிப்பது. மாயையென்பது யாது? எவள் வாஸ்தவத்திலில்லையோ அவள் மாயை. பிரம்மம் ஸத்யம். ஜகத்பொய். சொப்பனம், மாயை, கந்தர்வநகரம் இவை யெங்ஙனமோ அங்ஙனமே இப்பிரபஞ்சம் வேதாந்தங்களிலே விவேகியானவர்களாற் பார்க்கப்படுகிறது. யாதொரு சராசர பிரபஞ்சமாகிற இந்த த்வைதமானது மனத்தோற்றமே. மனோநாசமானால் த்வைதம்விளங்குகிறதில்லை. பிரம்மத்தைக் காட்டிலும் அன்னியமாய் அற்பமுமில்லை. ஸகலஜெகத்தும் இல்லவேயில்லையென்பதாக உபநிஷத்துகள்கூறுகின்றன.

---

முற்காலத்தில் தஞ்சை ஸமஸ்தானத்தில் ஓர் வித்வானிருந்தார். அவருக்குக் கதைசெய்யும (காலக்ஷேபம்செய்யும்) திறமை வெகுவாயுண்டு. இப்போதுள்ள பாகவதர்களைப்போல் ஐம்பது

ரூபா என்ற விலையேற்படுத்திக் கொள்ளாமல் சகல ஜனங்கட்கும் இனாமாகவே பகவானுடைய சரித்திரங்களைச் சொல்லிவந்தார். இவ்வாறு காலக்ஷேபஞ் செய்துவருநாளில் ஓர் நாள் திரௌபதிவஸ்திராபஹாரணம் என்னுந் திவ்ய சரித்திரம் வந்தது. அப்போது பாகவதர் திரௌபதியைதுச்சாஸனன்சபையில் மயிரைப்பிடித்திழுத்துக் கலைகளையுரிந்துவாதைப்படுத்தினானென்று சொல்லிவருகையில் எல்லா ஜனங்களுங் கண்ணீர் விட்டழுதனர். ஒரு பெரிய மனுஷ்யன் மட்டும் இடிஇடி என்று சிரித்து சந்தோஷித்தான். இவன் சிரித்து ஸந்தோஷித்ததைக்கண்டு பாகவதர் மிகுந்த கோபங்கொண்டு அடே மகாபாவி பதிவிரதா சிரோமணியாகிய திரௌபதியை துஷ்டப்பயலாகிய துச்சாஸனன் மயிரைப்பிடித்திழுத்து மானபங்கப்படுத்தி சேலையுரிந்ததாக நான் சொல்லி வருகிறேன். அதைக் கேட்ட சகல ஜனங்களுந் துக்கமடைகின்றனர். அவர்களின் கண்களில் நீர் தளம்புகிறது. மகா பாபியான உனக்கு மட்டும் ஸந்தோஷம் வருகிறதோ? அடே உன்மனைவியை இந்த சபையில் யாரேனும் மயிரைப்பிடித்திழுத்து வஸ்திரத்தைக் களைந்து மானபங்கஞ்செய்தால் உனக்கு சிரிப்புவருமாடா, பல்லையிளிப்பாயாடா என்றார். உடனே பெரியமனுஷ்யருக்கு உண்டான துயரத்துக்கு அளவில்லை. இதனால் பிறருடைய துக்கத்தைக்கேட்டு சந்தோஷிப்பதும் க்ஷேமத்தைக்கேட்டு துக்கிப்பதும் மகாபாதக மென்றறிகிறோம்.

---

"பக்தி செய்தால் முக்தி எய்தும்" என்பது பெரியோர்வாக்கியம். எந்த பிராணிக்கும் பக்திசெய்ய பாத்யமுண்டு. ஓர் யாகஞ்செய்வதென்றால் எல்லோராலுமாகாது, பிராமணராயினும் ஏராளமானபொருளுதவிவேண்டும். பத்தினியொருத்தி கிட்டவிருக்கவேண்டும். அனேக பிராமணர்களுடைய தயவுவேண்டும். உலகப்பற்றையொழித்து துறவியாவதென்றால் எல்லோருக்கும் சாத்தியப்படாது. பற்பல சாஸ்திரங்களைப்படித்து ஸத்ஸகவாசஞ்செய்து குருகடாக்ஷமிருந்தாலொழிய ஞானமுண்டாகாது. மனுஷ்யஜென்மத்தைப் பெற்றாலன்றி ஞானத்தையடைய முடியாது. மேலுந் துறவறமென்பது நெருப்பாற்றில் மயிர்ப்பாலம் போன்று ஸாதிக்க சாத்திய மற்றதாய் மிகுந்த சிரமத்தை கொடுப்பது. மேற்கூறிய எவ்விதமான தொல்லையும் பக்தி மார்க்கத்திலில்லை. விபீஷணன் ராக்ஷசனாயினும் ராம பக்தியால் மிகுந்த செல்வம்பெற்றான். ஜடாயு பக்ஷியாயினும் ராம பக்தியால் மோக்ஷம் பெற்றது. சபரீ ஸ்திரீஜாதியாயினும் ராம பக்தியால் முக்தியடைந்தாள். ஹனுமார் குரங்காயினும் ராம பக்தியால் உயர்ந்த பதவிபெற்றார். ஜாம்பவான்கரடியாயாயிருந்தும் சிறந்த பக்தியால் சிரஞ்சீவி பட்டம் பெற்றார். குகன் ஓடம் விடுவோனாயினும் ராம பக்தியால் மேன்மையடைந்தான். வால்மீகர் வேடர் தொழிலைச்செய்தாலும் ராமராமவென்று ஸ்மரித்ததால் முனிபுங்கவரானார். அஹல்யை கல்லாயிருந்தும் ஸ்ரீராமர துபாத தூளியால்உயிர்பெற்றெழுந்தாள். இவ்வாறு சகலப்பிராணி

களும் ஸ்ரீராம பக்தியால் க்ஷேமமடைந்திருப்பதால் நாமும் ஸ்ரீராகவனைப் போற்றி உய்யக்கடவோம்.

"பொறாமை பொல்லாது" எருதுகளின் உபயோகத்துக்காகக் குவித்திருக்கும் வைக்கோற்போரில் ஓர் நாய் காவலிருந்துமாடுகளைக்கண்டு குலைத்து சீறிவிழுந்து தடுப்பதுபோல் நற்காரியஞ்செய்யும்உத்தமர்களைக்ஷேமமடைய வொட்டாமல்துஷ்டர்கள் பலவித இடையூறுகளையுண்டாக்கித் தடுக்கின்றனர். போரைக்காக்கும் நாய் வீணை பொறாமையைக்கொண்டு குலைக்கிறதேயன்றி வைக்கோலைத் தின்னுகிறதில்லை. அதற்கு வேண்டிய வஸ்துவேறாகவிருக்கிறது. அந்த வஸ்துவுக்காக மாடுகள் போட்டிபோடுகிறதேயில்லை, அப்படியிருந்தும் நாய்கள் மாடுகளைத்தீனிதின்னவொட்டாமல்தடுப்பது அவைகட்குள்ள துர்க்குணத்தின் விசேஷமன்றோ? இதுபோல் அவிவேகியானவன் தானாக ஓர் நற்காரியத்தைச்செய்து முடிக்க அசக்தனாயினும்அதேகாரியத்தை இதரர்கள்செய்யக்கூடாதென்று குறுக்கிட்டுத் தடைசெய்வதில் சக்தியுள்ளவனாயிருக்கிறான். இதற்குக்காரணம் கூடப்பிறந்த தீக்குணமேயாம்.

"அன்னமும் காக்கையும்" அன்னம் வெண்மை நிறம். காக்கை கருநிறம். வெளுப்பு உவப்பாயுங் கறுப்பு வெறுப்பாயுமிருப்பதை காக்கை கண்டு தான் வெள்ளையாவதற்கென்ன செய்யலாமென்று ஆலோசித்தது. அன்னப்பக்ஷியைக் காணும்போதெல்லாங் காக்கையின் அடிவயிறு பற்றியெரிந்தது. கடைசியாக ஓர் யோசனை செய்தது. 'ஓஹோ! இந்த அன்னப்பக்ஷி ஏரிக்கரை, ஆற்றங்கரை குளக்கரை ஆகிய நீர் நிரம்பியவிடங்களில் வசிக்கிறது. அடிக்கடி ஆற்றிலும் ஏரியிலும்ஸ்நானஞ்செய்வதால் வெண்ணிறத்தையடைகிறது. அந்தப்படி நாம் இந்த ஊரைவிட்டு ஆற்றங்கரையிலும்ஏரிக்கரையிலும் வாஸஞ்செய்தால் நமது சிறகும் வெள்ளையாகும்என்றெண்ணி அவ்வாறே பிரயாணமாகி ஆற்றங்கரையில்குடியிருந்து அடிக்கடி ஜலத்தில் முழுகிற்று. கறுப்பு மாறவில்லை. ஊரில் குடியிருந்தாலும் யாரேனுஞ்சோறு போடுவார்கள், அதுவுந்தொலைந்தது. கடைசியில் கறுப்புமாறாமல், வெளுப்புமாகாமல்,சோறுகிடைக்காமல் ஆவியிழந்தது. இப்போதும்அநேக அண்டங்காக்கைகள் அடிக்கடி ஜலத்தில் முழுகுவதைக் காணலாம். இதனால் ஒருவனைப்போல் நாம் ஆகவேண்டுமென்று ஆசைகொண்டு நமக்கு இயல்பாயுள்ள ஸௌகரியங்களையிழப்பது கேட்டைத்தருமென்று அறிந்துகொள்ளுகிறோம்.

---

'ஜீவன் தன்னைப் பிரமமென்றறிவதெப்படிக்கூடும்?' என்பதற்கு ஆரியன் என்னுங்கனவான் கூறுகிறார். அரசன் மகனொருவன் குழந்தைப் பருவமுதல் ஓர்வேடனிடம் அகப்பட்டு வளர்ந்ததாய் வைத்துக்கொள்வோம். அவன் தன்னை வேடனென்றேநினைத்துக்கொண்டிருந்தான். ஒரு சமயம் வேறொருவன் அவனிடம் வந்து "ஐயோ, நீ வேடனல்ல அரசன் மகன்' என்றான், அ[illegible] நிச்சயமாவென்று கண்டறிவது வேடனது காரியம்.வேடன்தன்

னோராஜனாக அறியவும், காணவும், அனுபவிக்கவும் விரும்பினான். பின்னர் அவனோராஜன் வீட்டிற்கொண்டுபோய்விட அவன் ராஜன் றுனெனத்தீர்மானிக்கப்பட்டுப் பட்டாபிஷேகமாய் ராஜனாய்விட்டான். இதில் கவனிக்கவேண்டிய விஷயம் யாதெனில் வேடனாயிருந்தே தன்னை ராஜனாகக்காணவும் அறியவும், அனுபவிக்கவும் விரும்பி ராஜபதவியை யடைந்தானென்பது. வேடனாய் நின்ற ராஜன் அவ்வேடனாயிராமல் வேறுவகையாய்நின்று தன்னையறியவுங்காணவும் அனுபவிக்கவும் முடியாது, அதுபோல் ஜீவன் ஜீவனாயிருந்தே தான் பிரமமென்பதை யறியவேண்டுமேயன்றி வேறுவகையால் முடியாது.

"உற்றது சொன்னால் அற்றது பொருந்தும்" என்பது ஓர் அரிய பழமொழி. ஒருவன் தான் செய்யும் பாபங்களை நினைத்துப் பரிதாபப்படுவது நன்மை. ஆனால் அவ்வாறு பரிதாபப்பட்டு மறுபடியும் அவ்வித பாபங்களைச்செய்யத் துடங்குவது பிசகு. திருடனேமேயென்று மனஸ்தாபப்பட்டு தன்னைத்தானே வெறுத்துக் கொள்ளுகிறவன் மறுபடி திருடாமலிருக்கவேண்டும். எல்லோரும் பிரதி தினமும் ஏதேனும் பாபங்களைச் செய்துகொண்டேயிருக்கின்றனர். ஒருவன் கொலை செய்கிறான். இன்னொருவன் திருடுகிறான். மற்றொருவன் பொய் சொல்லுகிறான், வேறொருவன் கர்மஞ்செய்யாது பிரஷ்டனாகிறான்.

"நாமத்தின்மகிமை" ராமா, கிர்ஷ்ணா, கோவிந்தா, மகாதேவா என்று சில நாமங்களை வாயாற்சொல்லிவிட்டால் பாபங்கள் தொலைந்துவிடுமா? இதெல்லாஞ் சுத்தப்பொய்யென்று தற்கால ஆங்கிலபாஷா விற்பனர்களில் சிலர் கேள்வி கேட்கின்றனர். அவர்கள் புரோடேஸ்டாண்டு மதஸ்தாபனராகிய லூதர் என்னும் விவேகியின் வசனத்தைக் கவனிக்கக்கூடவர். எனக்கு இயேசு கிறிஸ்துவைப்பற்றி யாதொன்றுந் தெரியாது அவருடைய பெயர் மாத்திரந்தெரியும். நான் அவரைப்பற்றிக் கேட்டதுமில்லை. அவரை நேரிற் கண்டதுமில்லை. ஆயினும் வேதத்திலுள்ளவற்றைக்கற்றவுடன் என் மனம் திருப்தியடைந்தது. ஆதலால் அவரை இனி நான்பார்க்கவேண்டுமென்று ஆசைப்படவில்லை. இவ்வுலகத்திலுள்ள துஷ்டர்கள் என்னைக்கொல்ல எத்தனிக்கையில் நான் அவருடைய நாமத்தையே துணையாகப்பற்றினேன். அந்த நாமத்தின்மகிமையால் என் உயிர் தப்பியது. ஸகல ஆபத்துகளினின்றும் நீங்கினேன். இதனால் நாமத்தின் மகிமையைப் புறமதஸ்தர்களும் ஒப்புக்கொண்டிருக்கிறார்களென் றறியலாம்.

நமது நாட்டில் வெகுநாளாக ஓர் துராசாரம் ஏற்பட்டிருக்கிறது. ஆங்லேய பாஷையும், ஆளுகையும் நாகரீகமும் விர்த்தியாகியும் இந்த துராசாரம் நீங்கவில்லை. இதை நீக்குவதற்காகப் பிரயத்தினப்பட வேண்டியது ஜனங்களும் அரசாங்கத்தாருமே. துராசாரம் எதுவெனில், புருஷர்கள் ஸ்திரீகளை நடத்துங் கொடுமையே,

சிறு வயதில் விவேகமுண்டாகாத பருவத்தில் பெண்களைப் புருஷர்களுக்கு விவாகஞ்செய்துகொடுப்பது கெட்ட வழக்கம், ஒருவேளை வயது முதிர்ந்தபிறகு கல்யாணஞ் செய்விப்பது சாஸ்திர விரோதமெனில் பெண்களைப்பெற்ற தாய் தந்தையுங் குணவான்களாகிய பிள்ளைகளைத் தேடிக்கொடுப்பது அசாஸ்திரீயமல்ல. பானையல்ல, சட்டியல்ல, பண்டமல்ல, பதார்த்தமல்ல, ஒருபுருஷனையாவையிட்டால் ஆயிசுபரியந்தம் அவன் வெறியனோ, தடியனோ குடியனோ முரடனோ, மூர்க்கனோ வறியனோ, அவனுடன் இல்லறத்தை நடத்தி அவனிறக்குமுன்னே தான் மங்கில்யத்துடன் மரணமடையாத துரதிர்ஷ்டத்தைப் பெற்றால் அவனிறந்தபின் ஆயிசுபரியந்தம் அமங்கலியாயிருந்து ஸர்வ சுகங்களையும் வெறுத்துஇருக்கவேண்டிய தலைவிதி வெகு காலமாக இந்து மாதர்களைப் பற்றிக்கொண்டிருக்கிறது. இதைஸ்பஷ்டமாக வறிந்தும் அந்தோ மகாபாதகனான அப்பன் காசுக்காசைபட்டோ அல்லது நம்மைவிட்டுத் தொலைந்தாற் போதுமென்ற வழுமையாலோ தன்பெண்ணை கேவலம் படிப்பற்ற மூடனுக்குக் கொடுக்கிறான். இதனால் அப்பெண் ஆயுசுபரியந்தம் வியஸனத்தையே யடைந்து பரிதபிக்கிறது ஐயோ! இப்பெண் அழுதுவிடும் கண்ணீர் அப்பனைக்குத்தாதோ! அவனை அனலைப்போல் எரிக்காதோ? ஏழை அழுதகண் கூரியவாளை யொக்கும் என்ற பழமொழி பொய்த்துப் போமோ? சில தந்தைகள் பெற்ற கடனைக்கழிக்க வேண்டி பெண்களை முன்பரிசயமில்லாத பேர்களுக்குக் கல்யாணஞ்செய்து கொடுத்து எக்கேடு கெட்டாலுங் கெடட்டுமென்று சும்மாவிருக்கின்றனர். இத்தகைய பெண்களின் நிலைமையையறிந்த புருஷர்களாவது விசுவாசம் பாராட்டுவது நன்றோமே. அதுவுமில்லை. நமது நாட்டில் ஸ்திரீகளைக் கல்யாணஞ் செய்தால் அவர்களை யடிப்பதற்கு உடனேஸ்வதந்திரம் உண்டாய் விட்டதாக எண்ணி அற்பவிஷயங்களில் தங்கள் உத்தரவுக்கு மீறி நடந்ததாக நினைத்துப் பொத்துகின்றனர். இதுகொடுமையன்றோ ஒருவனுக்குப் பெண்ணைக் கல்யாணஞ்செய்து கொடுத்தால் அவன் எந்த தேசத்துக்குப் போகிறானோ அங்கே தன் பெண்ணும் போகவேண்டுமே, அவளுயிரையும் வாழ்வையும் புருஷனிடம் ஒப்பிக்கிறோமே யென்னும் எண்ணங்கொண்டு தந்தை நல்ல யோக்யனாய், குணவானாய் கல்வியானாய், தெய்வபக்தி யுள்ளவனாய்ப் பார்த்து விவாகஞ் செய்துகொடுக்கவேண்டும். அப்படி செய்யாது பெண்களின் இஷ்டப்படி நடவாது, வரனது யோக்யதையை யறியறியாது கொடுப்பது துராசாரமென்பதிற் றடையில்லை.

---

நம்மையாளும் ஆங்கிலேயர் வசிக்கும் நாடாகிய இங்கிலாந்து தேசத்தில் 17-வது நூற்றாண்டில் ஜேம்ஸ் என்னும் ஓர் அரசன் இருந்தான். அவன்காலத்தில் ஜெப்ரேஸ் என்னும் ஜட்ஜியிருந்தார். அவருக்கு அநியாயாதிபதி யென்னும் பட்டமே தகுந்தது. தமது

மதத்துக்கு விரோதமாயிருப்பவர் சிறிது குற்றஞ் செய்யினும் ரௌத்திராகாரராய்க் கோபங்கொண்டு மரணதண்டனை விதிப்பார். அவ்வாறு விதிக்குமுன் அக்குற்றவாளிகளை வாயில வந்தபடி திட்டுகிற வாடிக்கையுமுண்டு. ஓர்நாள் ஒரு கூலிக்காரன் இவரிடம் அகப்பட்டுக்கொண்டான் ஜெப்ரேஸ் தமதுபிரம்பை அவன் தேகத்துக்கு நேரே நீட்டி இந்தப்பிரம்பின் ஓரத்திலிருப்பவ ன் பெரிய போக்கிரி என்றார். குற்றவாளி அவரை நோக்கி "சுவாமீ, எந்த ஓரத்தில் நிற்பவன்" என்று கேட்டான். ஜட்ஜி வெட்கித் த லைகுனிந்தார். தலைக்கு மிஞ்சின தண்டனையில்லை யென்பதால் மரணதண்டனை விதிக்கப் பெற்றவர்கள் பயமற்றுப் பேசுவார்கள். அவர்களிடம் நியாயாதிபதி வாயாடுவது கஷ்டமாய் முடியும்.

ஸ்ரீநகர் என்னுந் திவ்ய க்ஷேத்திரத்தில் இரஞ்சித சிங்கு என்னும் ஓர் அரசனுண்டு அவன் பிறந்தபோது ஜாதகங் கணித்த ஜோஸ்யர் அவன் 25-வது வயதில் சண்டைபோட்டு காயமடைந்து இறந்துபோவானென்றார். ஷை யரசன் தாய் தன்குழந்தையைக் காப்பாற்றவெண்ணி அதை அமிர்த ஸரஸில் உடம்பு முழுவதும் அமிழும்படி தோய்த்தாள். அவ்வாறு தோய்த்தால் கத்தி பாயாது காயம்படாது என்று சாஸ்திரம். ஷை தாய் அவனுடைய வலது கையைப் பிடித்து ஸரஸில் அமிழ்த்தியதால் அந்தக் கைமட்டும் மேலேயிருந்துவிட்டது. நனையவில்லை. கடைசியாகவயது 25ஆனவுடன்ஓர்சண்டை நேரிட்டு அமிர்தஸரஸில்அமிழாத வலதுகையிற்குண்டுபட்டுஉயிர்நீங்கியது. இதனால்விதிவலிதென்றும் அதைவெல்லுதல்யாராலும் சாத்தியமலலவென்றுஅறிகிறோம்.

---

"தவத்தையியற்றிப் பவத்தை யகற்று" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். எப்போதும் மனதைச் சிற்றின்பங்களிற் செல்லவிடாமற் பகவானது பாதகமலங்களிற் திருப்பி ஸதா தியானித்துக் கொண்டிருக்கவேண்டும். அவ்வாறு செய்வதால் நல்ல ஞானமுண்டாகி முக்திகிடைக்கும்

"சிவமொன்றே யுண்டு" ஸச்சிதாநந்த சிவத்தினிடஞ் சுஜாதி, விஜாதி, சுவகதபேதங்களில்லை மாத்துக்கு மற்றொரு மரம் சுஜாதி. அதாவது மரத்தைப்போன்ற சாதி. மாத்துக்கு அதினின்றும் உண்டாகும் பூ, பிஞ்சு, காய் முதலியன சுவகதம், என்றால் தன்னிடத்தினின்று தோன்றி தன்னை விட்டுநீங்காதிருத்தல் என்பது பொருள். சிவசாதியைப்போல் வேறே யொரு பொருளுமில்லை, சிவசாதிக்கு வேறு சாதிப்பொருளுமில்லை. சிவத்தினின்றுந் தோன்றிய ஓர் பொருளுமில்லை. ஆதலின சிவமொன்றேயுள்ளதென்றும் அதைத்தவிர மற்றொருபொருள் இல்லை யென்றும் ஏற்படுகின்றன. இவ்வாறு பெரியோர் கூறுகின்றனர். ஆதலின்உண்மைப்பொருள் பரப்பிரம்மம் ஒன்றே யென்பதை ஊகிக்கவேண்டும்.

---

முன்னொரு சமயம் ஸ்விட்ஸர்லாந்து தேசத்தில் ஓர் பூனையை வெகு அன்புடன் வளர்த்துவருகையில் அயல்வீட்டாரொரு

வன் யாது காரணத்தாலோ அதைக் கொன்றுவிட்டான். இதைக் கண்டு ஷை துரைசானி மிகுந்த வியஸனங்கொண்டு எலிகளை எதேஷ்டமாகப் பிடித்து ஓர்பெட்டியில் அடைத்துப் பாத்திரமாய்மூடி முத்திரை போட்டு அவ்வீட்டானுக்கனுப்பினாள். அவன்ஏதோ தனக்கு வெகுமதி கிடைத்ததென்ற ஆசையுடன் அதைத்திறந்து பார்த்தான். 100-எலிகள் புலு புலு வென்று புறப்பட்டு வீட்டின் அறைகட்குள் ஓடின. அன்று முதல் அவ்வீட்டுக்காரனுடைய துணிகளைக் கடித்துக் கொந்திரவு செய்தன, அவன் ஒருநாள் துரைசானியை நோக்கி 'ஏன் எலிகள் நிறைந்த பெட்டியை அனுப்பினாய்' என்றான். அவள் 'என்பூனைஉனக்கு சத்துருவாயிற்றே, எலிகளாவது மித்திரர்களாயிருக்கட்டுமென்றனுப்பினே'னென்றாள்.

"புத்தியினுஞ் சிறந்தது யுக்தி" ருஷியா தேசத்தில் மகாபீடர் என்னும் ஓர் சக்கரவர்த்தி யிருந்தார். அவருடைய ஸமஸ்தான விகடகவியொருவனுண்டு. அவன் மகா யுக்திசாலி. ஒரு சமயம் அவனுடைய சகோதரன் ஏதோ கெட்ட காரியஞ் செய்து மரணதண்டனை விதிக்கப்பெற்றான். அவனுயிரைக் காப்பாற்றும்படி சக்கரவர்த்தியை வேண்டிக்கொள்ளுமாறு விகட கவி வந்துகொண்டிருக்கையில மகா பீடர் கண்டு 'அடே, நீ, கேட்கப்போகிற வரனை நான் கொடுக்கமாட்டேன். இது சத்தியம். நீ ஏன் வீணாக அலைகிறாய்? என்றார். விகடகவி மகராஜ் அப்படியானால் என் சகோதரனைத் தூக்கிற் போட்டுவிடுங்கள். அவனுக்கு விதித்த மரணதண்டனையை உறுதி செய்யுங்கள்' என்றான். அரசன் தான் சொன்ன வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அவன் கோரிக்கொண்டபடி குற்றவாளிக்கு விதித்த மரண தண்டனையை உறுதிசெய்யாமல் மன்னித்துவிட்டான். இம்மாதிரியாக விகடகவி, தான்கொண்ட கருத்தை நிறைவேற்றி அரசனிடஞ் சம்மானமும பெற்றான்.

ஓர் ஆஸ்திரேலிய கனவான் வியன்னாவில் பெரிதாகிய ஓர் வீட்டைக்கட்டி அதில் "பேராசையின்றி பகவான் கொடுத்த மட்டிலும் போதுமென்று திருப்தி யடைகிறவர்களுக்கு இந்த வீடு இனாமாய்க் கொடுக்கப்படும்" என்று எழுதியிருந்தார். அதை ஓர் மனிதன் படித்து அக்கனவானிடம் வந்து, "ஐயோ நான் பேராசைக்காரனல்ல எப்போதும் பகவான் கொடுத்தமட்டிலும் போதுமென்ற திருப்தி கொண்டவன். ஆகையால்தாங்கள் விளம்பரஞ் செய்திருக்கிறபடி எனக்கு இவ்வீட்டை இனாமாகக் கொடுங்கள்" என்றான்; இவன் வார்த்தைதனைக்கேட்டு ஆஸ்திரேலிய கனவான் சிரித்து அடே, மூடா இப்போது இந்த வீடுவேணுமென்று ஆசைப்பட்டாயன்றோ. பகவான் உனக்குக் கொடுத்திருக்கும் வீடுபோதாதென்பது நீ இங்கு வந்து கேட்டதால நன்றாக விளங்குகிறது. ஆதலின் பேராசைக்காரனாகிய உனக்கு நான் வீட்டைத் தரமாட்டேன் போவென்று துரத்தி விட்டான்.

நீதி நூல்படித்த இரண்டு வித்துவான்கள் ஊர்ப் பிரயாணம் போகையில் ஒருவரை யொருவர் சந்தித்து நேசராயினர். அவ்வி

ருவரில் ஒருவன் கட்டுசோறு கொண்டுவந்திருந்தான். இன்னொருவனிடம் அன்னத்துக்கு ஐவேஜில்லை. இவ்வாறிருக்கையில் ஐவேஜற்றவன் எப்படியாவது அவன் கொண்டுபோகுஞ் சோற்றில் பாதி நாம் வாங்கித் தின்னலாமென்றெண்ணி யிருந்தான். சோறு கொண்டு போனவன் ஐவேஜில்லாதவனை நாம் ஏமாற்றி கட்டமுதை முற்றிலும் நாமே சாப்பிடலாமென்றிருந்தான். பகல் பதினைந்து நாழிகையாயிற்று. இருவருக்கும் பசியுண்டாயிற்று. மத்தியில் ஓர் நதி யோடிற்று. அதன் கரையில் சோறுகொண்டுவந்த வித்வான் தன் மூட்டையை யவிழ்த்து சாப்பிடப் போகையில் ஐவேஜற்றவன் 'ஐயா பாத்துண்' என்று நீதிநூல் கூறுகிறதென்றான். இவன் ஆம் அதுமெய்தான். நீ உட்காரும் இதோ உமக்கு இலைபோடுகிறேன், என, பசியேப்பக்காரன் உட்கார்ந்து கொண்டான். உடனே கட்டமுதுக்காரன் ஒரு பருக்கையை எடுத்து நேசனது இலையில் வைத்து 'எள்ளளவாயினும் மலையளவாய்க் கொள்வது சான்றோரியல்பு' என்று நீதிநூல்கூறுகிறது. ஆகலின் தாங்கள் இக்கப்பருக்கையை அபரிமிதமாக வெண்ணி யுண்டு திருப்தியடைய வேண்டுமென்று தான் கட்டுச்சோற்றை முற்றிலுஞ் சாப்பிட்டான். ஐவேஜற்ற வித்வான் ஏமாந்துபோனான்.

முற்காலத்தில் மகா அலெக்ஸாந்தர் என்னும் அரசன் இந்தியாவின்மேற் படையெடுத்து சிந்து நதிக் கரையிலுள்ள தேசங்களைக் கைபற்றினான். இவ்வரசன் போர்க்களத்திலேயே கவிகள் செய்யும் வல்லமையுள்ளவன். எப்போதும் பண்டிதர்களால் சூழப்பட்டு கல்விப்பிரியனாய் காலங்கழிப்பதே இவனது சுபாவம். இத்தகைய சாமர்த்திய சாலியான அலெக்சாந்தர் இந்து சாஸ்திரிகளை ப்பரீக்ஷிக்க வேண்டி ஓர் ஜோஸியனையும், ஒரு தார்க்கிகனையும் வரவழைத்தான், முதலில் தன் ஜோஸியனை நோக்கி இன்றைக்கு எவ்வளவு மழை பெய்யும் என்றான். அவன் கணக்குப்படி ஓர் குடம் மழை பெய்யுமென்றான். பிறகு தான் வரவழைத்த இந்து ஜோஸ்யனைக் கேட்டான். அவன் ஒருவிரற்கடைகுறைய ஓர்குடம் மழை பெய்யும் என்றான். இவர்களில் இன்னார்சொன்னது உண்மையென்று அறியவேண்டி மழைபெய்ய வாரம்பிக்கவுடன் ஓர் குடம் வைத்தான். அதில் உண்மையாகவே குடம்நிறையமழைபெய்துங் கடைசியில் ஜலஞ் சற்று தளும்பிவழிகிற வாடிக்கை யாதலால் மழையோய்ந்து குடத்தைப் பார்க்கும்போது ஓர்விரற்கடை குறைவாகவிருந்தது. உடனே இந்துஜோஸ்யனது லெளகீக ஞானத்துக்காக அகமகிழ்ந்து அவனுக்கு வேண்டிய வெகுமதிகள் கொடுத்தான். அதன் பிறகு தார்க்கிகனையழைத்து அவனிடம்ஒருபக்கங்கோணலாயிருக்கும் ஓர் கொம்பைக்காட்டி இது என் இப்படி வளைந்திருக்கிறது என்றான். அதற்குத் தார்க்கிகன் "அலெக்சாந்தராகிய தாங்கள் வந்து என்னை இம்மாதிரி கேள்வி கேட்கப்போகிறதற்காகவே இந்தக்கொம்பு இப்படி வளைந்திருக்கிறது" என்றான். அவனுக்கும் நல்ல பரிசுகிடைத்தது.

"வேண்டும்போது அழுவாள் சிரிப்பாள் விலைமாது" புருஷர்களின் மனதை ஸ்வாதீனப்படுத்த வேண்டி ஸ்திரீகள் ஸமயத்துக்குத் தக்கபடி அழுவதுஞ் சிரிப்பதும் ஸ்வபாவம். ஆதலின் புத்திசாலியா யிருப்பவன் பெண்கள் அழுவதைக்கண்டு உடனே பரிதாபப்படுவதுஞ் சிரிப்பதைக்கண்டு ஸந்தோஷப் படுவதுங் கூடாது. தங்கள்காரியம் நிறைவேறவேண்டி கண்ணுக்குக் கலத்தண்ணீர்விடுவார்கள். விலைமாதர்கள் தாங்கள்படும் நோயைக் கவனியாது பணத்தில்மட்டுந் திருஷ்டியுள்ளவர்களாய் விட புருஷர்களைக்கண்டு வெற்றிலைபோட்ட வாயுடன் பற்களைக்காட்டி நகைப்பார்கள்.

"பணத்துக்காசைபட்டு பெண்ணைக்கொள்பவன் பைத்தியக்காரன்." குணத்தைப் பெரிதாக எண்ணுமல் பணத்தைப்பெரிதாக பெண்ணி ஓர் பெண்ணை விவாகஞ்செய்கிறவன் அவள் ஆடும் ஆட்டத்துக்கு உள்ளடங்கி தன் பெருமைபழிந்து எண்சாணுடம்பும் ஒரு சாணுய்க் குன்றிப்போகிறான்.

"பெண்களிருப்பிடம் பேய்களிருப்பிடம்." பெண்களால் படுங்கஷ்டமும் பேய்களால்படுங் கஷ்டமும் ஒன்றென்பதைக்குறிக்க இப்பழமொழி வழங்குகிறது. பேய்பிடித்தவன் தன்னிஷ்டப்படி செய்யமுடியாமல் பேயின் இஷ்டப்படி ஆடுகிறான், பாடுகிறான், பல்லையிளிக்கிறான், கல்லையெறிகிறான். தனக்குத்தானே பேசிக்கொள்ளுகிறான், வீண்காலம் போக்குகிறான். அதுபோல் ஸ்திரீயின் மோகத்தால் பீடிக்கப்பட்டவன் சித்தஸ்வாதீனமற்று அவளிஷ்டப்படி செய்கிறான், பணத்தைச் செலவழிக்கிறான், சிற்றின்பத்தை நுகர்ந்து பல்லையிளிக்கிறான், மானத்தைத் தவிர்க்கிறான், மதிகெட்டு மதம்பிடித்தலைகிறான். ஆதலின் பெண்கள்செய்கையும் பேய்கள் செய்கையும் ஒன்றென் றேற்படுகிறது.

---

"சிவோஹம்" சிவோஹம்" என்றுபெரியோர் கூறுகின்றனர். கருத்து யாதெனில் சிவனே நான் என்பது. சிவனே நானெனல் தகுமாவெனின் தகுமென்றே கூறுவோம். இங்கே "நான்" என்பது ஆத்மாவைக் குறிக்கிறது. சரீரத்தையல்ல. இந்த ஆத்மாவே எங்கும் நிறைந்துள்ள சிவனென்பது அத்வைதிகளின்கொள்கை.

"நியாயமே வெல்லும்" என்பது அடியில்வருங் கதையால் நிரூபிக்கப்படுகிறது. பாடலீ புரமென்னும் நகரில் தனிகனான ஓர் வணிகனிருந்தான். அவன் அனேக பட்டுவஸ்திரங்களை வெகுதூரத்திற்கப்பாலுள்ள காசியில் விற்பதற்காக ஓர் ஒட்டகத்தை வாடகைக்குப்பேசி அதன்மேற்போட்டுக்கொண்டு போனான். ஒட்டைக்காரன் நடுவழியில் வியாபாரிக்கு ஜுரங்கண்டதால் அவனை ஓர் ஊரில் விட்டுத் தான்மட்டும் ஒட்டையை யோட்டிக்கொண்டு காசிப்பட்டணம் போனான். அங்கே பட்டுவஸ்திரங்களை விற்று ரூபா ஆயிரஞ் சேர்ந்தவுடன் ஓர் கடைவைத்து வியாபாரஞ்செய்யலாமென்றெண்ணிக்கொண் டிருந்தான். சில நாட்களுக்கெல்லாம்நோய்தீர்ந்து ஸௌக்கியமடைந்த வணிகன் காசிக்கு வந்து சேர்ந்து

வெகுசிரமப்பட்டு ஒட்டைக்காரனைக் கேடிக் கண்டு பிடித்து பட்டு வஸ்திரங்களெங்கே யென்றான். அவன் :

"முழுப்பூசனிக்காயையுஞ் சோற்றில்மறைக்கிறவ" னாதலின் ஒட்டையை யார்கண்டார்கள், நான் ஒட்டைக்காரனல்ல, ஒருபோதும் ஒட்டகத்தை நான் ஓட்டினதில்லையென்று சாதித்தான். பின் இருவர்களும் நியாயஸ்தலத்துக்குச் சென்று தங்கள் விவாதத்தைத்தெரிவித்துக்கொண்டனர். நியாயாதிபதிஒட்டைக்காரனைநோக்கி நீ அந்த வியாபாரியின் பட்டு வஸ்திரங்களை உன் ஒட்டையின்மேலேற்றி இங்குகொண்டுவந்தையா வென்றார். அவன் தன்னிடம் ஒட்டையேயிருந்ததில்லை நான் ஒட்டையோட்டுபவனுமல்லவென, நியாயாதிபதி சிரித்து இருவர்களையும் நோக்கி மூடர்களே ஸாக்ஷியில்லாமல் பிராதைமட்டுங் கொண்டுவந்து என்ன பிரயோஜனம். உங்கள் வியாஜ்யத்தைத் தள்ளிப்போட்டோம் என்றார். உடனே இருவர்களும் வெளியேபோகையில் நியாயாதிபதி தானும் பின்னாற்சென்று 'ஓ, ஒட்டைக்காரரே' என்று கூவினார். உடனே பிரதிவாதியாயிருந்த மோசக்காரன் திரும்பிப்பார்த்தான். தக்ஷணமே அவனைப் பிடித்துவரச்செய்து தக்க சிக்ஷைவிதித்து அவனிடமிருந்த ரூபாயை வியாபாரிக்கு வாங்கிக்கொடுத்தார்.

---

"நட்புந் தயையும் பிறவிக்குணம்" என்று முன்னொருமுறை கூறியிருக்கிறோம். இதற்குத் திருஷ்டாந்தமாக ஓர் கதைசொல்லுகிறோம். இத்தலி நாட்டில் ரோமாபுரி யென்றொரு பெரிய பட்டணமுண்டு அங்கே வயதுமுதிர்ந்த ஓர் கிறிஸ்துவன் நாலுபேர்கூடும் வழியில் தினந்தோறும் உட்கார்ந்து பிடில் வாசிப்பான். ஐந்தாறு அணா கிடைக்கும். இவ்வாறு ஜீவனஞ்செய்துவருகையில் ஓர்நாள் இவனுடைய துரதிர்ஷ்டத்துக்கேற்ப ஒருபைசாவும் கிடைக்கவில்லை. அந்திநேரமட்டும்பிடிலைவாசித்துக்கொண்டிருந்தான். ஒருவருக்குந் தயவுபிறக்கவில்லை. கடைசியாக வாசிப்பதை நிறுத்தி பிடிலைக் கையில்வைத்துக்கொண்டு கதறியழவே அந்நகரத்தில் பிரசித்தியடைந்த ஓர் ஸங்கீதவித்வான் அவனிடமிருந்த பிடிலைத்தான் வாங்கிவாசிக்கத் தொடங்கினார் ஏழையின் கப்பறையில் காசுகளும் வெள்ளி நாணயங்களும் ஒருமணி நேரத்துக்குள் நிறைந்துவிட்டன. பிறகு இந்தப்புதிய மனிதர் யாரென்று விசாரித்ததில் ஸங்கீதத்தில் மகா வித்வானாகிய பீட்ரோவென்று தெரியவந்தது. இவருக்கு ஏழைமேலுண்டான தயைக்காகஎல்லோரும் ஆச்சரியப்பட்டு இவரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

ஓர் குள்ளநரி நாடகக் கொட்டகையில் நுழைந்து ஏதேனும் தின்பண்டமிருக்கிறதோவென்று தேடிற்று. ஒன்றுமகப்படவில்லை கடைசியாக மனிதனுடைய தலையைப்போல் மரத்தினால் ஒரு பொய்த்தலை செய்து வைத்திருக்கக்கண்டு அடியில் வருமாறுசொல்லிற்று "ஆகா! என்ன அழகான தலையிது!! ஐயோ மூளையில்லையே. என்ன பிரயோஜனம்" என்றது. இதனால் ஒருவன் அழகாயி

ருந்தும் அவனிடங் கல்வியில்லையேல் பிறர் அவனை மதிக்கமாட்டார்களென்றறிகிறோம்.

மனம் வேறுபுத்தி வேறென்பதை நமதுநண்பர்கள், ஸ்ரீமான் விவேகாநந்த சுவாமிகளின் உபன்யாசங்களாகிய ஞானத்திரட்டின் முதற்பாகத்தில் படித்திருப்பார்களாயினும் அவ்விரண்டின் குணகுணங்களை ஒருவாறுவிஸ்தரிக்கத்தொடங்குகிறோம். எப்போதுஞ் சலித்துக்கொண்டிருப்பதே மனதின் சுபாவம். சாமான்யர்களுக்கு ஓர் பொருளில் இன்பமுண்டென்று தோன்றினால் உடனே அவர்கள் எவ்விதத்திலேனும் அப்பொருளையடைய விரும்புகிறார்கள். அதாவது, அவர்களின் மனம் இன்பஞ்செறிந்த அப்பொருளைப்பற்றுகிறது. உதாரணமாக மதுவில் ஒருவித இன்பமிருக்கிறதென்றுன்னி குடிகாரனது மனம் அதை நாடுகிறது. விலைமாதரிடம் இன்பமுளதென்றெண்ணி விடபுருஷர்களின் மனம் அவளை நாடுகிறது. பணத்தில் இன்பமுண்டென்று நம்பி சகலவித உத்தியோகஸ்தர்களும் வியாபாரிகளும் அதைத் தேடுகின்றனர். நற்குணமுள்ள மாணாக்கன் சிறந்த நூல்களைக்கற்பது இன்பமென்று கருதுகிறான். மேற்கூறிய உதாரணங்களால் உண்மையாகவே ஓர் பொருளில் இன்பமிருக்கிறதென்று அறியுஞ் சக்தியை மனம்பெருவிட்டாலுந் தற்காலத்தில் இருக்கும் போலி இன்பத்தை எதார்த்த இன்பமாக எண்ணப்படுகிறது. புத்தியின் காரியமோ அப்படியல்ல. மனம் நாடுகிறவற்றில் உண்மையான இன்பம் நிறைந்த பொருளையே புத்தி தேடுகிறது. புத்தியானது நன்மை தீமைகளை ஆய்ந்தறிந்து உபயோகமுள்ள ஒன்றை நிச்சயிக்குஞ் சக்தியைக் கொண்டிருக்கிறது. அதுபற்றியே உலகத்தில் ஒருவன் பிசகான காரியத்தைச்செய்தால் உனக்கு புத்தியில்லையா என்றுபெரியோர் கண்டிக்கின்றனர். பிசகிப்போன விஷயத்தைப்பற்றி உனக்கு மனமில்லையாவென்று யாருஞ் சொல்லுகிறதில்லை. ஒன்றைக்கண்டுவிரும்புவது மனதின காரியமாயும், விரும்பியகாரியத்தால் நன்மையுண்டாகுமென்று அதைச் செய்ய நிச்சயிப்பது புத்தியின் காரியமாயுமிருக்கிறது.

---

ஒரு தனவான் வீட்டு மாப்பிள்ளையின் பற்கள் ஊத்தைபடிந்து கறுத்திருந்தன. அதனால் மாமியார் மாப்பிள்ளையிடம் அரையணாகொடுத்து கரும்பு வாங்கித்தின்னும்படி சொன்னாள், அவளுடையஎண்ணம் யாதெனில் கரும்பு தின்றால் ருசியாயிருப்பதுடன் பற்களின் ஊத்தை நீங்கி வெளுக்குமென்பதே, இதையறியாதமாப்பிள்ளை கடைத்தெருவுக்குச் சென்று அரையணாவுக்குக் கரும்பு வாங்கினால் கொஞ்சமா யிருக்குமென்று தேங்காய்ப் பிண்ணாக்கில் ஒருபடிவாங்கி மடியிற்கட்டிக்கொண்டு தின்றான். ஏற்கெனவே ஊத்தைபடிந்து கறுத்திருந்த பற்கள் இன்னும் அதிகமாய்க்கறுத்துப்பழுத்துப்போயின. இதனால் பொருள்களின் குணகுணங்களை யறியாமல் அதிகங் கிடைக்கிறதென்ற ஆசையால் சொள்ளைசொத்

தைகளைக்கொள்வது பயனைத்தராமல் கெடுதலை விளைவிக்கு மென்றறிகிறோம்.

---

"காலமோ கோடைகாலம்! வெயிலோ வெகு உக்கிரம்!! இக்காலத்தில் பகல்வேளையில் வழிநடப்பவர்களுக்கு தாகமுண்டாவது ஸகஜம்." என்றெண்ணி இரண்டு இடைச்சிகள் முறையே பாலையும் மோரையும் விற்பதாகச் சாலைவழியிற் கொண்டுவந்தார்கள். முதலிடைச்சி வழிப்போக்க ரொருவனைக்கூவி 'ஐயா பாலிருக்கிறது; படி ஒரு அணா. விலைகொடுத்துவாங்கி யுட்கொண்டு உங்கள் தாகத்தைத் தணித்துக்கொள்ளுங்கள்' என்றாள். மற்றொரு இடைச்சி அதே வழிப்போக்கரை விளித்து 'ஐயா, மோரிருக்கிறது. படி காலணாதான் விலை, ஒரு அணா கொடுத்தால் பாலைப் போல் நாலுபங்கு மோர் தருகிறேன், நன்றாகச்சாப்பிட்டு தாகத்தை தீர்த்துக்கொள்ளும்' என்றாள். வழிபோக்கன் யோசிக்கலானான். "பாலைவாங்கி யுட்கொண்டால் தாகந்தீரும், இரத்த புஷ்டியாகும். சரீரத்திற்கு வலுவைக்கொடுத்து வழிநடக்க ஸௌகரியமாயிருக்கும். பால் தாகத்தை தீர்ப்பதுடன் பசியையும் ஆற்றுகிறது. அதன் குணம் அனந்தம். பாலைலன்றோ குழந்தைகள் வளருகின்றன. பாலையன்றோ பகவானுக்கு அபிஷேகஞ்செய்கிறார்கள். மோரை யபிஷேகஞ்செய்கிற வழக்கமில்லை மோரைக்குடித்தால் தற்காலந் தாகசந்தியாகுமேயன்றி சிறிது தூரம் நடந்தபின் சிறுநீராய்க்கழிந்து மறுபடியுந் தாகமுண்டாகும்" என்று மோரை நிராகரித்து பாலைவாங்கி யுட்கொண்டான். இதைப்போல் விவேகிகள் பிறர் வார்த்தையையும் வர்ணனையையும்எற்றுக்கொள்ளாமல் தங்கள் புத்தியினால் ஊகித்து ஒவ்வொரு பொருளின் குணகுணங்களையும் அறிந்துகொள்வர்.

அற்பஜெந்துக்களாகிய ஈயும், கொசுவும் நாம் வேண்டாமலே நம்மிடம் வந்து உடம்பில் மெய்க்கின்றன. அவைகளையுடனே ஓட்டிவிடுகிறோம் ஈயும், கொசுவுஞ் சரீரத்தை வருத்துகின்றன. மனதைக்கெடுக்குந் துஷ்டனோ வெற்றிலை பாக்குவைத்து அழைத்தது போல் நாம் கூப்பிடாமலே நம்மிடம் வந்து வாயில்வந்தபடி உளறத்தொடங்குகிறான். இவனது உபதேசத்தை நாம் கேட்பதால் நமக்குக் கௌரவ ஹானியுண்டாகிறது. ஆதலின் ஈயையும், கொசுவையும் ஓட்டுவதுபோல் துஷ்டனையும் ஓட்டிவிடுவது நலம்.

"கண்ணனைப் போற்றிக் கருத்தை யாற்று" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர் பகவத்கீதையைத் தந்தருளிய பரமகருணா நிதியாகிய ஸ்ரீ கிர்ஷ்ணபகவான் தன்னைத் தியானிப்பவர்களின் காரியத்தை தானேசெய்து முடிக்கிறார், முன்னொருசமயம் விதுரர்என்னும் பக்தர் சுகமானவாசனைவீசும் வாழைப்பழங்களை பகவானுக்கு உரித்துக்கொடுக்கவெண்ணி அவசரத்தில் அன்பின் பெருக்கால் மெய்மறந்து பழத்தைக்கீழேயெறிந்து தோலைக்கொடுத்தார். அந்தத் தோல்களை விதுரரிடம் பேசிக்கொண்டே பகவான் ஆநந்தமாக உட்கொண்டார். சிறிது நேரத்துக்கெல்லாம் விதுரர்

கீழே பார்த்துப் பழங்கள் கிடப்பதையும் பகவான் தோலைப் புசிப்பதையும் எண்ணி வருந்தினார் ஸ்ரீகிர்ஷ்ணமூர்த்தி "ஐயா, விதுரரே வாழைப்பழத்தின் ருசியை நான் உட்கொண்டு விட்டேன். உம்முடைய மனோரதம் ஈடேறிப்போயிற்று. உமக்குச் சந்தேகமாயிருந்தால் கீழேவிழுந்திருக்கும் பழத்தைத் தின்றுபாரும்" என்றார். விதுரர் அவ்வாறே தின்றதில் அது ருசியற்றிருக்கக் கண்டு ஆச்சரியமடைந்தார்.

"ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியம்" என்றுசிலர்கூறுவதுண்டு. இதை ஸ்ரீ கிருஷ்ணபகவானே ஒருதாரணத்தால் விளக்கிக் காட்டியிருக்கிறார். ஒருசமயம் நாரதர்வீணையைமீட்டிக்கொண்டு கிர்ஷ்ணமூர்த்தியிடம் வந்தார். அப்போது பகவான் ஏதோ சில விக்கிரகங்களை வைத்துப் பூஜைசெய்துகொண் டிருந்ததைக்கண்டு ஆச்சரியமடைந்து சுவாமி, 'சுவாமி, பரப்பிரம்ம ஸ்வரூபியாகிய தாங்கள் யாரைப் பூஜை செய்கிறீர்கள்?' என, பகவான் 'நாரதரே உரக்கப் பேசாதேயும். சுவாமிகளெல்லாம் விழித்துக்கொள்வார்கள். நித்திரை பங்கமுண்டாகும்' என்றார். நாரதருக்கு ஆச்சரியமுண்டாயிற்று. பகவான் பூஜைசெய்வதென்றால் யாருக்குத்தான் ஆச்சரியமாயிராது நாரதர் மறுபடியுங் கண்ணனை நோக்கி "சுவாமி, அந்த விக்கிரங்களை நான பார்க்கலாகாதா?" வென்றார். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி 'சிறிதுநேரம் பொறுத்திரும். காண்பிக்கிறேன்' என்றுமெள்ள திரையை ஓர் புறமாய் நீக்கவே உள்ளே லக்ஷஞ் சூரியனைப்போலபிரகாசிக்குந் தங்க விக்கிரகங்கள் சில விருந்தன. அவைகளெல்லாம் பகவத் பக்தர்களின் ரூபங்களாக விருப்பதைக்கண்டு நாரதர் அதிசயித்தார். கடைசியாகத் தம்முடைய விக்கிரகத்தையுங் கண்டு பரமாச்சரியமடைந்தார். இதனால் பகவானுக்குப் பக்தர்களிடமுள்ள பிரீதி இன்னமாதிரி யென்று விளங்குகிறது. ஆதலின்தீனர்களாகிய நாம் ஸ்ரீ கிர்ஷ்ணமூர்த்தியின் பாதார விந்தங்களை ஸதா தியானித்து ஸர்வாபீஷ்டங்களையும் அடையக்கடவோம்,

---

"குயிலுங் காக்கையும்" என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறோம். குயில் வெகு இனிமையாகக் கூவுகிறதே அதுவே போதும. நாமேன் கத்தவேண்டுமென்று காக்கை சும்மா விருக்கிறதில்லை. அது கதறிக்கதறி கல்லடிபடுகிறது. அதுபோல்பெரியோர்கள் நிறைந்த ஸபையில் புத்திசாலிகள் செய்யும் பிரசங்கமேபோதுமென்று சும்மாவிராமல் அரைப்படிப்பாளிகள் தாங்களும் எழுந்து ஏதேனும் புலம்பத்தொடங்கி அவமானமடைகின்றனர். இத்தகையோரை சபைக்குள்வரக்கூடாதென்று தடுப்பதும்நியாயமல்ல. ஸாதுக்கள்யாரையுந்தொந்திரவு செய்யும் வழக்கமில்லையன்றோ.

"குணதோஷங்கள்" ஒவ்வொரு வஸ்துவிலுமுண்டு. பரமேசுவரன் குணமாகிய சந்திரனைத் தலையில் வைத்துக்கொண்டு தோஷமாகிய விஷத்தைக் கழுத்திலிருத்தினார். இதைப்போல் மனிதர்க

ளாகிய நாம் குணவான்களுக்கு உயர்ந்த ஆஸனங்கொடுத்து துஷ்டர்களை கீழே உட்காரச்செய்யவேண்டும். இவ்வாறின்றி துஷ்டர்களுக்கு அக்கிராஸனங்கொடுத்தால்பலவித துன்பங்களுண்டாகும். விவேகிகள் இத்வித்யாஸத்தை நன்றாகஅறிந்திருக்கின்றனர்.

"சுத்தமுஞ் சுகமுமொன்று." எவன் சுத்தனோ அவன் சுகத்தையடைகிறான். தேகசுத்த மில்லாவிட்டால் தேகசுகம் உண்டாகாது. விடியற்காலையில் அதாவது சூரியோதயமாகுமுன்னே ஸ்நானஞ்செய்யவேண்டுமென்ற விதி ஏற்பட்டிருக்கிறது இவ்விதி சுகத்தை யனுஸரித்ததென்பதை நிரூபிக்கிறோம். நாம் நித்திரைசெய்யும்போது உஷ்ணம் அதிகமாகி சரீரத்திலுள்ள மலங்கள் மயிர்க்கால் வழியாயிறங்குகின்றன. இவைகள் சூரிய கிரணம் பட்டால் உறைந்துபோம். ஆதலால் இம்மலங்களைக் கழிக்கவேண்டி விடிய 5-நாழிகைக்கே ஸ்நானஞ்செய்ய வேண்டுமென்ற விதியேற்பட்டிருக்கிறது. இதுதான் பகலில் தூங்கக்கூடாதென்பதற்குந் தகுந்த காரணம். இவ்விதியை அனுஸரியாமல் அந்தோ அனேகர் அசுத்தர்களா யிருக்கின்றனர்.

---

"சுருதி யுக்தி அனுபோகம்" என்ற மூன்றனுள் யுக்தியேசிறந்தது. முற்காலத்தில் பாடலிபுரமென்னும் நகரில் பத்மபாதனென்றொரு அரசனிருந்தான். அவனிடம் ஹாஸ்யாநந்தன் என்ற ஓர் விகடகவியிருந்தான். இந்த ஹாஸ்யாநந்தனுக்கு குடும்பக்கடனதிகமாயிருந்ததால் மகாராஜா 500-மோகராக்கள் கடனாகக்கொடுத்து உதவிசெய்தார். ஹாஸ்யாநந்தன் ஷை தொகையை மூன்று வருஷத்துக்குள் நூற்றுக்கு ஐந்துவீதம் வட்டிசேர்த்து அரசனிடஞ் செலுத்திவிடுவதா யொப்புக்கொண்டான்.

"பணம் என்றால் பிணமும் வாயைத்திறக்கும்" என்ற பழமொழியுண்டே. யாருக்குத்தான் பணத்தில் ஆசையில்லை? பத்மபாதனோ ஸதா பணப்பைத்தியம் பிடித்தவன். ஆகலின் மூன்று வருஷத்தவணை கழிந்தவுடன் விகடகவியைப் பணங்கேட்டான். அவனிடம் ஒரு பைசாகூடவில்லை. அரசன் கொடுத்த ஐந்நூறு மோகராக்களையுஞ் சாப்பிட்டு ஏப்பம் விட்டுவிட்டதால் தன்னிடம் பணமில்லையென்றுந் தனக்கு ஷை 500-மோகராவையும்இனாமாகக்கொடுத்ததாய் எண்ணிக்கொண்டு தன்னை மன்னிக்கவேண்டுமென்றும் பலமுறை கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். அரசன் அதற்கிணங்கவில்லை அடிக்கடி ஹாஸ்யாநந்தனைக்கடனுக்காக ஹிம்ஹித்து வந்தான். ஒருநாள்,

"யுக்தி மிஞ்சின சக்தியில்லை" யென்று ஹாஸ்யாநந்தன் ஏதேனும் யுக்திசெய்து அரசனை ஏமாற்றிவிட எண்ணினான். இரண்டு நாளைக்கெல்லாம் நெஞ்சடைத்துப் பிராணன்போய்விட்டதுபோல பசாங்கு செய்து பாடையில் வைத்துத் தன்னைத் தூக்கிப்போம்படி தன் சிநேகிதர்களை கேட்டுக்கொண்டான். அவர்கள் அவ்வாறே ஹாஸ்யாநந்தனைப் பாடையில் வைத்துத் தூக்கிப்போகையில்

அரசன் எதிர்ப்பட்டு "அடடா, ஹாஸ்யாநந்தன் இறந்துபோனானே? ஐயோ பாவம் நல்லமனுஷ்யன். எனக்கு 500-மோகராக்கள் அவன் கடன் கொடுக்கவேண்டும், பாதகமில்லை. அவன் கொடுக்க வேண்டியதில்லை. அவனை மன்னித்துப்போட்டேன்" என்றான். உடனே பாடையிலிருந்த ஹாஸ்யாநந்தன் திடீரென்றெழுந்து "மகாராஜாவே! தாங்களே தயாளு. என்கடனை மன்னித்து விட்டீர்கள். அதனால் நான் பிழைத்துக்கொண்டேன். தங்களுடைய தயவால் போனஉயிர் மறுபடியும் உடலில்வந்து புகுந்துகொண்டது" என்றான். அரசன் கொடுத்தவாக்கைத் தவறாதவனாதலின் ஹாஸ்யாநந்தனது கடனையும் மன்னித்து அவன் செய்த யுக்திக்காக அதிசயித்து இன்னும் இருநூறு மோகராக்கள் இனாமளித்தான்.

---

"உடன் பிறந்தே கொல்லும் வியாதி" என்ற வாக்கியத்துக் கிணங்க அயோக்கியர்கள் நமக்கு மிகுந்த விசுவாஸம்போலிருந்து நாளடைவில் பொருளைத்திருடிக்கொண்டு போகின்றனர். இதற்கொரு கதையுண்டு. கலி நாலாயிரத்துத் தொள்ளாயிரத்துஐந்தாம் வருஷத்தில் காசிப்பட்டணத்துக் கப்பால் கத்தர்புரியென்ற ஓர் சிறு நகரில் கங்காதரன்என்னுந்தனவானாகிய இடையனிருந்தான். இவனிடம் ஆயிரக்கணக்கான ஆடுமாடுகளுண்டு. இவைகட்குக் காவலாகத் தான் குட்டிப் பருவமுதல் பாலூட்டி வளர்த்த ஓர் நாயை ஏற்படுத்தினான். இவ்வாறிருக்கையில் எவ்விதமாகவோ அடிக்கடி மந்தையில் ஆடுகள் களவுபோயின. கங்காதரன் இந்தக் களவைக்கண்டுபிடிக்க வெண்ணி ஓர் நாளிரவு ஒளிந்துகொண்டிருக்கையில் அந்நாய் ஓர் ஆட்டைக்கொன்று தின்று ஆற்றிலிறங்கி மூஞ்சியிலுள்ள இரத்தத்தைக் கழுவிக்கொண்டு முன்னேஇருந்த விடத்துக்கு வந்துவிட்டது. எஜமான் அதன்செய்கையையறிந்து மறுநாளே அதையடித்து விரட்டிவிட்டான்.

---

## மீன்கள்.

முதல்மீன்.—நண்பா, நீ ஏன் என்னுடன் விளையாடவருகிறதில்லை. உன் தாயார் உன்னைப்போக வேண்டாமென்று சொல்லுகிறாளோ?

இரண்டாவதுமீன்.—சிநேகா! என் தாயார்பேரில் பழிபோடாதே. வெளியேவருவதாலுண்டாகும்விபத்துகளை நீ அறியயோ?

முதல்மீன்.— நான் அறியேன். நாம் யாருக்குந் தெரியாமல் தண்ணீர்க்குள்ளிருக்கிறோம். சண்டைபோடுஞ்சுபாவம் நமக்கில்லை. விபத்துகளெப்படி நேரிடும்?

இரண்டாவதுமீன்.—சத்துருக்களுண்டாவதற்கும் விபத்துகள்நேரிடுவதற்கும் நம்முடையபிரயத்தினம்வேண்டுமென்பதில்லை.

முதல்மீன்.—நாம் கெடுதல் செய்யாதிருக்கப் பிறர் நமக்குக் கெடுதல்செய்ய இசைவாரா என்பது ஸந்தேகம். அப்படிப்பட்ட பரம துஷ்டர்களும் உலகிலுண்டா?

இரண்டாவதுமீன்—ஆம் இருக்கின்றனர். பூமியிலும், ஆகாசத்திலும் நமக்கு அனேக சத்துருக்களிருக்கின்றனர். அவர்கள் தங்கள் வயிற்றை நிரப்புவதற்காக நம்மைப்பிடித்துக்கொல்லுகின்றனர். மனிதர்களுடைய வயிறுதான் நமக்குசுடுகாடு அவர்களது குக்ஷியில் நாம் பட்சணமாய்ப் போகின்றோம். பாபிகளாகிய அம்மனிதர்கள் நம்மைப்பிடிக்க பலதந்திரங்கள் செய்கின்றனர்.

முதல்மீன்.—நண்பா, அவர்கள் செய்யுந் தந்திரங்களென்ன? ஆகாசத்திலுள்ள சத்துருக்கள் யார்?

இரண்டாவதுமீன்.—சினேகா? மனிதர்கள் ஓர் தூண்டிலில் உணவை வைத்து அதை ஜலத்திலெறிந்து கண்குத்திப் பாம்பு போல் நமக்காக காத்துக்கொண் டிருக்கின்றனர், நாம் அவ்வஞ்சனையை யறியாமல் அவ்வுணவைத்தின்னவந்து அகப்பட்டுக்கொள்ளுகிறோம். தூண்டில்அசைகிறது. தக்ஷணமேஅதைத்தூக்கிநம்மையெடுத்துப்பறியில் போட்டுக்கொள்ளுகிறார்கள். இதுஒருதந்திரம்.

ஜலத்திலிறங்கி வலையை வீசிப் பிடிக்கின்றனர். இதுஒரு தந்திரம். நம்மெல்லோரையும் ஒரே தடவையிற்பிடிக்கவெண்ணி தட்டிவலையை ஆற்றின் குறுக்கேவைத்து இருபக்கத்தினின்று நெருக்கி வருகிறது. இது ஒருவித தந்திரம். இவ்வாறு அநேக தந்திரங்களிருக்கின்றன. ஆகாசத்தில் பறவைகள் நமக்கு சத்துருக்கள். மீன்குத்திப்பறவை ஜலத்துக்கு நேரே அந்தரத்தில்பறந்து நமது வருகையை எதிர்பார்த்துக்கொண்டேயிருந்து நாம் வந்தவுடன் சடாலென்று கீழேயிறங்கி ஜலத்தில் மூழ்கித்தன் கூரிய மூக்கினாற் பிடித்துக்கொண்டு போகிறது. இந்தப் பறவையின் கண்ணுக்கு வெகுதூரத்திலிருக்கும் நம்மைப் பார்க்கும்படியான சக்தியைப் பகவான் கொடுத்திருக்கிறார். மேற்கூறிய துராத்மாக்கள் நிரபராதிகளாகிய நம்மை ஹிம்ஸிக்கின்றனர்.

முதல்மீன்.—நல்லது! இப்போதறிந்தேன், நமது சத்துருக்களை. பறவையாவது பகுத்தறிவற்றது. பகுத்தறிவுற்ற மனுஷ்யன் நம்மை ஹிம்ஸிப்பது புத்திஹீனமன்றோ?

இரண்டாவதுமீன்.—அந்த வெட்கக்கேட்டை நான் என்னவென்று சொல்வேன். அம்மனிதன் தன்னை மகா விவேகியென்று சொல்லிக்கொள்ளுகிறான். அவனிடமுள்ள அயோக்யதைக்குஅளவில்லை. பூமியில் வாழும் ஆடுமாடுகள், உடும்பு, பன்றிகோழி, வாத்து, முயல் முதலிய மிருகங்களைப் பக்ஷித்து அவைகள் போதாமல் ஆகாசத்தில் பறக்கும் பக்ஷிகளைக் கவண்கல்லாலெறிந்து துப்பாக்கியாற்சுட்டுக் கொன்றுதின்று அவைகளும் போதாமல் ஜலத்திலுள்ள மீன், ஆமை, நண்டு முதலியவற்றைக் கையாலும் வலைபோட்டும் பிடித்துதின்று வயிற்றை நிரப்புகிறான். ஐயோ! மனிதன் என்னும் பரமதுஷ்டப் பிராணிக்குப் பயந்து நாம்எங்கே போ

னாலும் அவன் நம்மை விடுகிறதில்லை. நாட்டைவிட்டுக் காட்டிலோடினால் அங்கே கொம்பு தப்பட்டையுடன் வேட்டையாட வருகிறான். ஆதலின் அவர்கள் கண்ணிற்படும்படி வெளியேபோகாதே யென்று என் தாய் எனக்கு உத்தரவு செய்திருக்கிறாள்.

முதல் மீன்:—அப்பப்பா! மனிதர்களின் நடத்தையை நீசொல்லச் சொல்ல எனக்கு பயங்கரமாயிருக்கிறது. அத்தனை துஷ்டர்களா அவர்கள்.

இரண்டாவது மீன்:—அதிலும் ஸந்தேகமா? நமக்கு மட்டுமே மனுஷ்யர்கள் சத்துருக்களென்றெண்ணவேண்டாம். அவர்கள் ஒருவரை யொருவர் விரோதித்துச் செய்யும் மோசம்அநந்தம்.

முதல் மீன்:—நண்பா! மனிதர்கள் செய்யும் மோசத்திற் சிலவற்றைச் சொல்லவேண்டும்.

இரண்டாவது மீன்:—தாய் தந்தை குரு தெய்வம் ராஜன் ஆகிய ஐவரிடமும் வேண்டிய நன்மைகளைப்பெற்று பின்அவர்களுக்குத் துரோகிகளாகும் மனிதர்களைப்பற்றி நானென்னவென்று சொல்வேன். இந்தத்துரோகிகட்குக் கூறியிருக்கும் நரகமோகொடியது. ஆயினும் மனிதர்கள் தற்காலவரும்படியை உத்தேசித்துத் தங்கள் எஜமானுக்கு துரோகஞ் செய்கின்றனர். எந்த வேளையில் எவன் மோசம் போவானென்று சமயம் பார்த்துக்கொண்டிருப்பவர் சிலர். கபந்தனைப்போல் இரண்டுகையாலும் ஊரிலுள்ள சகல வியாபாரங்களையுந் தாமே நடத்தவெண்ணி எல்லோருக்குந் தீங்கு விளைப்பவர் சிலர். காரியமாகும் வரை கழுதையின் காலைப்பிடியென்னும் பழமொழிப்படி தங்கள் கௌரவத்தை யிழந்து அற்பர்கள் வீட்டுக்குச்சென்று காரிய ஸாதகஞ் செய்வோர் சிலர். இவ்வாறாக துஷ்டர் நிறைந்திருப்பதாற்றான் பெரியோர் நகரங்களை விட்டு ஏகாந்தமான விடங்களுக்குச் செல்லுகின்றனர். துறவிகள் மடங்களில் வஸிக்கின்றனர். தேவர்கள்இம்மனிதர்களுக்குப் பயந்து கண்மறைவாக தேவலோகத்தில் வஸிக்கின்றனர். ஸித்தர்கள் யாருக்கும் தெரியாமல் சூக்ஷ்மசரீரிகளாய் ஆகாயத்திற் சஞ்சரிக்கின்றனர். தெய்வங்களெல்லாங் கோயிலிலொளிந்து காலந்தள்ளுகின்றன. மகா விஷ்ணு தாம்சாம்பிடும்போது திரையைப்போட்டுக் கொள்ளுகிறார் ஏன் தெரியுமா? ஒரு வேளை மனிதன் தன் சாப்பாட்டைப் பிடுங்கி தன்வாயில் கொட்டிக்கொள்ளுவானோ வென்னும் ஸந்தேகந் திருமாலுக்குண்டு. பரமசிவன தனக்கு நிவேதனஞ்செய்த ஆகாரத்தைப் பிறர் உட்கொள்ளக் கூடாதென்று பயமுறுத்தியிருக்கிறார். இவ்வாறு துஷ்டர்களைக்கண்டு தேவர்களும் ஹரிஹரர்களும் பயந்து தூர விலகுகிறார்களெனில் அற்பஜெந்துவாகிய நாம் விலகியிருப்பது அவசிய மல்லவா?

இதன்பின்னர் இரண்டுமீன்களுந் தங்களிருப்பிடஞ் சென்றன.

ஆச்சரியம்:—உலகத்தில் 2-ஆச்சரியங்களுண்டு. எல்லா ஜீவராசிகளும் இறப்பதைக்கண்டும் நாம் இறக்கப்போகிறதில்லையென்று நினைத்து அனேக கோடி வருஷங்கள் ஜீவிக்கப்போகிறதுபோல் விவகாரங்களைச்செய்தல் ஒன்று. உலகத்தில் "எனக்கு" இந்த சாஸ்திரந்தெரியும், அந்த சாஸ்திரம் வாய்ப்பாடம், அனேகமாய் எல்லா விஷயங்களையுந் தெரிந்துகொண்டேன் என்று சொல்பவர்களை "எல்லாமறிந்தீர்களே, உங்களை யறிந்தீர்களா நீங்கள்யார்?" என்று கேட்டால் பதில் ஒன்றுஞ் சொல்லாது மௌனம் சாதிப்பனி இரண்டாவது ஆச்சரியம்.

"ஸர்வம் பிரம்மமயம் ஜெகத்" என்றபடி ஞானிகளுக்கு ஜெகத்திலுள்ள சகலவஸ்துக்களும்பிரம்மமாகத் தோன்றுகின்றன. அஞ்ஞானிகளுக்கோ அப்படியல்ல, அவர்கள் பார்க்கும் பொருள்களெல்லாம் வெவ்வேறாகக் காணப்படுகின்றன. இதற்குக் காரணமென்ன? தத்துவ ஆராய்ச்சி செய்தோர் நாம ரூபங்களைக் கண்டு மயங்கார். அதில்லார்க்கு இரண்டென்னுந் தோற்றம் எப்போதும் உண்டாகிறது. உதாரணமாக, கடல் வேறு அலைவேறு என்று ஸாமான்யர்கள் நினைக்கின்றனர். நுண்ணறிவுடையோர் கடலும் அலையும் ஒன்று. காற்றின் காரியத்தால் அலையென்னுந் தோற்றமுண்டாகிறது, காற்றடங்கினால் அலையடங்குகிறது, ஆதலின் உண்மையாகவே கடல்வேறு அலைவேறல்ல. இரண்டும் ஒன்றுதானெனத் தெளிகின்றனர். இவ்வித சிறந்த அறிவை நமக்கு ஈந்தருளுமாறு நாம் பகவானைப் பிரார்த்திக்கக் கடவோம்

"ஜெகமுள்ளோர்க்கு நிஜமில்லை" உலகவின்பத்தை உண்மையென்று நினைத்து அதில் அழுந்திக் கிடப்போர்க்கு நிஜப்பொருளாகிய பிரம்மம் தோன்றாது. உலக வாசைகளை விட்டொழித்தோரே அப்பொருளை யறிய வல்லவர். இதனால் ஒவ்வொருவருந் தத்தம் மனைவி மக்கள் முதலிய பந்துக்களையும் வீடு பண்டம் முதலிய பொருள்களையும் விட்டொழித்து காட்டுக்குச்சென்று கஷ்டப்படவேண்டுமென்பது கருத்தன்று. ஸம்ஸாரியாயினும் எவனுடைய மனம் உலக வின்பத்தில் நாடவில்லையோ அவனேஞானி. அவனே மோக்ஷமடைய யோக்யன், அப்படிப் பட்டவனைத்தான் மகான் என்கிறோம்.

ஜனகமகாராஜன் மிதிலாபுரியை யாண்டும், ஸகலசுகங்களாற் சூழப்பட்டும், பற்பல விஷயங்களை கவனிக்கிறவராய்த் தோன்றியுந் திவ்விய ஞானியாக விளங்கினார். இதற்குக்காரணம் யாது? அவர் அத்தனைசுகங்களையும் அற்பமென்றெண்ணி எப்போதுந்தம்முடையமனதைப் பிரம்மத்தினிடம் நாட்டியதே. ஜனகனுக்கு எந்தப் பொருளும் பிரமமாகவே தோன்றியது. இவரைப்பற்றியசிலகதைகளை இங்கு சொல்லுகிறோம். ஓர் சமயம் பிரம்ம ஞானியாகிய சுகருக்குச் சிலஸந்தேகங்கள் உண்டாகி அவைகட்கு ஸமாதானஞ் சொல்லும்படி தம் தந்தையைக் கேட்டார். அவர் சுகரைஜனகனிடம் அனுப்பினார். சுகர் மிதிலைக்குச்சென்று கோட்டைவாசலில்

நின்று தாம் வந்திருக்கும் ஸங்கதியை அரசனுக்கு அறிவிக்கும்படி சொன்னார். வாசற்காப்போன் அவ்வாறே சென்று தெரிவிக்க ஜனகமகாராஜன் தாம்வருவதாயும் அதுவரை கோட்டைவாசலிலேயே சுகரைக்காத்திருக்கும்படியுஞ்சொல்லியனுப்பினார். அவ்வாறே சுகர் 7 நாள் காத்திருந்தும் ஜனகன் வரவில்லை. சுகரும் நின்றநிலையைவிட்டசையவில்லை. எட்டாவது நாள் ஜனகன் திவ்யமான ஓர் பல்லக்கை யலங்கரித்து சகல மேள வாத்தியங்களுடன் வெகுமரியாதையாய்ச் சுகரை அழைத்துவரச்செய்து அவர் வந்தவுடன்நீர் பிரம்மஞானி உமதுஸந்தேகங்களை ஒரு நொடியிற் போக்குகிறேனென்று தத்வோபதேசஞ் செய்தார். ஜனகன் இவ்வாறு 7-நாள் தாமதித்ததற்கும், 8-ம் நாள் மரியாதைசெய்து அழைத்து வந்து ஸந்தேக நிவர்த்தி செய்ததற்குங் காரணமென்ன?

"காரணமில்லாமற் காரியமுண்டாமோ" ஜனகன் சுகருடைய மனோநிலையை யறியவேண்டி மேற்கூறிய பரீக்ஷையைச்செய்தான். 7-நாள் காத்திருக்கச் சொன்னபோது சுகர் என்ன சொன்னாரென்றும் பிரதி நிமிஷமும் அவருடைய முகம் எப்படி யிருந்ததென்றும் சேவகர்கள் மூலமாய்த் தெரிந்துகொண்டான். பிறகு பல்லக்கில் சுகரையேற்றி மேளதாளங்களுடன் அழைத்து வந்தபோதும் அவருடைய முகக்குறியையுணர்ந்தான், சுகருடைய முகம் மாறாமல் ஒரே தன்மையாயிருந்தது. காத்திருந்தபோதும் பல்லக்கில் வந்தபோதும், மரியாதை செய்யாதபோதும் மரியாதைசெய்தபோதும் அவருடைய மனம் சற்றேனுஞ் சலிக்கவில்லை. உலகப் பொருள்களில் சுகருக்குக் கிஞ்சித்தேனும் விருப்பு வெறுப்பில்லை. ஆதலின் அவர் தத்வத்தையறிய யோக்கியரென்றுஞ் சிறந்த ஞானியென்றும் ஜனகன் தெரிந்து கொண்டான். இதனால் வேதாந்தியானவன் இலாபங்கிடைத்தபோது ஸந்தோஷப் படுவதையும் நஷ்டம் உண்டானபோது துக்கப்படுவதையும் தவிர்த்து சகல பொருள்களிடத்தும் வெறுப்பு விருப்பு ஆகிய இரண்டுங் கொள்ளாமல் பொறுமையென்னுஞ் சிறந்த பூஷணத்தைப் பூண்டு மனதை உண்மைப் பொருளிலேயே நாட்டவேண்டுமென்றறிகிறோம்.

"ஆச்சரிய முண்டானால் அறிவுண்டாகும்" எவன் ஓர் பொருளைக் கண்டவுடன் ஆச்சரியப் படுகிறானோ அவன் அப்பொருளின் காரணத்தை யறிய விரும்புகிறான். விருப்ப முண்டானவுடன் முயற்சியு முண்டாகிறது. ஜனகனைப் பிரம்ம ஞானியென்று எல்லோருஞ் சொல்லுகிறார்களே, அதற்கென்ன காரணம்? ஜனகன் அரசனாயிருந்தும் அவன் ஞானி யென்னும் பெயரை எப்படி அடைந்தான்? அதையறியவேணுமென்று ஓர் அந்தணன் ஆவல்கொண்டு மிதிலா நகரத்துக்குப்போய் ஜனகராஜனை நோக்கி, "ராஜாவே, தாங்கள் ஓர் பெரிய ராஜ்யத்தை யாளுகிறீர்கள்' தங்களுக்குள்ள கவலையாருக்குமில்லை. அஷ்டபோகங்களும் ஸகல சுகங்களுந் தங்களைசூழ்ந்திருக்கின்றன. இப்படியெல்லா மிருந்துந் தங்களை ஞானியெ

ன்று உலகத்தார்கூறுகின்றனர். தாங்கள் எப்படி ஞானியாயிருக்கக்கூடும்? அதைத் தெரிவிக்கவேணும்" என்றான். ஜனகன் அவ்வந்தணனை நோக்கி "நல்லது! உமது ஸந்தேகத்தை இன்று சாயங்கிரத்துக்குள் நிவர்த்தி செய்கிறேன். நான் சொல்லுகிறபடி நீர் செய்யவேண்டும்" என்று சேவகர்களையழைத்து, "நீங்கள் இந்தப் பிராமணன் தலையை மொட்டையாக்கி ஓர் குடத்தில் ஜலத்தை நிரப்பி அவன் தலையில் எடுப்பித்து இந்நகரத்திலுள்ள தெருக்களையெல்லாஞ் சுற்றிவரவேண்டும். ஒவ்வொரு வீதியிலும் அணியணியாக அழகிய மாதர்களை நிறுத்தி ஆடிப்பாடி பிராமணனை மயக்கும்படி செய்யுங்கள் இதன்றி பற்பல வேடிக்கைகளும் விநோதங்களும் இந்நகரில் இன்றையதினம் நடக்கட்டும். பிராமணனது பஞ்சேந்திரியங்களையும் மனதையுங் கவரத்தக்க அற்புதமான காரியங்களைச்செய்யுங்கள்" என்று கட்டளையிட்டுப் பிராமணனை அழைத்து "ஐயா, உம்முடைய தலையில் சேவகர்கள் இந்தக் குடத்தை வைப்பார்கள். நீர் அதைத் தலையில் வைத்துக்கொண்டு ஒரு துளிகூட நிலத்தில் விழாமல் இந்நகரிலுள்ள தெருக்களையெல்லாம் சுற்றி வரவேண்டும். அவ்வாறு வருவதில் ஒருதுளி நிலத்தில் விழுந்தால் அந்தக்ஷணமே உமது தலையறுபட்டுப்போம்" என்றார். பிராமணன் அதற்கிசைந்து குடத்தை யெடுத்துத் தலையில் வைத்துக்கொண்டான். அவனைச்சுற்றி நான்கு போர்வீரர்கள் உருவினகத்தியுடன் நின்று "ஐயா, பிராமணரே, மகாராஜாவின் ஆக்ஞையை உம்மிடந் தெரிவிக்கிறோம். நீர் இந்த குடத்தின் ஜலத்தில் ஓர் துளி சிந்தினால் உடனே உமது தலையை இக்கத்திகளால் வெட்டித்தள்ளுவோம்" என்றார்கள். பிராமணன் பயந்து அவ்வாறே ஓர் துளிகூட கீழே விழாமல் பட்டணமெல்லாஞ் சுற்றி அந்திவேளையில் அரண்மனைக்கு வந்தான். உடனே ஜனகராஜன் அவரை யுபசரித்து 'சுவாமீ, பட்டணத்தில் என்ன விசேஷம் பார்த்தீர்கள்?' என்றான். பிராமணன் 'நான் ஒன்றையும் பார்க்கவில்லை' யென, அரசன் "என்ன ஐயா, அப்படிசொல்லுகிறீர்கள். எத்தனையோபாடகர்கள் பாட்டுகள் பாடவில்லையா? அழகிய மாதர் அணியணியாக நின்று ஆடவில்லையா? வேடிக்கை விநோதங்கள் நடக்க வில்லையா?" வென்றான். விப்பிரன் 'ஹே ராஜனே! நான் அவைகளைப் பார்க்கவில்லை. என் தலையிலுள்ள குடத்திலேயே என் மனதை வைத்தேன். வேறொன்றிலும் என்மனம் நாடவில்லை' யென்றான். ஜனகர் அவரைநோக்கி "சுவாமீ, இப்போது அறிந்துகொண்டீர்களா காரணத்தை? தங்களுடையமனங் குடத்தில மட்டும் எப்படி நிலைத்திருந்ததோ அப்படியே என்மனம் பிரம்மத்திலேயே நிலைத்திருக்கிறது. பெரிதாகிய இந்நகரின் தெருக்களெல்லாவற்றிலும் நடந்த கூத்துகளும் வேடிக்கைகளும், கண்ணைக் கவரத்தக்க பொருள்களும் உம்முடைய மனதை யெப்படி யிழுக்கவில்லையோ, அப்படியேஇராஜாங்க விஷயமான கவலைகளுஞ் சிற்றின்பங்களும் என் மனதை யிழுக்கவில்லை. இதுதான் நான் அரசனாயிருந்தும் ஞானியென்றழைக்கப்

படுவதற்குக் காரணம்' என்றார். ஆதலின் ஒவ்வொருவரும் தத்தம் மனதைச் சிற்றின்பத்தில் விடாது பகவானிடஞ் செலுத்திப் பிரார்த்தித்தால் ஞானத்தை யடையத் தடையில்லை. நாட்டிலிருந்தாலுங் காட்டிலிருந்தாலும் மனதை தன்வசப் படுத்தினாலன்றி ஞானமுண்டாகா தென்றறிகிறோம்.

"பொறுத்தவர் நாடாள்வார் பொங்கினவர் காடாள்வார்" என்பது பெரியோர் வாக்கியம். இதற்குத் திருஷ்டாந்தமாக பாரதக் கதைகளைச் சொல்லுவர். அவைகளெல்லாம் மிக்க நீளமாயிருப்பதால் சிறிதாகிய ஓர் கதை சொல்லுகிறோம். இரண்டு சேவல்கள் ஓர் நிலத்தைச் சொந்தம் பாராட்டி ஒன்றோடொன்று சண்டைப் போட்டன. (குடியானவன் தன்னுடைய நிலமென்று சொல்லிக் கொள்ளுகிறசங்கதி ஒருபக்கமிருக்கட்டும்.) கடைசியாக ஒருசேவல் மற்றொன்றை யடித்துவிரட்டியது. தோற்றுப்போனசேவல ஓர் சுவரின் பொந்திலொளிந்துகொண்டு பொறுமையுடனிருந்தது. சண்டைபோட்டு ஜெயித்த சேவல் உயர்ந்த சுவரின்மேல் பறந்துட்கார்ந்து தனது இறக்கைகளைப் படபடவென்றடித்தது. அத்துடனிராமல் தான் ஜெயித்த விஷயத்தைப் பற்றி அடங்காச் சந்தோஷங் கொண்டு கொக்கரகோவென்று அடிக்கடி கூவியது. அந்த சமயம் ஆகாசத்தில் பறந்துகொண்டிருந்த கழுகு நடாலென்று கோழியின்மேற் பாய்ந்து அதை யடித்துக்கொண்டு போயிற்று. தோல்வியடைந்து பொந்தி லொளிந்துகொண்டிருந்த சேவல் நிர்ப்பயமாய் வெளியே வந்து நிலத்தை யனுபவித்தது. இந்தக் கதையால் எளியாரை வலியார் அடித்தால் வலியாரை தெய்வமடிக்குமென்றும் பொறுத்தவர் பூமியாள்வாரென்றும் அறிகிறோம். இத்துடன் கர்வப்படுகிறவர்கள் கட்டாயமாய் அழிந்துபோவரென்பதும் பெறப்பட்டது.

---

"சிவகைங்கரியமே சிறந்த கைங்கரியம்" சிவாலயங் கட்டி குளங்கள் வெட்டி சிவலிங்க ஸ்தாபனம் செய்து சிவபக்தியைச் செய்வோர் இகலோகத்தில் நல்லஸம்பத்தும் லக்ஷணமான பத்தினியும் ஸுபுத்திரர்களையும் அடைந்து ஞானசிகாமணிகளாய் முடிவில் முக்தியை எய்துவர். சிவத்தியானத்தையே செய்துகொண்டிருக்கும் உத்தமர்களுக்கு சர்வாபீஷ்டங்களும் நிறைவேறும். ஆதலின் நாம் எப்போதும் சிவ, சிவ என்று தியானஞ்செய்து சிவநேசச் செல்வர்களுடன் சேர்ந்து ஹிருதய சுத்தர்களாய் ஞானஸம்பத்தை யடையக்கடவோம்.

"அபிமானமே பிரதானம்." இவ்வுலகத்தில் பிரதிதினமும் நாம் அனுபவிக்கும் சுகதுக்கங்களுக்கு அபிமானமே காரணமாகிறது. அபிமானத்தை யொழித்தால் ஸர்வ துக்கங்களும் நாசமாகும். அவ்வாறு ஒழிப்பது ஸாத்தியமோவெனில், ஸாத்தியமென்றே சொல்லலாம்.

---

# இராஜயோகம்.

இராஜயோகமானது எட்டுப்படிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. (1) இயமம்; அதாவது கொல்லாமை, பொய்யாமை, திருடாமை, தானம்வாங்காமை, முதலியன (2) நியமயம்; அதாவது சுத்தம், திருப்தி, பொறுமை, ஈசுவராற்பணஞ்செய்தல், படிப்பு முதலியன (3) ஆஸனம்; உட்காரும் தன்மை, (4) பிராணயாமம்; பிராணனை வசப்படுத்தல், (5) பிரத்தியாஹாரம்; மனதை உள்ளிந்திரியங்களிற் பிரவேசிப்பித்தல், (6) தாரணம்; மனதை ஒரேவிடத்தில் நிறுத்தல், (7) தியானம்; மனம் நின்ற ஒரேவிடத்தை நினைத்துக்கொண்டிருப்பது, (8) ஸமாதி; அறிவுக்கெட்டாத நிலைமையிலிருத்தல். இயமும் நியமும் நன்னடக்கையைப் பற்றியனவாதலின் அவ்விரண்டுமில்லாதவனுக்கு எவ்விதமான யோகஸித்தியுமுண்டாகாது. யோகியானவன் பிறரை ஹிம்ஸிக்கவெண்ணலாகாது. எந்தப் பிராணியிடமும் இரக்கம் பாராட்டவேண்டும்.

இதற்கடுத்தபடி ஆஸனம். அதாவது உட்காருந்தன்மை. பிரதிதினமுஞ் சரீரத்துக்கும மனதுக்கும் பலவித பயிற்சிகளிருக்கவேண்டும. ஒருவிதமான உயர்ந்தநிலைமையை யடையும்வரை மேற்கூறிய பயிற்சிகளைச்செய்வது அவசியம். ஆதலின் அவ்வித பயிற்சிகளைச் செய்வதற்கு அநுகூலமான நிலைமையை நாம் கண்டுபிடிப்பது முக்கியம். எவனுக்கு எந்த ஆஸனம் இலகுவாயிருக்கிறதோ அந்த ஆஸனமே உபயோகிக்கத்தக்கது ஒருவனுடைய நிலை மற்றொருவனுக்கு சரிப்படாது. உதாரணமாக சிலர் நின்றுகொண்டே பாடம்படிக்கின்றனர். சிலர் நடந்துகொண்டே படிக்கின்றனர். சிலர் உட்கார்ந்துகொண்டே படிக்கின்றனர் பற்பல ஆஸனங்களால் பற்பல நரம்புக்கருவிகளுக்கு வலிவுண்டாகும். நரம்பின் ஓட்டத்தை வேறுபடுத்துவதற்காக வித்தியாசமான ஆசனங்களேற்பட்டிருக்கின்றன. புதியஅசைவுகளுண்டாகி தேகத்தின் தன்மை மாறிவிடும். யோகததில் செய்யவேண்டிய முக்கிய காரியங்களுக்கெல்லாம் முதுகெலும்பு சாதகமாயிருப்பதால் அதைத் தாராளமாயிருக்கும்படி நிமிர்ந்து உட்காருவது நன்மை. நமது மார்பு, கழுத்து, தலை முதலிய மூன்றும் ஓர் நேர்கோட்டிலிருப்பதுபோல் தோன்றவேண்டும். சரீரத்தின் முழுப்பளுவையும் விலாவெலும்புகள் தாங்கட்டும். அப்போதுதான சுகமான ஆசனமேற்படும். முதுகெலும்பு நாடிகள் தாராளமாக வேலைசெய்யும். மார்பைப் பின்னால் தள்ளிக்கொண்டு உட்காருகிறவன் ஓர் பெரிய காரியத்தைப் பற்றி யோசிக்கமுடியாது. ஆசனமானது முக்கியமாய் ஹடயோகிகட்கு உரித்தானது மிகுந்த கஷ்டப்பட்டு இதைசாதகஞ் செய்யவேண்டும். இதனால் சரீரம் நல்ல வலுவையடைகிறது. சரீரத்திலு

ள்ள எந்தபாகத்தை எப்படி வளைக்கவேண்டுமானாலும் ஹடயோகிகளாற் கூடும். சரீரம் அக்தனை சுவாதீனப்படுகிறது. இது மோக்ஷார்த்தமன்று. ஆதலின் ராஜயோகிகட்கு ஆசனமானது அத்தனை அவசியமில்லை. யோகியானவன் தன் ஹிருதயத்தை அடிக்கவொட்டாமல் நிறுத்தலாம். இந்த மாதிரி சக்தியால் வெகுநாள் உயிரோடிருக்கலாம். ஹடயோகிகள் கருத்து தேகசௌக்கியமே ஹடயோகிக்கு நோயுண்டாகாது. 150-வயதானாலும் நரை திரை மூப்பு முதலியன உண்டாகா. இவ்வளவுதான் ஹடயோகத்தாலுண்டாகும் பிரயோஜனம். ஓர் ஆலமரம் 5000-வருஷமிருக்கிறது. ஆகிலும் என்ன? அது ஆலமரந்தானே. அதுபோல் மனிதன் வெகுகாலம் உயிருடனிருந்தாலும் அவன் மனிதனே. அதனால் மோக்ஷமுண்டாய்விடாது.

மேற்கூறியவிதமான ஆசனக்கிரமங்களை யறிந்துகொண்டு யோகியானவன் நாடிகளைச் சுத்தஞ்செய்யவேண்டும். இந்த பாகத்தை சிலர் அநாவசியமென்று தள்ளிவிட்டார்கள். ஆகிலும் மகான் சங்கராசாரியசுவாமிகளே இது அவசியமென்று சொல்லியிருப்பதால் இதை அனுசரிப்பது நன்று. வலது மூக்கு துவாரத்தைப் பெருவிரலால் அழுத்திக்கொண்டு இடது மூக்குதுவாரத்தின் மூலமாய் காற்றை யிழுக்கவேண்டும் பிறகு தக்ஷணமே இடது மூக்கு துவாரத்தை யழுத்தி வலது மூக்கு துவாரத்தின் வழியாய் அக்காற்றை வெளியே தள்ளவேண்டும். மறுபடியும் வலது துவாரத்தின் வழியாய் மூச்சையிழுத்து இடது துவாரத்தின்வழியாய் வெளியே விடவேண்டும். இம்மாதிரி அவரவர் சக்திக்குத் தக்கபடி ஒவ்வொருநாளும் காலை, பகல், அந்தி, அர்த்தராத்திரி முதலியகாலங்களில் மூன்று நான்கு அல்லது ஐந்து சந்தர்ப்பங்களில் அப்பியாசம் செய்தால் ஒருபக்ஷம் அல்லது ஒரு மாதத்தில் நாடி நரம்புகள் சுத்தப்படும். அதன் பிறகு பிராணாயாமம் ஆரம்பமாகிறது.

அப்பியாசம் அதி அவசியம். ஒவ்வொரு நாளும் நான் சொல்வதை நீ கேட்டுக்கொண்டிருக்கலாம். அப்பியாஸம் செய்யாவிட்டால் சிறிதேனும் பிரயோஜனமுண்டாகாது. எல்லாம் அப்பியாஸிப்பதிலிருக்கிறது. யோகவிஷயங்கள் அனுபோகமில்லாதவர்களுக்குப் புலப்படா. ஒவ்வொன்றையும் நாம் அனுபவித்து அதன் உண்மையை அறியவேண்டும். சர்க்கரையை சாப்பிட்டவனே அதன் ருசியை உணரக்கூடும். யோகம் செய்வதற்குப் பலவிததடைகளுண்டு. (1) சரீர அஸௌக்கியம். சரீர நோயுற்றால் யோகம் செய்யமுடியாது. ஆதலின் நாம் சரீரத்தை ஸௌக்கியமான நிலைமையில் வைத்துக்கொள்ளவேண்டும். தினந்தோறும் உண்ணுகிற ஆகாரத்திலும் உட்கொள்ளுகிற தண்ணீரிலும் கவனம் வைக்கவேண்டும். அஜீர்ணத்தையும் மயக்கத்தையுந் தரக்கூடிய ஆகாரங்களை யுட்கொள்ளலாகாது. தேக ஆரோக்கியமானது யோகத்துக்கு ஆதாரமே யன்றி அதுவே யோகத்தின் கருத்தென்றெண்ணலாகாது. அப்படியானால் மிருகங்கள் நம்மைவிட சிறந்தவைகளாகுமே. மிரு

கங்களுக்கு மனிதர்களைவிட அதிகமான சரீர ராரோக்கியமுண்டு. யோகத்துக்கு 2-வது தடை ஸந்தேகம். நாம் பார்க்காத வஸ்து வைப்பற்றி நாம் ஸந்தேகிப்பதுண்டு. மனுஷ்யன் வார்த்தையை மட்டும் நம்பியிருக்கமுடியாது. பரிசீலனைசெய்து அனுபவிக்கவேண்டும். ஆகலின் யோகசாஸ்திரங்களிற் சொல்லியிருப்பவை உண்மையாவென்னும் ஸந்தேகம் நமக்கு உண்டாகிறது. மகாபுத்திசாலிகள் கூட இந்த ஸந்தேகத்தைக்கொள்வது ஸகஜமே. ஆதலின் சிலநாள் யோகாப்பியாஸம் செய்தால் சிற்சில உண்மைகளை யறிந்துகொள்ளலாம். அவற்ருல் ஸந்தேகம் ஒழிந்துபோம். ஒரு விஷயத்தை யனுபவித்து உண்மையை யறிந்தால் மற்ற விஷயங்களிலுண்டான ஸந்தேகம் நீங்கிவிடுமென்று ஓர் யோகி கூறுகிருர். யோகாப்பியாஸம் செய்யத்தொடங்கிய சில மாதங்களுக்குள் பிறர் கருத்தை நாம் அறியக்கூடும். எதிரேயிருப்பவர்களின் எண்ணம் நமக்குத் தெளிவாய்த் தெரியும். வெகுதூரத்தில் நடக்கும் ஓர் ஸமாசாரம் உனக்குத்தெரியும், உன்னுடைய மனதை அதில்நிறுத்திருல் அந்த சமாசாரத்தைப்பற்றி பிறக்கும் தொனிகளெல்லாம் உன்செவியிற்படும். ஆரம்பத்தில் கொஞ்சம் தெரியும். உதாரணமாக உன்னுடைய நாஸிகையின் நுனியிலேயே உன் எண்ணங்களையெல்லாம் பொருத்திருல் சில நாளைக்குள் திவ்யமான வாசனையுண்டாகும். இதனுல் ஸ்தூலப்பொருள்களையின்றி சூக்ஷ்மமாகிய மனோ உணர்ச்சிகள் சிலவிருக்கின்றனவென்று நீ நன்ருக அறியலாம். இம்மாதிரியான அப்பியாஸங்களின் முக்கிய தாத்பரியம் முக்தியேயன்றி வேறல்ல. நாம் எல்லாவற்றையும் அடக்கியாளுஞ் சக்தியை யடையவேண்டியதிலேயே கருத்தை வைக்கவேண்டும், சரீரமாவது மனமாவது நமக்கு எஜமானர்களாயிருக்கக்கூடாது. நாம் அவைகட்கு எஜமானர்களாயிருக்கவேண்டும். நம்முடைய சொற்படி அவைகள் கேட்கவேண்டும்.

மனிதனே சகல பிராணிகளுக்கும் மேலானவன். மனுஷ்ய சரீரமே எல்லா சரீரங்களுக்கும் மேலானது. தேவதைகள் மோக்ஷமடைய வேண்டுமானுலும் மனிதர்களாய்ப் பிறந்தே தீரவேண்டும் தமோகுணத்திலிருந்து சகல மிருகங்களும் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதால் அவைகள் கீழ்த்தரமானவை. மிருகங்களுக்கு தியான சக்தி கிடையாது. தேவர்கள் ஞானமடையவேண்டுமானுல் பூலோகத்திற் பிறக்கவேண்டும். மனுஷ்ய ஜன்மமொன்றினுற்ருன் முக்தியடையக்கூடும். பிராணுயாமமாவது பிராணனை யடக்கியாளுவது. மூச்சை நம்மிஷ்டம்போல் இழுத்து வெளியே விடுவதற்கும் ஏகாக்கிர சித்தத்துக்கும் என்ன சம்பந்தம்? ஓர் இயந்திரத்துக்கு சக்கரம் ஆதாரமாயிருப்பதுபோல் அதாவது சக்கரத்தால் இயந்திரம் ஓடுவதுபோல் ஸ்வாஸத்தால் தேகத்தின் சக்திகள் உண்டாகின்றன. முற்காலத்தில் ஓரரசனிடம் ஒரு மந்திரியிருந்தான். அவன் வெகு சமர்த்தன். ஏதோ பொல்லாத காலம் வந்து அரசனுடைய வெறுப்புக்கு அருகனுனுன். அரசன் தன் அமைச்சனை ஓர்

கோபுரத்தின் மேலறையில் போக்கி கதவைப்பூட்டிக் கொண்டு வரும்படி தன் சேவகர்களுக்கு உத்தரவுசெய்தான். அவ்வாறே மந்திரி சிறையிலிருப்பதை அவன் மனைவியறிந்து அழுது புலம்பி கோபுரத்தின்கீழ் வந்து மேலேயிருக்கும் தன் புருஷனைப் பார்த்தாள். அவன் அவளை நோக்கி, "அடி அழாதே, ஓர் யுக்தி செய்கிறேன். நான் சொல்லுகிறபடி செய். இன்றிரவு ஓர் பெரிய கயிறு, சிறிய பின்னல்கயிறு, நூற்கண்டு, பட்டு நூல், ஓர் வண்டு, கொஞ்சம் தேன் ஆகிய இந்த சாமான்களைக் கொண்டுவா" வென்றான் அவள் அவ்வாறே செய்தாள். மந்திரி அவளைநோக்கி, "அடி பட்டுநூலால் வண்டை நன்றாய்க்கட்டி அதன் தலையில் தேனைத்தடவி சுவரின்மேல்விடு" என்றார். அவள் அவ்வாறே செய்தாள் அந்தவண்டு தேன் வாசனையால் அது மேலேயிருக்கிறதென்றெண்ணி சுவரின்மேலேறி ஜன்னலுக்குள் போயிற்று. உடனே மந்திரி அந்த வண்டைப்பிடித்து அதிற் கட்டியிருக்கும் பட்டுநூலைக் கிரகித்தான் உடனே பெண்சாதியைக் கூப்பிட்டு, "அடி இந்தப் பட்டுநூலுடன் நூற்கண்டு நூலைக் கட்டிவிடு" என அவள் அவ்வாறே செய்ய; பிள்ளை அதை மேலேயிழுத்து அந்நூலைப்பற்றினான். இதன் பிறகு மறுபடி தன் காதலியை விளித்து, "அடி, இந்த நூலுடன் பின்னல் கயிற்றைப் பிணைத்துக்கட்டு" என்று அதையும் கவர்ந்தான். அதன்பிறகு அப்பின்னல்கயிற்றில் பெரிய கயிற்றைக்கட்டி விடும்படி சொல்லி மேலே வந்தவுடன் அதைச்சன்னல் கம்பியிலிருக்கிக்கட்டி அதன் வழியே மள மள வென்று கீழேயிறங்கி மனைவியுடன் வேறோரூருக்குப் போய்விட்டான். இக்கதையிலுள்ள பட்டு நூல்போல் நமது ஸ்வாஸமிருக்கிறது. அதைக்கொண்டுதான் நூற்கண்டாகிய நாடியோட்டங்களை வசப்படுத்தவேண்டும். அவற்றினால் எண்ணங்களாகிற பின்னல் கயிறுகளைப் பிடித்துக்கொள்ளவேண்டும். கடைசியாக பெருங்கயிறாகிய பிராணனை வசப்படுத்தினால் முக்தியை யடையலாம்.

நமது சரீரத்தைப்பற்றி நமக்குத்தெரியாது. இறந்துபோன சவத்தைச் சேதிக்கலாம். சிலர் சரீரத்துக்குள் என்ன நடக்கிறதென்பதை யறியுமாறு உயிரோடிருக்கும் மிருகங்களை யறுக்கிறார்கள். ஆகிலும் மிருகசரீரம் மனுஷ்ய சரீரமாகாது. ஆதலின் நம்முடைய தேகத்தைப்பற்றி நமக்கு நன்றாய்த் தெரியாது. இதற்கென்னகாரணம்? உள்ளே நடக்கும் நுட்பமான காரியங்களை யறியும் சக்தி நமக்கில்லை. என்ன சமாசாரமென்று யாரேனும் கேட்டால் எல்லாம் மனதின் காரியமென்று சொல்லிவிடுகிறோம் அந்த அதிசூக்ஷமமான சக்தியை அறிவதற்கு முதலில் தெரியக்கூடிய சக்தியைப்பிடிக்கவேண்டும். பிராணனிருப்பதற் கடையாளம் சுவாசம் விடுதல். ஆதலின் விசுவாசத்தைக்கொண்டு வேலைசெய்தால் அதாவது அதை நம் வசப்படுத்தி அடக்கியாண்டால் பிறகு பிராணனை அடக்கியாளக்கூடும். முதலில் சுவாசத்தைப் பிடித்துக்கொண்டு சரீரத்தில் நுழைந்தால் பின்னர் அதிக சூக்ஷமமான சக்திகளையுண்

லாம். நாடியசைவுகள் எப்படியுண்டாகின்றன. தேகமுற்றிலும் நாடிகள் எப்படிப்போகின்றனவென்பது தெரியும். இவ்விசமாகப் பரிசீலனையும் அப்பியாசமும் செய்தால் தேகம், மனம் ஆகிய இரண்டையும் நமக்கு வேலைக்காரர்களாகச் செய்துகொள்ளலாம். அறிவேசக்தியாகும். இந்தசக்தியைஅடைவதற்காக நாம்பிராணயாமம் செய்யவேண்டும். அதாவது பிராணனை யடக்கியாளவேண்டும்.

பிராணயாமமென்பது இலகுவன்று. யோகாப்பியாசங்கள் ஒவ்வொன்றும் என் செய்யவேண்டுமென்பதற்குக் காரணமுண்டு. ஒவ்வொரு சக்தி வேலைசெய்யத் தொடங்கும். ஆனால் அசாத்தியமான சாதகம் செய்யவேண்டும். அப்பியாசம் அதிகமாக யோகத்தின் உண்மை புலப்படும். நாடியின் அசைவுகள் உன் தேகத்துக்குள் உண்டானவுடனே சகல சந்தேகங்களும் நீங்கிப்போம். ஆனால் ஒவ்வொருநாளும் கஷ்டமான அப்பியாசம் செய்யவேண்டும். விடியற்காலம், சாயந்திரம் ஆகிய இரண்டு வேளைகளும் யோகாப்பியாசத்துக்கு சிலாக்கியமானவை. இரவுமாறி பகலுண்டாகும்போதும் பகல்மாறி இரவு உண்டாகும்போதும் அமைதிகாலங்கள். ஆதலின் அப்போது உன்சரீரமும் அமைதியான நிலைமையிலிருக்கும். பிரதிதினமும் யோகாப்பியாசம் செய்தபிறகே உண்பதென்ற வைராக்கியத்தைக்கொள்வது நன்று.

உங்களில் யாருக்குக்கூடுமோ அவர்கள் யோகாப்பியாசம் செய்வதற்கென்று ஓர் பிரத்யேகமான வீடு அல்லது அறையைத் துக்கொள்ளலாம். அதில் நித்திரை செய்யலாகாது. அந்த அறை எப்போதும் பரிசுத்தமா யிருக்கவேண்டும். ஸ்நானம் செய்யாமல் அந்த அறைக்குள் நுழையாதே. தேகம், மனம் ஆகிய இரண்டும் சுத்தமாயிருக்கும்போது அதற்குள்போ. அடிக்கடி அவ்வறைக்குள் வாசனைவீசும் புஷ்பங்களை வைத்துக்கொள். புஷ்பங்கள்யோகிகட்கு உபயோகமானவை. சாம்பிராணிவத்திகளை வைத்து எப்போதும் நல்ல வாசனையை யூட்டவேண்டும். சண்டைபோடுவது, கோபிப்பது, அசுத்தமான எண்ணம் இவை அவ்வறையில் நிகழக்கூடாது. இவ்விதமாகச் செய்துவந்தால் நாளடைவில் அவ்வறையில் ஓர்வித சுத்தமுண்டாகும். எப்போதாவது துக்கம், சந்தேகம் முதலிய மனோவிகாரங்களுண்டானால் அவ்வறைக்குள் சென்று அவைகளை நீக்கிக்கொள்ளலாம். இந்தக்கருத்தைக்கொண்டுதான் கோயில்கள் கட்டப்படுகின்றன.

அபிமானத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுவிடவேண்டும். அதற்காகத்தான் உலக சுகத்தை வெறுக்க வேண்டுமென்று பெரியோர் கூறுகின்றனர். எந்த வஸ்துவில் ஓர் சுகமுண்டென்று விசுவாஸம் கொள்ளுகிறோமோ அந்த வஸ்துவாலேயே துக்கமும் உண்டாகிறது. உதாரணமாக குழந்தையினிடம் அபிமானம் வைக்கிறோம். அது விளையாடும்போதும் மழலைச் சொற்களைச் சொல்லும்போதும் நடக்கும்போதும் சந்தோஷமுண்டாகிறது. அதேகுழ

ந்தைக்கு ஒருநாள் ஜுரமடித்தால் அப்போது நமக்குண்டாகும் வியஸனத்துக்கு அளவில்லை. இதற்காகப் பெரியோர்கள் அபிமானத்தை விட்டுவிடும்படி சொல்லுகிறார்கள். இதனால் பிறந்த குழந்தையை ஆதரிக்காமல் விட்டுவிடவேண்டுமென்பது தாத்பரியமல்ல. அதை வெறுக்கவேண்டிய தென்பதும் பெரியோர்களின் கருத்தல்ல வெறுக்கவேண்டியது எதையென்றால், குழந்தையின் விளையாட்டுகளால் நாம் அடையும் சுகத்தை. இதற்காகத்தான்,

"வெறுப்பு விருப்பம்" இரண்டும் கூடாதென்கிறார்கள். உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் பகவத் சங்கற்பத்தால்உண்டாகி சில காலமிருந்து அழிந்துபோகின்றனவாதலின், நாமேன் அந்தப் பொருள்களிடம் பிரீதியையாவது கொள்ளவேண்டுமென்று நம்மை நாமே ஒரு கேள்விகேட்கவேண்டும். ஆகுல் விருப்பம்வெறுப்பு ஆகிய இரண்டையும் நாம் கொள்வது அனாவசியமென்று தோன்றும். ஆனால் இதிலிருந்து இன்னொரு கேள்வி யுண்டாகலாம். ஒரு பொருளினிடத்து பிரீதியாவது அப்பிரீதியாவது கொள்ளாமற்போனால் அந்தப் பொருளைப்பற்றி நாம் கவலை கொள்ளாமலிருந்துவிடுகிறோம். உதாரணமாக: குழந்தையிடம் பிரீதியையாவது அப்பிரீதியையாவது கொள்ளாமற்போனால் அக்குழந்தையைவளர்ப்பதில் நமக்குக் கவலையில்லாமற் போகுமன்றோ வெனின், இது உண்மைதான். நாம் எந்தப்பொருளைப்பற்றியும் கவலைப்படக்கூடாதென்பதே பெரியோர்களின் கருத்து. ஆனால் நம்முடைய கடமையை நாம் செய்யவேண்டிய தவசியம். அது கர்மயோகத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாமல் தவிர்க்கிறதும், செய்யத்தகாத காரியங்களைச்செய்கிறதும்தோஷமாகும். பெண்சாதி, பிள்ளை முதலிய ஸமீப பந்துக்களை இரக்ஷிக்கவேண்டியது கர்மயோகியின் கடமை. அவன் தன் கடமையைச் செய்யவேண்டும். ஆனால் அபிமானத்தை மெள்ளமெள்ளத்தவிர்க்கவேண்டும். அவ்வாறு செய்வதால் சுகதுக்கங்களால் பீடையுறாமல் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளலாம். ஆத்மவிசாரணை செய்யக்கூடும் என்ற கருத்துடன் பெரியோர்கள் இவ்வாறு விதித்திருக்கிறார்கள். ஆதலின் அபிமானத்தையொழிப்பது அவசியமாயினும் அது நாளடைவில் ஸாதிக்கவேண்டிய விஷயமென்பதையும், வெறுப்பும் விருப்பமும் கொள்ளாமற்போனாலும் தான் செய்யவேண்டிய கடமையைக் குறைவறச் செய்யவேண்டுமென்பதையும் புத்திமான்கள் ஊகிக்கடவர்.

"ஆகாரமில்லாவிட்டால் வியவகாரமில்லை" யென்று ஓர் பழமொழியுண்டன்றோ. அந்த ஆகாரத்தை சாப்பிடுகிறவன் யார் என்று என்னை நீ கேட்டால் நான் என்ன சொல்வேன். நான் சாப்பிடுகிறேன் என்பேன். நீ மற்றொரு கேள்வி கேட்கிறாய். அதாவது ஆகாரத்தை நீ சாப்பிடுகிறாயென்று ஒப்புக்கொள்ளுகிறேன். உன் வயிற்றுக்குள்போன ஆகாரத்தை ஜீரணமாக்குகிறவன் யார்" என்கிறாய். இந்தக் கேள்வியில்தான் எனக்கு ஸந்தேகமுண்டாகிறது

ஆகாரத்தை நான் சாப்பிடுகிறேன் என்பது எனக்கே தெரிகிறது. என்னுடைய கண்களால் இலையிற் போட்டிருக்கும் சோற்றைப்பார்க்கிறேன். கைகளால் அதையெடுக்கிறேன். வாயில் போட்டுக்கொள்ளுகிறேன். உள்ளே போம்படி விழுங்குகிறேன். இந்த மட்டில் என் காரியம் முடிந்துபோகிறது அதற்குமேல் அது ஜீரணமாகிறதே, அதை நானா ஜீரணிக்கச் செய்கிறேன்? நான் ஜீரணிக்கச் செய்கிறேனென்றால் உள்ளே சென்ற ஆகாரத்தை ஜீரணிக்காமல் ஒரு நாளாவது இருந்து பார்ப்போமென்று நீ கேட்டால் நான்பசபசவென்றல்லோ விழிக்கவேண்டும். இதென்ன கஷ்டம்? நான்செய்யாத காரியத்தை நான் செய்கிறேனென்று பொய் சொல்வதா மானக்கேடன்றோ? அப்படி பொய் சொன்னால் யாரும் என்னை அரைகாசுக்கும் நமபமாட்டார்கள். ஆகலின் என் மனச்சாக்ஷிக்குவிரோதமாய் பொய் சொல்லக்கூடாது. ஒருவேளை தந்திரமாக உள்ளேயிருந்து ஒருவன் ஜீரணிக்கச் செய்கிறானென்று சொன்னால் அது நகைப்புக்கிடம். என் தேகத்துக்குள் இன்னொருவன் புகுந்துகொண்டிருக்கிறானென்றால் அதைவிட வெட்கக்கேடான காரியம்வேறொன்றில்லை. என் வீட்டில் ஒருபயல் வந்தால் அவனை விரட்டுகிறேன். நான் வசிக்குமிடத்தில் இன்னொருவன் வந்தால் என் மனம் பொறுக்குமா? இந்த ஸமாதானமும் பிரயோஜனமில்லை. என் சரீரத்துக்குள் வேறொருவனிருக்கிறானென்றால் அவன் சரீரத்துக்குள் இன்னொருவனிருக்கிறான் என்று இப்படியே சொல்லிச் சொல்லி என்னையோர் பெரும்பூசுமாகவன்றோ நான் நினைக்கும்படியேற்படுகிறது ஆகலின் அதுபிசகாகும். ஒருவேளை பகவான்ஜீரணம் செய்கிறானென்றால் நீ என்னைப்பார்த்து ஓர் கேள்வி கேட்பாய் அதாவது, "அடே, சில யோகிகள் புசித்த அன்னத்தை ஜீரணிக்காமல் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். சிலர் கல்லைத்தின்று ஜீரணித்துக்கொள்ளுகிறார்களே. இவர்களெல்லாம் பகவானோ. ஒருவேளை எல்லாம் பகவானுடைய செயல் என்றால், சோற்றை யுண்பது உன்செயலென்று சொல்லிக்கொண்டாயே" என்பாய்ஆதலின் அப்படியும் சமாதானம் சொல்லக்கூடவில்லை. பிறகுஎன்னதான் சொல்லுகிறது.எதுதான் உண்மையென்று ஆலோசிக்கிறேன். சற்று நேரம் உன்னைப் பொறுத்திருக்கும்படிகேட்டுக்கொள்ளுகிறேன்.

சில குழந்தைகள் இரவு 7 மணிக்கெல்லாம் தூங்கிப்போகின்றன. இரவு 10 மணிக்கு ஏதேனும் பக்ஷணம் கொடுக்கவேண்டுமென்று பெற்றோர்கள் ஆசைப்படுகின்றனர். அவர்கள் திவ்வியமான லட்டு ஒன்றைக்கொண்டுவந்து தூங்குங் குழந்தையை எழுப்பி அதைத்தின்னும்படி சொல்லுகிறார்கள் அது தூங்கி வழிந்துகொண்டே கண்ணை மூடிக்கொண்டு லட்டு முழுவதையும் தின்று படுக்கையில் சாய்ந்துவிடுகிறது. மறுநாள் எழுந்து, அம்மா ஏன் எனக்கு லட்டு கொடுக்கவில்லையென்று சண்டைபோடுகிறது. தயார் அடே நீ நேற்றிரவு லட்டு தின்றாயே, நான் கொடுத்தேனே என்றால் நான் தின்னவில்லை, யார் தின்றார்களோவென்று சண்டை-

போடுகிறது. இப்படி தான்செய்த காரியம் தனக்கு தெரியாமற் போனதற்கென்ன காரணம். நித்திரையன்றோ? உண்மையாக குழந்தை தான் லட்டு தின்றிருக்கிறது. அது தான் தின்னவில்லையென்று சாதிப்பதைப் பிறர் நம்புவார்களா? ஆனால் அந்தக்குழந்தை பொய் சொல்லுகிறதென்று அதைக் கோபித்துக்கொள்ளலாமா? கூடாது. அக்குழந்தை லட்டுதின்னும்போது நித்திரையால் பீடிக்கப்பட்டு தின்னுகிறோமென்ற ஞானமின்றி இருந்தது. அதுபோல் ஏதோ ஓர் காரணத்தால் ஜீரணிக்கச்செய்வதும் நான்தானென்பதையறியமுடியாத அஞ்ஞானம் எனக்குண்டாயிருக்கலாம். சில யோகிகள் மூச்சையடக்கி வெகுநாள் வரையும் செத்தபிணம்போலிருக்கின்றனர். இவ்வாறாக நம்மால் செய்தற்கரிய காரியங்களை அவர்கள் செய்வதால் எல்லாக் காரியங்களையும் நாமே செய்கிறோமென்பதை நன்றாயுணரலாம். ஆனால் அப்படி செய்யும்போதெல்லாம் நாம் செய்கிறோமென்ற ஞானம் நமக்கு இல்லை. இந்த ஞானத்தை யடைவதற்காகத்தான் யோகமார்க்கத்தைப் பெரியோர்கள் அனுசரிக்கின்றனர்.

கருமங்களை இரண்டுவகையாகப் பிரிக்கலாம். மனதுக்கு இரண்டு தட்டுகளிருப்பதாய் வைத்துக்கொள்வோம். மேல் தட்டில் அதனால் செய்யப்படுங் காரியங்களெல்லாம் நான் நான் என்றவியவகாரத்தைச் சேர்ந்திருக்கின்றன. இதற்கு உதாரணம்: 'நான் ஆகாரம் சாப்பிடுகிறேன். நான் வஸ்திரம் கட்டிக்கொள்ளுகிறேன், நான் புஸ்தகம் படிக்கிறேன். என்று தன்னை கர்த்தாவாகச் சுட்டிக்கொள்ளக்கூடிய காரியங்கள். இந்த கருமங்களெல்லாம் மேல் தட்டிலிருக்கின்றன. கீழ்த்தட்டைப் பார்ப்போம். இதிலிருக்கும் கருமங்கள் நான் என்ற வியவகாரத்துடன் சேருகிறதில்லை. உதாரணம்: ஆகாரம் ஜீரணமாகிறது, ஹிருதயம் படபடவென்று சதா அடித்துக்கொண்டிருக்கிறது என்று தன்னைச்சுட்டாது வேறு கர்த்தாவிருப்பதாய் எண்ணக்கூடிய காரியங்கள். மிருகங்கள் இந்த கீழ்த்தட்டு கருமங்களைத்தான் செய்கின்றன. இத்துடன் நாம் எல்லா சங்கதிகளையும் அறிந்து விட்டதாய் நினைக்கக்கூடாது. மனதுக்கு இரண்டு தட்டுகளென்றும் அவை மேல்தட்டு கீழ்த்தட்டுளென்றும் சொல்லியிருக்கிறோமன்றோ. அந்த மேல்தட்டுக்கும் மேல் இன்னொரு தட்டு இருக்கிறது. அங்கே செய்யப்படுங்காரியங்களெல்லாம் நான் என்றவியவகாரத்துடன் சம்பந்தப்படவில்லை' 'நான்' என்னும் சப்தமே அந்தத்தட்டிலில்லை. ஆதலின் நன்றாக யோசிக்குமிடத்து மனதுக்கு மூன்று தட்டுகளுண்டென்றும் அவற்றில் நடுத்தட்டில் மட்டும் நான் என்ற வியவகாரமும், மற்றத்தட்டுகளில் அது இல்லையென்றும் அறிந்துகொள்ளுகிறோம். இந்த முதல் தட்டின் மகிமை என்னதெரியுமா? அந்தத் தட்டுதான் சமாதியிலுள்ள பெரியோர்களின மனம் வசிக்கும் சிறந்த ஸ்தலம். ஸமாதியில் நானென்னும் வியவகாரமில்லை.

"ஆதியைத்தொழு" என்று ஔவை கூறியிருக்கிறாள். அதாவது ஸகலத்துக்குங் காரணமான பிரம்மத்தை வணங்கு என்றர்த்தம். இவ்வுலகிலுள்ள பொருள்களெல்லாங் காரண காரியங்களாகவிருக்கின்றன மண் காரணம். குடம் காரியம். குடமானது மண்ணுற் செய்யப்படுகிறது. நோய்காரணம் மரணம் காரியம். நோய்க்கு அஜீர்ணம் காரணம். அஜீர்ணத்துக்குக் காரணம் உணுந்து. உணுந்துக்குக்காரணம் ஒன்று. அதற்குக்காரணம் மற்றொன்று. இப்படியாக விசாரித்துக் கொண்டேபோனால் காரணங்களிருந்துகொண்டேயிருக்கும் ஆகிலும் ஆதிகாரணமொன்று இருக்கவேண்டுமென்பதை நம்முடைய புத்தியால் ஊகிக்கிறோம். இந்த ஆதிகாரணந்தான் பகவான். இதுதான் ஆத்மா. இதுதான் பிரம்மம். ஆகலின் ஔவை கூறியபடி ஆதிமூலமாகிய பகவானைப் பிரார்த்திக்கக் கடவோம்.

"கடவுளை யார் சிருஷ்டித்தார்' என்று சிலர் கேட்பதுண்டு. இந்தக்கேள்வியானது கடவுளுக்கென்ன காரணம் என்பதுபோலிருக்கிறது. கடவுளை ஆதிகாரணமென்று சொன்ன பிறகு கடவுளுக்கு காரணம்யார் என்று கேட்பது அறியாமையாம். கடவுளுக்கு ஓர் காரணமுளதாயின் கடவுள் காரியமாகவன்றோ ஆய்விடுவர். ஆகலின் கடவுளை யார் சிருஷ்டித்தார் என்று கேட்பது அஸந்தர்ப்பமாம்.

"தன்னிழல் தன்னோடு" என்ற ஓர் பழமொழியுண்டு. நாம் எங்கே போனாலும் நம்முடைய நிழல் கூடே வருகிறது. சிலசிறு பிள்ளைகள் தங்களுடைய நிழல் தங்களோடு வராமலிருக்கட்டுமென்று ஓடுவதுண்டு, அப்போதும் அந்த துன்மார்க்கநிழல்பின்னோடு வருகிறதேயென்று வியஸனங் கொள்ளுவார்கள். அதுபோல் நாம் செய்யும் கருமம் நம்முடன் கூடவே வரும், காசிக்குப்போனாலும் கர்மம் தொலையாது. கர்ம பலனையனுபவித்தே தீரவேண்டும், ஆதலால் கர்மத்தை பகவத் பிரீதியாகச் செய்து பலனை அபேக்ஷியாமலிருந்தால் பாதிக்கப்படவேண்டும், இவ்வித உத்கிருஷ்டமானசிந்தை ஸத்ஸங்கத்தாலும் பகவத் பக்தியாலும் உண்டாக வேண்டும்.

"பிரம்மம் எது' என்று முற்காலத்தில் ஓர் மகரிஷியை நோக்கி சிஷ்யன் கேட்டான். அதற்கு அவர் எதனால் நீ ஜீவிக்கிறையோ அது பிரம்மமென்றார். உடனே அவன் அன்னத்தால் நான் ஜீவித்திருக்கிறேன், அதுதானே பிரம்மம் என்றான். குரு ஆமென்றவுடன் சிஷ்யன் அவ்வுபதேசத்தை பெற்றுக்கொண்டு அன்னம் பிரம்மம் என்று சொல்லிக்கொண்டு மரத்தடியில உட்கார்ந்தான். சில நோத்துக்கெல்லாம்,

"கோவிந்தா, கோவிந்தாவென்று ஓர் பிணத்தைப் பாடையில் வைத்துத் தூக்கிக்கொண்டு போனார்கள்' உடனே சிஷ்யன் ஆலோசித்தான். அன்னம் இருந்தென்ன பிரயோஜனம், பிராணன் போய்விடுகிறதே. பிராணனிருந்தாலன்றோ அன்னம் புசிக்கலாம்.

அன்னத்தைவிட பிராணனே பெரிது. பிராணன்தான் ஸகல வஸ்துக்களுக்கும் ஆகாரமாயுள்ளது என்று குருவினிடம் ஓடி 'ஸ்வாமி' எனக்கு நீங்கள் மோசமான உபதேசம் பண்ணினீர்களே, எது புசிக்கப்படக்கூடியதோ அது பிரம்மம் என்றீர்களே. அதாவது அன்னம் பிரம்மமென்றீர்களே. பிராணன்றோ பிரம்மம் என்றான். குரு ஸந்தோஷமடைந்து "ஆமப்பா நீதான் புத்திசாலி. பிராணன் தான் பிரம்மம்' என்றார். சிஷ்யன் அதுமுதல்,

"பிராணனே பிரம்மம்" என்று ஜெபித்துக்கொண்டிருந்தான் இரவில் நித்திரைசெய்து காலையில் விழித்துக்கொண்டு "அடா பிராணன் இருந்து பயனென்ன? மனம் இல்லாவிட்டால் பிராணன் பயன்படாது. மனம் பிராணனைவிட பெரிது'. என்று ஆசாரியனிடம் ஓடினான். சுவாமி என் பிராணனிருந்தும் இரவில் எனக்கு ஸ்மரணை தெரியவில்லை ஆதலின் மனம் பிரம்மமென்று தோன்றுகிறது என்றான். குரு ஸந்தோஷமடைந்து 'அப்பா, நீதான் நல்ல சிஷ்யன். மனம்தான் பிரம்மம் என்றார். உடனே சிஷ்யன் ஓடிவந்து முன்போல் மரத்தடியிலுட்கார்ந்து,

"மனம் பிரம்மம்" என்று சொன்னான். மனம் ஒரு க்ஷணநேரங்கூட ஓரிடத்தில் நில்லாமல் ஓடியது. இதைக்கட்டி ஓரிடத்தில் நிறுத்துவதற்கு புத்திதான் அவசியமென்றுணர்ந்து "குமரா, விஞ்ஞானந்தான் பிரம்ம" மென்றான், மகரிஷி வெகு குதூகலமடைந்து "சிஷ்யா, உனக்குத்தான் சிஷ்யன் என்ற பெயர்தகும். விஞ்ஞானம் (புத்தி) பிரம்மம்" என்றார். உடனே சிஷ்யன் ஓடிவந்து,

"விஞ்ஞானம் பிரம்மம்" என்று சொல்லிக்கொண்டிருக்கும் போது அவனுடைய குழந்தை யிறந்தது. வியஸனமுண்டாயிற்று. உடனே புத்தி பிரம்மமன்று. சுகந்தான் பிரம்மம், என்றறிந்த ஓடிவந்து குருவையடைந்து, சுவாமீ ஆநந்தம்தான் பிரம்மமென்றறிந்தேன்" என்றான். குரு வெகு ஸந்தோஷமடைந்தார். மேற்கூறிய கதையால் நமது முன்னோர்கள் சிஷ்யர்கள் தாங்களே ஆலோசித்தறியட்டுமென்ற நன்னோக்கத்தால் பிரம்மத்தைபலவிதமாய்ச்சொல்லியிருக்கிறார்க ளென்றறியத்தக்கது.

"மனமடங்கினால் மாண்புண்டாம்" என்றபடி ஆத்மாவை தரிசிக்க விரும்புவோர்' மனதையடக்கி யாளவேண்டும். மனமானது ஒரு நிமிஷநேரமும் நிலையாயிராது. பலவிடங்களிலும் அலைந்துகொண்டிருக்கும் அதை ஒரே நிலையில் நிறுத்தவேண்டி விவேகிகள் யோகாப்பியாஸஞ் செய்கின்றனர். ஏகாக்கிர சித்தமாயிருந்தாலன்றி ஆநந்தமுண்டாகாது. அப்படியானால் மனதை அடக்கும் உபாயமென்ன?

"சித்தத்தை சிக்ஷித்துக்கொண்டிருப்பது" நன்று. ஒருசமயம் ஞானியாகிய தாயுமான ஸ்வாமிகளுக்கு வடைதின்ன வேண்டுமென்று ஆசையுண்டாயிற்று. உடனே வயிற்கிடந்த கோமயத்தைக் கையாலெடுத்து "அடே மனமே, உனக்குவடைவேணுமா சாப்பிடு

இதை. இதுதான் விடை" யென்று வாயிற் போட்டுக் கொண்டார். இவ்வளவு வைராக்கியத்துடன் மனதை இழுத்துப்பிடித்தாலன்றி அது அடங்கமாட்டாது. மனதை சுவாதீனப் படுத்துவதற்கு வைராக்கியம் அவசியம். கையோடு கை சேர்த்து முறுக்கி பற்களைப் பொருத்தி கெறித்து சண்டைபோடுவது போலும் சரீரத்தோடு சரீரம் பொருந்தி மல்லுக்கட்டி விழுவதுபோலும் மனதை வைராக்கியத்தால் ஒரே கட்டாகக்கட்டும் மகா புத்திமான்களே பிரம்மத்தைக்காணக்கூடும். மனோ விருத்தியின்றி ஏகாக்கிர சித்தமாயிருப்பதற்கு யோகம் அவசியமாதலின் உண்மையான பேரின்பத்தை யடைய விரும்புவோர் யோக சாஸ்திரங்களைப் படிப்பது நன்று.

பிராணாயாமம் என்பது மூச்சைப்பற்றியல்ல. மூச்சைமூக்கின் ஓர் துவாரத்தாலிழுத்து மற்றொரு துவாரத்தால் விடும் அப்பியாசமானது பிராணாயாமத்துக்கு ஓர் வழியேயாம். பிராணாயாமமென்பது பிராணனை யடக்கியாளல் என்று பொருள்படும். இந்திய தத்துவசாஸ்திரிகளின் அபிப்பிராயப்படி பிரபஞ்சமானது இரண்டு பொருள்களாக்கப் பட்டிருக்கிறது. அவ்விரண்டில் ஆகாசமொன்று. ஆகா எங்கும் நிறைந்திருக்கிறது. எவ்விடத்திலும் ஆகாசமுண்டு. ரூபமுள்ள வஸ்து ஒவ்வொன்றும் ஆகாசத்தாலாக்கப்பட்டிருக்கிறதென்பதுண்மை. ஆகாசந்தான் காற்று ரூபமாயும் ஜல ரூபமாயும் பிருதிவீ ரூபமாயும் சூரிய சந்திர நக்ஷத்திராதிகளாகவும் மனுஷ்ய சரீரம், புற்பூண்டு முதலிய சகல வஸ்துக்களுமாக மாறுகிறது. அதைத்தனியே பார்க்கமுடியாது. அது அத்தனை சூக்ஷ்மமானது. அது ஸ்தூல ரூபத்தை யடைந்தால் நம்முடைய கண்ணுக்குத் தென்படும். உலக சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஆகாசமொன்றிருந்தது உலக முடிவிலும் ஜலப்பொருள் கட்டிப்பொருள், காற்றுப்பொருள் முதலியனவெல்லாம் ஆகாசமாக ஆய்விடுகிறது.

இந்த ஆகாசமானது எந்த சக்தியாலுண்டாகிறதோ அந்த சக்திக்குத்தான் பிராணன் என்று சொல்லுகிறோம். ஆகாசமானது எவ்வாறு எல்லாப் பொருள்களிலுமிருக்கிறதோ அவ்வாறேபிராணனானது எல்லா சக்திகளிலுமிருக்கிறது: பிராணனே அசைவு, ஆக்கிராணம் முதலிய சகல சக்திகளுக்குக் காரணம். தேகத்தின் அவயவங்கள் பிராணனாலேயே அசைகின்றன. கையை யாட்டுகிறோம். இது பிராணனுடைய சக்தி. மனதில் ஒன்றைப்பற்றிநினைக்கிறோம். இதுவும் பிராணனுடைய சக்தியே. இவ்விரண்டில் மனதால் நினைக்கும் சக்தி உயர்ந்ததாகவும் கையை யாட்டும் காரியம் தாழ்ந்ததாகவுமிருக்கின்றது. கையை யாட்டில் பிராணனிருக்கிறதென்று நன்றாயறிந்துகொள்ளலாம். மனதால் ஒன்றை நினைத்துக்கொண்டால் பிராணனிருப்பதாக அருகே யிருப்பவர்களுக்கு அத்தனை நன்றாகத்தெரியாது. உலகத்தில் தேகத்தாலும் மனதாலும் செய்யப்படும் சகல காரியங்களும் பிராணனுடைய காரியமேயன்றி வேறில்லை. இந்தப் பிராணன் எங்கும் நிறைந்து எப்போதுமிருந்து கொண்டிருக்கிறது. ஆனால் உலகமுடிவில் இது அசைவற்றிருக்கும்.

இது ஆசையத்தொடங்கி ஆகாசத்துடன் சேர்ந்து பிரபஞ்சத்திலுள்ள பொருள்களெல்லாந்தோன்றுகின்றன. இவ்வித பிராணனை யடக்கியாளும் திறமையே பிராணாயாம மெனப்படுகிறது

இந்தப் பிராணாயாமத்தால் நமக்கு ஸர்வசக்திகளுமிருக்கும் அறையின் கதவு திறக்கப்படுகிறது. ஒருவன் பிராணனை யடக்கியாளுந் திறமையைக் கொண்டால் அவனுக்கு உலகத்திலுள்ள சக்திகளெல்லாம் ஸர்வசுவாதீனமாக ஆய்விடும். அவன் சூரிய சந்திர நக்ஷத்திராதிகளை யெல்லாம் ஸ்தான பிரஷ்டமாக்கலாம். யோகியானவன் பிராணாயாமம் செய்து தேர்ந்தால் அவனுக்கு சகலமும் சுவாதீனப்படும். அப்படிப்பட்ட யோகி 'தேவதைகளை வா' வென்று கூப்பிட்டால் அவர்கள் உடனே வருவார்கள். இறந்துபோனவர்களை வாவென்றால் வருவார்கள். ஜெகத்திலுள்ள சக்திகளெல்லாம் அடிமைகள்போல் அவனுக்கு நடக்கும். யோகியின்செயல்களைக் காணும் மூடர்கள் அவை இந்திரஜாலமென்பர். இந்தியதத்துவ சாஸ்திரிகளின் இலக்ஷியம் யாதெனில் எதையறிந்தால் எல்லாவற்றையும் அறிய முடியுமோ அதைக் கண்டுபிடிக்கவேண்டுமென்பது. ஒவ்வொன்றாய் ஆராய்ந்துபார்த்து உலகின் தன்மையைத் தெரிந்துகொள்வதனால் யாரால் முடியும். எந்தக்காலத்தில் அது சாத்தியமாகும். ஆதலின் யோகிகள் எல்லாவற்றிற்குங் காரணமாயிருக்கும் பொருளையே கண்டுபிடிப்பதில் நோக்கங் கொள்ளுகின்றனர். காரணத்தைக் கண்டுபிடித்தால் அதனாலுண்டாகும் சகல காரியங்களும் தெரிந்துவிடும். எவன் பிராணனை யடக்கியாளுகிறானோ அவனுக்கு மனம் சுவாதீனப்படும். எல்லோருடைய மனமும் சரீரமும் அவனிஷ்டப்படி செய்யும்.

பிராணனை யெப்படி யாளுகிறதென்பது ஓர்கேள்வி. ஒவ்வொரு மனிதனுந் தானிருக்கு மிடத்தினின்றே காரியத்தை தொடங்கவேண்டும். உலகத்திலுள்ள பொருள்களெல்லாவற்றிலும் நமது சரீரமும் மனதும் அதிஸமீபமாயுள்ளவை இந்த சரீரத்தையும் மனதையும் நடத்தும் நமது பிராணன் அதிஸமீபமாயிருப்பதால் முதலில் அதை யடக்கியாளவேண்டும். பிராணன் என்ற மகாஸமுத்திரத்தில் நமது பிராணனானது அருகேயுள்ள அலை யாதலின் அதை யாளக் கற்றுக்கொண்டால் எல்லா பிராணன்களும் ஸ்வாதீனமாய்விடும். பிராணனுடைய மகா நுட்பமான சிறந்த சக்தி எண்ணங்களில் தெரிகிறது. அதாவது நினைக்கும தொழிலே பிராணனுடைய சிறந்த தொழிலாம். மனதின் மூன்று தட்டுகளைப்பற்றி இன்னோரிடத்திற் கூறியிருக்கிறோம். சாஸ்திரபரிசீலனை செய்தோர் இதோவிருக்கும் மேஜைக்கும் உனக்கும் வித்தியாஸமில்லை யென்பார்கள். பொருள்களுக்கெல்லாம் ரூபம்பேதமே யன்றி விஷய பேதமில்லை. நீரில் அநேக குமிழிகள் தோன்றி வெவ்வேறாகக் காணப்படுவதுபோல் உலகமும் பற்பல பொருள்களாய்க் காணப்படுகின்றது, ஒரு சரீரமாவது நித்யமல்ல. வியவகாரத்தில் உன்சரீரம் என்சரீரமென்ற வித்யாஸமிருக்கிறதே யன்றி உண்மையில் யா

தொரு வித்யாஸமுமில்லை. சிலயோகிகள் அநேக மாஸங்கள் பூமிக்குள்ளேயே யிருப்பார்கள். இது பிராணாயாமத்தாலுண்டாகுஞ் சக்தி. தேகத்திலுள்ள ஸ்வாஸப் பையிலிருந்து காற்றை வெளியே தள்ளுகிறோம். மூக்கின்வழியாய் இழுக்கும் காற்று ஸ்வாஸப் பைகளுக்குள் போகிறது. பிராணனைப்பற்றி வெளிப்படையாய்த் தெரிவது மேற்கூறிய ஸ்வாஸப் பைகளின் அசைவுகளே. ஆதலின் அந்த ஸ்வாஸப்பைகளை நம்மிஷ்டப்படி அசையும்படியும் அசையாமலிருக்கும்படியும் ஸ்வாதீனப்படுத்திக்கொள்வது பிராணாயாமத்தின் காரியமாகும். பிராணன் ஸ்வாஸப்பைகளை அசைக்கிறது. ஸ்வாஸப்பைகள் மூச்சுக் காற்றை வெளியே தள்ளுகிறது. ஆதலின் பிராணாயாமமென்பது மூச்சுவிடுவதல்ல. மூச்சு விடுவதற் காதாரமான ஸ்வாஸப்பைகளை யசையச்செய்யும் சக்தியை யாளுவதாகும். நாடிகளின் வழியாய் எந்த சக்தியானது சுவாசப்பைகளுக்குச் சென்று காற்றை வெளியே தள்ளுகிறதோ அந்த சக்தியே பிராணன். இந்தசக்தியை நாம் நம்முடைய இஷ்டப்படி செலுத்த முயன்றால் தேகத்திலுள்ள மற்ற சக்திகளெல்லாம் நம்முடைய சுவாதீனத்தில்வந்துவிடும். சிலமனிதர்கள் காதையாட்டக்கூடும். சிலர் சாதகத்தால் மார்பின் தசையைக் குலுக்கக்கூடும். சில நாடிகளை சுவாதீனப்படுத்தக்கூடுமானால் எல்லா நாடிகளையும் ஏன் சுவாதீனப்படுத்தமுடியாது? அப்பியாசத்தால் சகல நாடிகளையும் சுவாதீனம் செய்துகொள்ளலாம். அந்த சக்தி நமக்கு இப்போதில்லாததற்குக்காரணம் அதை நாம் வெகுநாளாய்ப் பிரயோகப்படுத்தாததே. அப்பியாசஞ்செய்யாத தோஷத்தால் பல நாடிகள் நம்மிஷ்டப்படி நடக்காமலிருக்கின்றன.

“நாராயணன் கதையைப் பாராயணஞ்செய்” என்று ஒரு பெரியவர் அடிக்கடி கூறுவதுண்டு. நாராயணஸ்மரணை செய்கிறவர்கள் ஸமஸ்த துக்கங்களினின்றும் விடுபடுகிறார்கள். எல்லா துக்கங்களிலும் பெரிது ஸம்ஸாரமாகிய மகாதுக்கம். இந்த துக்கம் நீங்கினவர்கள் முக்தர்களெனப்படுவர். ஆகலின் முக்தியைத்தருவதற்கு அனுகூலமாயுள்ள நாராயண ஸ்மரணையை ஸன்யாஸிகள் எப்போதுஞ் செய்துகொண்டிருக்கிறார்கள். பெரியோர்கள் அனுஸரிக்கும் வழியை நாமும் அனுஸரிக்கவேண்டியதாதலின் ஸதா நாராயணவென்று ஸ்மரித்துக்கொண்டிருப்போம்.

“தேகம் பெரிது ஜீவன் சிறிது” ஜீவன் அணுவிலும் அணு. அது பிரிந்துபோனால் தேகம் கட்டைபோலாகிறது, அதுபோல் பெரிய சரீரமும், பரந்த கண்களும், நிறைந்த செல்வமும், மிகுந்த பலமும் உள்ளவனாயினுஞ் சிறந்த ஞானமென்பது சிறிதேனுமில்லையானால் அவன் ஜென்மம் வியர்த்தமாகிறது. எல்லா ஆபரணங்களிருந்தும், தாலி யில்லாவிட்டால் எப்படி அமங்கலியாகி யாதொரு சுகத்தையும் அடைய முடியாமல் எடுத்த ஜென்மம் வியர்த்தமாகிறதோ அப்படியே சகல சம்பத்துகளிருந்தும் ஞானசம்பத்தொன்றில்லையானால் மோக்ஷம் கிடைக்காது. பிறவிப்பிணி நீங்கா

து. எப்போதும் கஷ்டம் இருந்துகொண்டேயிருக்கும். ஆதலின் எல்லோரும் ஞானநூல்களைக் கற்பது அவசியமாகிறது.

"சித்தசுத்தி மூக்கியம்" ஓர் மலையின்மேலேறவேண்டுமானால் படிகளிருக்கவேண்டும். குளத்திலிறங்கவேண்டுமானால் படிகளிருக்கவேண்டும். மேல்மாடிக்குச் செல்ல படிகள் வைத்திருக்கிறார்கள். ஓரிடத்திலிருந்து மற்றொருவிடத்துக்குப்போக வண்டிகளிருக்கின்றன. அதுபோல் ஞானத்தையடைய கர்மம், பக்தி, யோகம் முதலிய சிறந்த படிகளிருக்கின்றன. வேதத்திற்கூறிய கர்மங்களைச் செய்து பகவானை உபாஸித்து சித்தசுத்தியடைந்தவர்களே மோக்ஷமடைய யோக்கியர்கள். அநந்தமான நூல்களைப் படித்தாலும் வர்ணாசிரம தர்மங்களை வரவுசெலவில் வைக்காமல் கர்மப்பிரஷ்டனாயிருப்பவன் கடைத்தேறமாட்டான். மனதைக் கண்டபடி அலையவிட்டு சிவா, ராமா, கிருஷ்ணா வென்று ஆயுள்காலமுழுவதும் கதறினாலும் மோக்ஷம் கிடைக்காது. சித்தத்தை யொரே நிலையில் நிறுத்தி யோகம் செய்தும் தன்னையறிந்து தானே எங்கும் நிறைந்திருப்பவனென்று அறியும் ஞானத்தையடையாதவன் மூடனாவான். ஆதலின் கர்மம், பக்தி, யோகம் ஞான முதலிய நான்கும் மனிதர்க்கு அவசியமானவை.

"தியானம்" என்பதென்ன? நமது மனதை நமது சரீரத்துக்குள்ளே அல்லது வெளியே ஏதேனுமோரிடத்தில் நிறுத்தி அதைவிட்டு அங்குமிங்கும் அசையாமற் செய்தால் அந்த விடத்திலிருந்தே அது சகல உணர்ச்சிகளையும் இழக்கும். இம்மாதிரி நிலைமையில் அந்த மனம் சிலநேரம் நிற்பதற்குத்தான், தியானம் என்று சொல்லப்படுகிறது. நான் சுவாமியை தியானம் செய்கிறேனென்று கண்ணைமூடிக்கொண்டு மனதை யலையவிடுகிறவர்கள் யாதொரு பலனையும் அடையார்கள்

"ஸமாதி" யென்பதுயாது? மேற்கூறியபடி தியானம் செய்துகொண்டிருக்கையில் சகலவிதமான ரூபங்களையும் மறந்திருப்பது ஸமாதி. உதாரணமாக ஓர் புஸ்தகத்தையே தியானம் செய்துகொண்டிருப்பதாய் வைத்துக்கொள்வோம். அப்படி செய்யும்போது எவ்விதமான ரூபத்தையும் கொடாமல் உள்ளுணர்ச்சிகளை அதாவது ரூபத்தால் தெரிவிக்கப்படாத அர்த்தத்தை மட்டு மறிவது ஸமாதியெனப்படுகிறது. அதாவது எதிரே காணப்படும் பொருளின் ரூபம்மறைந்து உள்ளேயிருக்கும் அர்த்தம்மட்டும் தெரிவது ஸமாதியின் தன்மை. மேற்கூறிய ஸமாதியிலிருக்கக்கூடிய பாக்கியம் பெற்றவர்கள் உலகத்திலுள்ள ஸர்வ சக்திகளையும் அடைகின்றனர். இது தான் யோகியிடமகப்பட்ட பெரிய கருவி.

ஓர் ஏரியின் தண்ணீர் கலங்கினாலும் அல்லது காற்றடித்து அலைகளுண்டானாலும் நாம் ஜலத்தின் கீழுள்ள தரையைக்காண முடியாது. அதுபோல் சித்தம் சலித்துக்கொண்டிருந்தால் ஆத்மாவை தரிசிக்க முடியாதென்று பெரியோர் கூறுகின்றனர். ஏரியே நம்முடைய சித்தம். ஏரியின் அடிப்புறம் நம்முடைய ஆத்மா. சித்

தமாகிற ஏரி தெளிந்து காற்றடித்துக் கலையாமலிருந்தால் ஆத்மாவாகிய அடிப்புறம்தெரியும். சித்தமே ஏரியென்றதால் அதிலுள்ள அலைகளே விருத்தியாகும்.

குதிரைகளை இழுத்துப்பிடித்து வண்டியை சரியான பாதையில் ஓட்டுகிறவன் சாமர்த்திய சாலியே யன்றி அதை இஷ்டப்படி அங்குமிங்கும் ஓடச்செய்பவன் சமர்த்தனல்ல. அதுபோல சித்தத்தைப் பல துர்விஷயங்களிலும் செல்லும்படி விடுகிறவன் மூடனாகவும் அதை சன்மார்க்கத்தில் செல்ல விடுகிறவன் விவேகியாகவும் எண்ணப்படுகிறான்.

"நல்ல பழக்கம் நாளாகும், கெட்ட பழக்கம் கிடுகிடென்று வரும்" என்றபடி சித்தமானது ஐம்புலன்கள் வழியாக எப்போதும் வெளியேயுள்ள பொருள்களிலேயே செல்லுகிறதும் சிற்றின்பங்களில் நாடுகிறதுமாயிருக்கிறது. நல்விஷயங்களில் நாடுகிறதென்றால் கொஞ்சத்திலாகிறதில்லை. வெகுநாள் செல்லும்.

ஓர் மனிதனைச்சுற்றி பாவம் என்பது கூண்டுபோல் வளைந்திருக்கிறது அதை யோகம் என்ற அக்கினியால் அழித்து விடலாம். ஞானம் வித்திப்பது யோகத்தாலென்றறியவேண்டும். ஞானமே யோகிகட்கு உதவி செய்கிறது. எவன் யோகியாயும் ஞானியாயுமிருக்கிறானோ அவனிடம் பகவான் பிரீதிகொள்ளுகிறார். ஒவ்வொருநாளும் ஒன்று, இரண்டு, மூன்று தடவை மகயோகம் செய்கிறவர்கள் தங்களை தேவஸ்வரூபமென்றறியக்கூடும்.

யோகமானது இரண்டு வகைப்படும். ஒன்று சுபாவம், இன்னொன்று மகாயோகம். தன் ஆத்மாவிலேயே மனதைச்செலுத்தி அது குணாதீதமென்று நினைப்பது அபாவம். யோகியானவன் ஒவ்வொன்றிலும் தன்னை யின்னானென்றறிந்துகொள்ளுகிறான். தன் ஆத்மா சுத்தமானது, ஸந்தோஷம் நிறைந்தது. ஈசுவரனும் அதுவும் ஒன்று என்று நினைப்பது மகாயோகம். மற்றயோகங்களெல்லாம் சிலாக்கியமல்ல உலகெங்கும் பிரம்மமே நிறைந்திருக்கிறதென்னும் பிரம்மயோகமே மகா சிலாக்கியம்.

நமது சரீரத்தின் ஒவ்வொரு பாகத்திலும் பிராண சக்தியை நிரப்புவதால் சரீர முழுவதும நமதுஸ்வாதீனத்தில் வந்துவிடுகிறது. நமக்குண்டாகும் வியாதிகள் யோகாப்பியாஸத்தால் நிவர்த்தியாகும். யோகத்தினாலே பிறர் நோயைத் தீர்க்கவுங்கூடும். உலகத்திலுள்ள நன்மை தீமைகள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மாறக் கூடும். நம்முடைய தேகத்தில் ஒருவிதமான மெலிவுண்டானால் நம்மருகிலுள்ளவர் தேகத்திலும் அதே விதமான மெலிவு நேரிடும். நீ பலசாலியாயிருந்தால் உனக்கு சமீபமாயுள்ள மற்றவர்களும் பலசாலிகளாயிருப்பார்கள். ஒருவர்தேகத்திலுள்ள நோயும் பலஹீனமும் பிராணஅசைவுகளால் மற்றொருவர் தேகத்துக்குத் தாண்டும். சரீரஆரோக்கியமானது ஒருவரிடமிருந்து மற்றொருவரிட

த்துக்கு போகக்கூடும். சில வேளைகளில் யோகிகள் தங்களுடைய சக்தியால் வெகுதூரத்திலிருக்கும் ஒருவனது நோயைத் தீர்க்கின்றனர். இதற்குக் காரணம் இவர்கள் பிராணவாயுவை எவ்வளவு தூரமான விடத்திற்கும் அனுப்பக்கூடிய சக்தியைப் பெற்றிருப்பதுதான்.

நான் உன்னிடம் பேசிக்கொண்டிருக்கிறேன். நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன்? என் மனதை ஒருவிதமாக அசைத்து அதனால் உன் மனதைப் பாதிக்கும்படி செய்துகொண்டிருக்கிறேன், என்றையதினம் எனக்கு உற்சாகம் உண்டாகிறதோ அன்றையதினம் என் பிரஸங்கத்தை நீங்கள் வெகு ஆசையுடன் கேட்கிறீர்கள். எனக்கு உற்சாகம் குறைந்தால் பிரஸங்கத்தின் சிறப்பும் குறைந்துவிடுகிறது. யோகபலம் அதிகமாயுள்ளவர்கள் உலகத்திலுள்ளோர் எல்லோரையும் தங்களிஷ்டம்போல் நடக்கும்படி செய்வார்கள். முன்னாளில் இருந்த தீர்க்கதரிசிகள் வெகு ஜனங்களை வசப்படுத்தியது இந்த பிராண சக்தியிலேதான். சாமான்ய மனிதர்களுக்கு இந்த ரகஸ்யம் தெரியாது. சில வேளைகளில் நமது தேகத்தின் அங்கங்களொன்றில் பிராணசக்தி குறைந்துபோவதால் அல்லது அளவுக்குமிஞ்சி அதிகப்படுவதால் வியாதியுண்டாகிறது. அக்காலத்தில் மனதுக்குள்ள நுட்ப அறிவினால் பெருவிரலோ அல்லது வேறிடத்திலோ பிராணன் குறைவாயிருக்கிறது என்று யோகிகள் அறிந்து பிராணயாமத்தால் அதில் வேண்டிய அளவு பிராணனை நிரப்பி சௌக்கியப்படுத்துவார்கள்.

சீக்கிரத்தில் முக்தியடைய வேண்டுமென்பது யோகிகளின் கருத்து. மனதை ஓரேவிடத்தில் நிறுத்துவதற்கு ராஜயோகம் ஸாதகமாயிருக்கிறது. உலகத்தில் அனேக மகாத்மாக்களிருக்கின்றனர், அவர்களை நாம் பார்க்கமுடியாததற்குக் காரணம் நமது பிராணன் கீழ்த்தரமான நிலைமையிலிருப்பதுதான். பிரதிதினமும் நமக்கு சமீபமாக ஆகாசத்தில் சஞ்சரிக்கும் மஹாத்மாக்கள் அநேகருளர். இவர்களுடைய சூக்ஷ்ம சரீரங்களை காணும் யோக்யதைநமது கண்ணுக்கு இல்லையென்பதை அடியில்வரும் உதாரணத்தால் விளக்குகிறோம். இருட்டு காலத்தில் பூனைகளும் ஆந்தைகளும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு தாராளமாய்ப் போகக்கூடும். அவைகளின் கண்கள் இருட்டிலுள்ள பொருள்களைப் பார்க்கும்

சக்தியைப் பெற்றிருக்கின்றன. இதனால் ஒரே நிலைமையிலுள்ள பிராணனைக் கொண்டவர்கள் மாத்திரம் ஒருவரையொருவர் பார்க்ககூடுமென்றும், ஏற்றக்குறைவான பிராணநிலைமையுடையவர்கள் ஒருவரையொருவர் பார்க்கமுடியாதென்றும் அறிகிறோம். உலகத்திலுள்ள சகல சக்திகளும் பிராணனாலேயே உண்டாகின்றனவாதலின் பிராணாயாமம் விசேஷமாயிற்று.

முதுகெலும்புக்குள் இரண்டுவிதமான நாடியோட்டங்களிருக்கின்றன. முதுகெலும்பின் உட்புறத்தில் கொடிபோலோடும் சுயிற்று நரம்புக்குள் கால்வாய்போன்றிருக்கும் குழாய்க்கு ஸுஷும் நாடியென்று பெயர்.

“சிவபூஜையே சிறந்த பூஜை” சிவபூஜை செய்து சிவானுக்கிரகம் பெற்றவர் ஸர்வ ஸுகங்களையும் அடைகின்றனர், உலகத்தில் ஸந்தானம், ஸம்பத்து ஆகிய இரண்டு முள்ளவர்களைக் கண்டால் பெரியோர்கள் அவர்கள் ஜென்மாந்திரத்தில் சிவபூஜைசெய்தவர்களென்று கூறுகின்றனர். சிவபூஜையின் பலனை ஏதேஷ்டமானஸம்பத்தை யடைவதும் ஸுபுத்திரர்களைப் பெறுவதுமென்று இதனால் வெளியாகிறது. இனியகுரலுடன் பாடுகிறவர்களைக்கண்டால் இவர்கள் போனஜென்மத்தில் சிவலிங்கத்தின்மேல் ஏதேஷ்டமான தேனையபிஷேகம்செய்தவர்களென்கிறோம். இதனால் நல்லசாரீரமானது சிவபூஜையால் அடையக்கூடியதென்பது பெறப்பட்டது. ஈசுவரானுக்கிர முள்ளவர்களுக்கே ஐசுவரியமுண்டாகிறதால் அதற்கும் சிவபூஜை யவசியம். மகா சூரர்களான கௌரவர்களையும் பீஷ்மதுரோணர்களையும் ஜெயிப்பதற்காக அர்ஜுனன் சிவபூஜைசெய்து பாசுபதாஸ்திரம் பெற்றான். இதன்றி மோக்ஷமடையவேண்டி யோகிகளெல்லாம் ஸதா பரமேசுவரனையே தியானித்துக்கொண்டிருக்கின்றனர். ஆதலின் ஸகல சுகங்களையும் இகத்தில் அனுபவித்து முடிவில் முக்தியை எய்துவதற்கு ஸாதகமாயுள்ள சிவஸ்மரணையை ஸதா செய்துகொண்டிருப்போம்.

“சிவநாராயணன்” என்ற பதத்தில் ஓர் ரஸமிருக்கிறது. முன்னோர்களாகிய விவேகிகள் பிற்காலத்தில் தமது ஸந்ததியார் ஒருவரோடொருவர் போர் புரியாமலிருக்கட்டுமென்று ஹரியும் ஹரனும் ஒன்றென்பதைக் குறிக்க மேற்கூறிய சிவநாராயணன் என்ற பெயரை வழங்கினர். பேதபுத்தியைக் கொள்ளாதபடி ஹரிஹரன் சிவராமன், சிவராமகிருஷ்ணன் என்ற பெயர்களை வழங்கின நம

து முன்னோர்களின் கருத்தை நாம் நன்றாய்த் தெரிந்துகொண்டால் ஒருவரோடொருவர் சண்டைபோடமாட்டோம்.

"வேதாத்யயனம்" செய்தால் தேகத்திலுள்ள ஸத்வபாகமானது சுத்தப்படுகிறது. இவ்வாறு செய்வதில் மூன்று விதங்களுண்டு. பிறர் கேட்கும்படி உரக்கச்சொல்வது. பிறர்செவிபடாதபடி முணுமுணுவென்று சொல்வது மனதால் ஸ்மரிப்பது. இம்மூன்றில் மனதால் ஸ்மரிப்பதற்றப் பலன் அதிகம். சுத்தம் தேகசுத்தம், மனோசுத்தம் என இரண்டு வகைப்படும், ஸ்நானம் செய்வதால் தேகசுத்தமும், உண்மை பேசுவது முதலிய புண்ய காரியங்களால் மனோசுத்தமும் உண்டாகின்றன. இரண்டுவித சுத்தங்களும் மனிதர்க்கு இன்றியமையாதன. மனோசுத்தமட்டுமிருந்தாற்போதும தேகசுத்தம் அவசியமில்லையென்று சொல்வது பிசகு. இரண்டுவித சுத்தங்களுமில்லாதவன் யோகியாகான்.

"அபரிக்கிரகம்" சிறந்தகுணம் இதுதான் தற்காலத்து வைதீகர்களிடம் இல்லை. இப்போதுள்ள வைதீகர்கள் தானம்வாங்குவதில வெகுதரிதப்படுகின்றனர். திலதானம் வாங்கமாட்டேனென்னும் வைதீகனுக்குஒருரூபாய் திலத்துடன் சேர்த்துக்கொடுத்தால் உடனே வாங்கிக்கொள்ளுகிறான் தானமவாங்காமையே அபரிக்கிரகம் எனப்படும் ஒருமனிதன் வேறொருமனிதனிடமிருந்து ஓர்பொருளை தானம்வாங்கினால் உடனே அவன் ஹிருதயம் அசுத்தமாகிறது. அவனுக்குள்ள மதிப்பு போய்விடுகிறது. ஸ்வாதீனத்தையிழந்து எண்சாணுடம்பும் ஒருசாணாய்க்குன்றும் தன்மையை யடைகிறான். நல்லவர்களைக்கண்டால் ஸங்கோசமும் தனவான்களைக்கண்டால்பல்லிளிப்புங்கொண்டு தாக்ஷண்யத்துக்குக் கட்டுப்பட்டு அடிமைபோலாகிறான். இவ்வாறு பலவிதத்திலும் குன்றிப்போன மனமுடையவன் யோகியாக முடியாது. ஆதலின் யோகிகட்கிருக்கவேண்டிய சிறந்த குணங்களில் அபரிக்கிரகம் ஒன்று.

"ஸந்தோஷம்" என்றால் திருப்தியைக் குறிக்கிறது என்ன கிடைத்தாலும் திருப்தியில்லாதவனுக்கு ஸந்தோஷமுண்டாகாது. ஸதா வியஸனமே அவன் மனதிற் குடிகொண்டிருக்கும். அதிருப்தியால் மனம் நலிந்து போவதால் அது யோகத்துக்கு விரோதமான துர்க்குணம்.

"அஹிம்ஸை" இதைவிட உத்தமமான குணம் வேறொன்றில்லை. யாருக்கும் தீங்குசெய்யாமலிருப்பது, மனதுக்கு ஸமாதான

நிலைமையை யுண்டாக்கும். அந்நிலைமையால் அநேக ஸாதகங்களுண்டாகும். பகவானை தியானஞ் செய்யும்போது மனக்கவலையின்றியிருத்தல் அவசியமாகையாலும் பகவானது கருணையையடைவதற்காக நாம்பிறரிடம் கருணைபாராட்டுவது முக்கியமாகையாலும் கருணையென்பது அஹிம்ஸையால் விளங்குமாகையாலும் அஹிம்ஸையைச் சிறந்த குணமென்றோம்.

"தியானம்" செய்வதற்குத்தகுந்தஇடம்தேடவேண்டும். துஷ்டர்களிருக்கு மிடத்திலும்; எறும்புகள், பாச்சை, பல்லி, பாம்பு முதலியன ஸஞ்சரிக்கு மிடங்களிலும்; இலைகளுதிர்ந்து ஜலத்தால் நனைந்து அல்லது நெருப்பு பற்றியிருக்கு மிடங்களிலுமிருந்தும் தியானஞ் செய்யலாகாது. தேகம்இளைத்திருக்கும்போதும்மனது வியஸனத்தையாவது கவலையையாவது அடைந்திருக்கும்போதும் தேகஅஸௌக்கியம் உண்டானபோதும் தியானஞ் செய்யலாகாது அழுக்கடைந்த விடங்களிலும் நாலுபேர் நடக்கும் பாதைகளிலும் கூட்டங் கூடுமிடங்களிலும் தவம் செய்வது அயுக்தம்.எப்போதும் ஏகாந்தமான விடத்தில் யாதொரு கவலையும் இடையூறு மின்றி சுத்தமாக விருந்து தர்ப்பாஸனத்தில் அல்லது மான்றோல், புலித்தோல் முதலியவைகளில் உட்கார்ந்து பகவானை தியானிக்கவேண்டுமென்று பெரியோர் கூறுகின்றனர்.

"நீத்தார் பெருமை" இன்னதென்று நாலடியார்முதலிய நூல்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. "காஷாயதண்ட மாத்ரேணயதி: பூஜ்யோநஸம்சய" என்ற ஓர் வாக்கியமிருக்கிறது. எவன் காஷாய வஸ்திரத்தை தரித்து கையில் தண்டத்துடன் வருகிறானோ அவனை ஸந்யாஸி யென்றுணர்ந்து பூஜிக்கவேண்டும். இதில் கொஞ்சமேனும் ஸம்சயம் கொள்ளலாகாது என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். ஆதலின் ஸந்யாஸ ஆசிரமமானது பரமசிலாக்கியமே. இதைப்பற்றிய ஓர் சிறுகதையை அடியில் வரைகிறோம். காராளபுரியென்றவூரில் கங்கபட்டர் என்ற ஓர் பிராமணரிருந்தார்.இவர் எப்போதுஞ் சிவனடியார்களைப் பூஜித்துக்கொண்டிருப்பார். ஒரு சமயம் இவருடைய வீட்டுப் புறக்கடையிலுள்ள சிலாக்கியமான மாமரத்தில் ஓர் திருடன்ஏறிப்பழம் பறித்துக்கொண் டிருந்தான். அப்போது விடிய ஐந்துநாழிகையிருக்கும். அந்த மாமரத்தில்முயிற்றெறும்புகள் விசேஷமாயிருந்ததால் அவற்றின் உபத்திரவ நிவர்த்திக்காகத் திருடன் தன் தேகமெல்லாம் சாம்பலைப் பூசிக்கொண்டேறினான். கங்கப்பட்டர் புறக்கடையில் ஒரு காரியமாக வந்

தனைக் கள்ளன் கண்டு பயந்து மரத்திலிருந்து குதித்தான். அவன் சாம்பலைப் பூசிக்கொண்டெதிர் நின்றதை யறிந்து பெரியசிவயோகியென்று நினைத்து ஸாஷ்டாங்கமாக அவன் காலில் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று "ஸ்வாமி தங்களுடைய தரிசனத்தால் என் ஜென்மமீடேறிற்" றென்றார். திருடனுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. அடடா நமக்கு நல்ல அடி கிடைக்கு மென்றெண்ணிப்பயந்திருந்தோம். ஸர்வோபசாரங்களும் நடக்கின்றன. இதற்குக்காரணம் நாம் சாம்பலைப் பூசிக்கொண்டதன்றோ? சாம்பலுக்கு இத்தனை மகிமையிருக்கும்போது விபூதியைத் தரித்த உண்மையான யோகிகளின் மகிமையை அளவிட்டுச் சொல்ல யாரால் முடியும்? சீ, இனி திருட்டுத்தொழிலை விட்டுவிடவேணுமென்று தனக்குள் நிச்சயித்து அன்று முதல் எல்லாவற்றையுந் துறந்து யோகியானான்.

ஓர்ஸந்யாஸி தம்முடைய கௌபீனத்தை மடத்திலுள்ளஎலி கடித்துவிடுகிறதென்றும அதற்குப் பரிகாரம் செய்யவேண்டுமென்றும் ஆலோசித்தார். பூனை வளர்க்கலாமென்று தோன்றியது உடனே ஓர் பூனைக் குட்டியை ஸம்பாதித்து மடத்தில் வைத்துக் கொண்டார். அதற்கு பால் அவசியமாயிருந்ததால் ஓர் பசுவாங்கினார். அப்பசுவை மேய்த்துக்கட்ட ஓர் மாட்டுக்காரனை நேமித்தார். அவனுக்கு ஓர் பெண்ணைக் கலியாணஞ் செய்விக்கநேர்ந்தது. அதன் பிரயோஜனமாக ஓர் குழந்தை பிறந்து அது ஸன்னியாஸிகள் ஜெபம் செய்துகொண்டிருக்கையில் அவர் மடியில் "தாதா" வென்று சொல்லிக்கொண்டே ஏறி சிறுநீர் விட்டது. தக்ஷணமே ஜெபத்துக்கு பங்கமுண்டாகி அடடா இதென்ன கஷ்டம், இந்தக் குழந்தையேதென்றுயோசித்தார். உடனேகௌபீன ஸம்ரக்ஷணார்த்தம் இந்த கஷ்டமெல்லாம் உண்டாகி குடும்ப விசாரம் சேர்ந்தது. மறுபடியும் கிரகஸ்தாசிரமம் வந்ததென்றறிந்து கௌபீனத்தை யிழந்து அவதூத சன்யாசியாக ஆனார். இதனால் அற்பபொருளிலும் அபிமானம் வைக்கலாகாதென்றும் அபிமானம் வைத்தால் குடும்ப பாசத்திற் கட்டுப்படவேண்டுமென்றும் அறிந்துகொள்ளுகிறோம்.

எரிகரும்பில்லாத நெருப்பு எப்படி ஸ்வகாரணமான காற்றில் லயமாகின்றதோ அப்படி விருத்திகள் நசித்துநிற்கும் மனது ஸ்வகாரணமான பரமாத்மாவி லொடுங்குகின்றது. சித்தமென்னும் விருக்ஷம் விருத்திகளென்னப்பட்ட கொடிகளால் சூழப்பட்டதாயிருக்கின்றது. இது இரண்டு பீஜங்களையுடையது. ஒன்று பிரா

ணவாயுவின் அசைவு. இரண்டாவது அசக்கக்கூடாதவாசனை. வாசனையினால் பிராணபந்தமும், பிராணபந்தத்தினால் வாசனைகளும் பிரவர்த்திக்கின்றன. இது சித்தபீஜத்திற்கு பீஜாங்குர நியாயமாகும். என்றாலொன்றினாலொன்று பிறந்துகொண்டிருப்பதாயாகும். மேல்சொல்லிய இரண்டு பீஜங்களான பிராணபந்தம் வாசனை இவைகளிலொன்று நசித்தால் மற்றொன்றுஉடனேநசிக்கின்றது.

கர்மானுஷ்டானங்களில் நான் செய்தேனென்னு மபிமானமும் பலாபேக்ஷையற்றிருப்பதும் சம்சாரபலங்களை யோசிக்காமலிருப்பதும், சரீர நிலையாமையை அடிக்கடி விசாரித்துக்கொண்டிருப்பதினாலும், வாசனாக்ஷயமாகின்றது. சப்தமுதலிய விஷயங்களை நிஜமென்றும் சுகமென்றும் நினைப்பதே சித்தமென்னப்படும். விடுவதற்குரியதுக்கங்களையும் பற்றுதற்குரிய சுகங்களையும் இணைப்பதை முழுதும் விட்டிருக்கும்பொழுது மனதுபிறப்பதில்லை. வாசனா சூனியத்தினால் மனது விஷயங்களை சிந்திக்காமலிருக்குமோ அப்பொழுது மேலான சாந்தியையுண்டாக்கும் அமனஸ்கமென்னும் கொள்கையுண்டானதென்று அறியவும். சித்தக்ஷயமில்லாதவனை பந்துமித்திர தருமுதலானவர்கள் பரமசாந்தமான மோக்ஷத்தைத்தர சக்தியுள்ளவர்களாவார்கள்.

முடிவில் சித்தநாசத்திற்கு சாதனங்கள் வேதாந்த விசாரணை சச்சங்கம் வாசனாக்ஷயம் பிராணவாயு நிரோதம் ஆனபடியால்ஹடயோக மாத்திரத்தினாலேயே மோக்ஷசாதனமென்று சொல்வதற்கில்லை, மனது மிகவும் சலனத்தையுடையது அதை அடக்க மிகவும் அசாத்தியம். இதற்கு சந்தேகமில்லை. ஆனபோதிலும் அப்பியாசத்தினாலேயும், வைராக்கியத்தினாலேயும், மனோநிக்கிரகம் செய்யப்படும், என்றால் ஹடயோகத்தினால் நிக்கிரகஞ்செய்யக்கூடாதாகிலும். மிருதுயோகத்தால் மனதை வசப்படுத்தக்கூடும். மேலும், சித்தத்தை பரமாத்மாவிடத்தில் அசையாமல் நிறுத்தி விஷயாந்தரங்களை எவ்வளவாகிலும் நினைக்கக் கூடாது. இப்படி நிக்கிரகிக்கப்பட சித்தமானது எப்பொழுது ஸுஷுப்தியில் லயமாகமாட்டாதோ, விஷயங்களில் விக்ஷேபமடையாதோ, கல்பிதபதார்த்தங்களினால் பிரகாசிக்கப்படாதோ அப்பொழுது பிரமஸ்வரூபமாய் சித்தம் விளங்கிற்றென்றறியவும்.

மேலும் பிரதிவாதிகளைவெல்ல இச்சைகொண்டவன் காவியாலங்கார தர்க்க வியாகர்ணங்களை யெப்பவு மப்பியசிப்பதுபோல்

முமுக்ஷுவானவன் தானான ஆத்மாவை எப்பொழுதும் விசாரித்துக்கொண்டிருப்பான். சுவர்க்கம் முதலிய லோகங்களின் போகேச்சையுடையவன் எப்படி சிரத்தையோடு ஜபயஞ்ஞாதிகளைச் செய்வானோ அப்படி விரும்புவோன் வேதத்தின் பொருளாகியும் ஆத்துமாவின் தன்னிடத்தில் விசுவாசமுடையவனாவான். மேலும் அவஸ்தாத்திரியங்களில் ஆத்துமாவொன்றே அரியத்தக்கதாகும். இப்படி விவேக கியானத்தால் அவஸ்தாதிரியங்களை வேறுபடுத்தி அறிந்த ஆத்துமாவுக்கு மறுபிறப்பில்லை.

நானென்னும் கியானத்திற்கும், நானென்னும் சப்தத்திற்கு மாதாரமாய் அந்தக்காரணோபாதிகமாகிய எந்த போதை யுண்டோ அந்தப்போதை "தத்துவமஸி" "என்னும் மஹா வாக்கியத்திலுள்ள துவம்" பதத்தால் சொல்லத் தகுந்ததாகும். மேலுமந்த பரமாத்மா, மாயோபாதிகனும் ஜகத்காரணனும் பரோக்ஷத்வதர்ம விசிஷ்டனுமாவான், இதுவே பரமாத்மாவுக்குத் தடஸ்தலக்ஷணமாகின்றது. மேலும் அந்தப் பரமாத்மா சத்யஞானாநந்த ஸ்வரூபனுவான். அப்பேர்க்கொத்த பரமாத்மாவானது "தத்துவமஸி" யென்னும் மஹாவாக்கியத்திலுள்ள "தத்" பதத்தால் சொல்லப்படுவானென்று மறியவேணும்.

இதுவரையிலும் பலவித விஷயங்களைக்கூறி இராஜயோக லக்ஷணத்தையும் விவரித்தோம். 1-வது யோகசாதனம் செய்வதால் சரீரத்தில் உபாதிகள் பீடிக்காது. 2-வ யோகத்தில் சிரத்தையுள்ள மனிதர்கள் கர்மானுஷ்டானங்களை சரிவரச் செய்வார்கள். புத்தி விஷயாதிகளில் செல்லாமல் மனம் ஸ்வாதீனத்தில் வசப்படும் ஆகையினால் தான் யோகம் விசேஷமென்பதாகக் கூறினேம். யோகாப்யாசாதிகளில்லாமலே அநேக ஞானிகள் மோக்ஷமடைந்ததாய் தெரியவந்தபோதிலும் அது ஈஸ்வர ஸங்கல்பமும் விட்டகுறை தொட்ட குறையாலானதாகவும் இருக்குமானதால், சுருக்கமாக ஒரே வார்த்தையில் சொல்லப் புகின் மனம் பகவானிடம் நன்றாகப்பற்றி யிருப்பதே பக்தியென்னப்படும். அதுவே ஞானயோகம். ஞானயோகத்தைதான் பண்டிதர்களும் பாமார்களும் அப்பியஸித்து மோக்ஷமடையலாம்.

ஓம்தத்ஸத்.

தத்துவதரிசனி முற்றிற்று.